# பதிப்புரை

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், உலகநீதி, வெற்றிவேற்கை, மூதுரை, நல்வழி, நன்னெறி முதலிய ஏழு நூல்களையும் பதவுரை, விளக்க வுரைகளுடன் ஒருசேரக் கட்டடஞ் செய்து நீதி நூற்கோத்து முதற்பாகமாக வெளியிட்டுள்ளோம்.

இப்போது நீதிவெண்பா, முனைப்பாடியார் இயற்றிய அறநெறிச்சாரம், குமரகுருபர சுவாமிகள் இயற்றிய நீதிநெறிவிளக்கம் ஆகிய மூன்று நீதி நூல்களையும் பதவுரை விளக்க வுரைகளுடன் நீதி நூற்கோத்து இரண்டாம் பாகமாக வெளியிடு கின்றோம்.

இதன் கணடங்கிய நீதிவெண்பாவுக்கும், நீதி நெறி விளக்கத்துக்கும் விருத்தியுரையும், இது காறும் உரை எழுதப்படாதிருந்த அறநெறிச்சாரத் துக்குப் பதவுரையும், விளக்கவுரையும் எழுதிச் சேர்க்கப் பெற்றிருப்பதால், தமிழ் மக்கள் இந் நூலை வாங்கிப் போற்றிப் பயிலுவார்களாக!

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

கழக வெளியீடு -- ௬௬

உ

திருச்சிற்றம்பலம்

# நீதிவெண்பா



பல்லாவரம்

ஸ்ரீலஸ்ரீ சுவாமி வேதாசலமவர்கள்

மாணவரும்

கழகத் தமிழ்ப்புலவருமாகிய

திரு. T. S. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்

எழுதிய

உரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை.

விபவ௵ ஆடி௴

Published by

*The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Limited*
*Tinnevelly & Madras*
*July, 1928*

Printed by

*O. Munisawmy Mudaliar & Sons,*
*2/17, Coral Merchant St., Madras*

# முகவுரை

‘நீதிவெண்பா’ வென்னும் பெயரினாலேயே இந்நூல் வெண்பா யாப்பினா லியற்றப்பட்டிருக்கின்ற தென்பதும். அவைதாம் ‘நீதி’களை உணர்த்துகின்றன வென்பதுந் தெளிவாகின்றன.

இதனை இயற்றினா ரின்னாரென்பது தெரியவில்லை. இந்நூலின் முதலிலிருந்து கடைசி வரையில் இடையிடையே பதினொரு பாட்டுகட்குத் தூய தனித்தமிழ்ச் சொற்களாலான செய்யுட்களும் (௧௪, ௧௫, ௨௪, ௩௫, ௩௯, ௪௯, ௫௯, ௭௪, ௭௯, ௭௭, ௮௯), ஏனைய அவற்றிற்கு மாறாக நிரம்பிய வடசொற் கலப்பினாலான செய்யுட்களும் விரவிக் காணப்படுகின்றமையாலும், முன்னுணர்த்தப்பட்ட நீதிகளே பின்னும் வருகின்றமையாலும் (௪௰, ௫௰), எவ்வெச் செய்யுட்களை அடுத்து நிற்றல்வேண்டுமோ அவ்வவை தம்மை அடுத்து நில்லாது சிதறுண்டனபோலச் சில செய்யுட்கள் ஆங்காங்கும் இயைபின்றியே நிற்கின்றமையாலும் (௩௪, ௩௭), சில பாட்டுக்கள் அழகிய அரிய சொற்களாலும் இனிய எளிய நடையினாலும் அரும்பெரும் நுட்பக்கருத்துக்களை உணர்த்தா நிற்ப (௩௭, ௫௨, ௭௨) ஏனைய அவற்றிற்கு மாறான சொற்களாலும் நடையினாலும் உணர்த்துகின்றமையாலும், சில பழங்காலச் செய்யுட் போக்கினையும் (௨௯, ௪௪) சில பிற்காலச் செய்யுட்போக்கினையுந் தழுவி நிற்கின்றமையாலும், சில அடர்ந்து நிரம்பிய கருத்துடையவாயும் (௩௫, ௩௭) மற்றுஞ் சில அம்முறையிலிலவாயு மிருக்கின்றமையாலும், இன்னும் இன்னபல ஏதுக்களாலும் இந்நூல் ஓராசிரியரா லியற்றப்படாது யாரோ ஒருவராற் றொகுக்கப்பட்ட தொகை நூலாகுமோ வென்னும் ஐயமுந் தோன்றுகின்றது. இதன் காப்புச் செய்யுள்,

“மூதுணர்ந்தோ ரோதுசில மூதுரையைப் பேதையேனா
நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன்”

என்று கூறுதலும், அதற்கேற்பவே இந்நூல் தானெடுத்துக் கொண்ட ‘நீதி’களை ஒரொழுங்கான முறையின் நின்று

உணர்த்தாமையும் அவ் வையத்தினை மேலும் வளர்ப்பன வாயிருக்கின்றன. இனி, இந் நூன்முழுதுஞ் சைவ சமயமே உயர்த்தப்பட்டு நிற்பதும் (௫௮, ௪௰௫, ௪௭), சமணம் இழிக்கப்பட்டு நிற்பதும் (௨௰), இன்ன சிலவும் ஓராசிரியரியல்பினைக் காட்டுகின்றமையின், அவை அவ்வையக் கோட்பாட்டிற்கு எதிராவனவாகும். எனினும், அவ்வியல்பு தொகுத்தோர் மேலுஞ் செல்லுமாதலானும், ஏனைப் பல ஏதுக்களைநோக்க இன்ன சில சிற்றேதுக்களே யாதலானும் இவ்வீரோரேதுக்களைக்கொண்டு அவ்வையங் கழலுமாறில்லையென்க.

இனி இதன்கட் காணப்படுஞ் செய்யுட்களும், அவற்றானுணர்த்தப்படும் அறிவுரைகளுஞ் சிறு பிள்ளைகள் முதல் எத்திறத்தவருங் கற்றுணர்தற் குரியவையாயிருக்கின்றன. இதன் ௰௭, ௰௬, ௰௧-ம் செய்யுட்களில் உவமைத்திறனும், ௭௨-ஞ் செய்யுளில் உருவகத்திறனும் அழகும் நுட்பமும் பொருந்த அமைந்திருக்கின்றன. ௪௰-ஞ் செய்யுளில், 'தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க' லென்னுந் திருவள்ளுவனார் திருமொழியும் எடுத்தாளப்பட்டிருக்கின்றது. சிறு பிள்ளைகளுந் தம் பருவத்திற்கேற்ற ஒழுக்கங்களை அறிந்து தமது நடையிலுங் கொண்டுவருதற் கேற்ற 'நீதி'கள் இந்நூலில் நிரம்பியிருத்தலால், இது பள்ளிக்கூடங்களிலும் பாடமாக வைக்கப்படுகின்றது.

இந்நூலுக்கு வேறு உரைகளிருந்தாலும், தெளிவான பதவுரை கருத்துரைகளோடு அவற்றின்கண் இல்லாத விளக்க உரை நுட்பங்கள் பலவும் இதன்கண் எளிதான நடையில் எழுதிச் சேர்க்கப்பட்டிருத்தலாலும், 'நீதி' நூல்களின் விளக்கவுரைகளெல்லாம் பெரும்பாலும் 'நீதி'யைப் பற்றியவாகவே யிருத்தல்வேண்டு மென்னும் முதன்மை நோக்கம்பற்றி அவ் விளக்கவுரைதானும் எழுதப்பட்டிருத்தலாலும் இவ்வுரை வெளிவரல் இன்றியமையாததாயிற்று.

இளவழகனார்.

திருச்சிற்றம்பலம்

# நீதிவெண்பா

## மூலமும் உரையும்

### காப்பு

மூதுணர்ந்தோ ரோதுசில மூதுரையைப் பேதையேன்
நீதிவெண்பா வாக நிகழ்த்துவேன்—ஆதிபரன்
வாமான் கருணை மணியுதரம் பூத்தமுதற்
கோமான் பெருங்கருணை கொண்டு.

(இதன்பொருள்) ஆதிபரன் - முழுமுதற் கடவுளாகிய சிவபிரானுடைய, வாமம் மான் - இடது பாகத்தில் உள்ள உமையம்மையார், கருணை - அருளினாலே, மணி உதரம் - தமது அழகிய திருவயிற்றில், பூத்த - தோற்றிய, முதல் கோமான் - முதற் பிள்ளையாகிய பிள்ளையாரின், பெரும் கருணைகொண்டு - பேரருளைத் துணையாகக் கொண்டு, மூதுணர்ந்தோர் - பேரறிவாளர்கள், ஓது - சொல்லிய, சில மூதுரையை - சில அறிவு மொழிகளை, பேதையேன் - அறிவில்லாதவனாகிய யான், நீதிவெண்பா ஆக - 'நீதி வெண்பா' என்னும் நூலாக, நிகழ்த்துவேன் - செய்வேன்.

(இதன் கருத்து) யான் 'நீதிவெண்பா' நூல் செய்தற்கு முழு முதற்கடவுள் துணை என்பது.

இவற்றின் வாமம் என்பது வாம் என நின்றது இடைக்குறை. இது கடவுள் வணக்கச் செய்யுள்.

## நூல்

தாமரைபொன் முத்துச் சவரங்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வா—தாமழன்மற்
றெங்கே பிறந்தாலு மெள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலு மென்.

(இ - ள்.) தாமரை - தாமரைப்பூவும், பொன் - பொன்னும், முத்து - முத்தும், சவரம் - சாமரையும், கோரோசனை - கோரோசனையும், பால் - பாலும், பூ - அழகிய, மரு - மணமுள்ள, தேன் - தேனும், பட்டு - பட்டும், புனுகு - புனுகும், சவ்வாது - சவ்வாதும், ஆம் அழல் - எரியும் நெருப்பும், (ஆக இப்பதினொன்றும்) எங்கே பிறந்தாலும் - எவ்வளவு தாழ்ந்த இடங்களிலிருந்து கிடைத்தாலும், எள்ளார் - (அவைகளை உலகத்தார்) இகழ மாட்டார்கள்: ஆதலால், நல்லோர்கள் - நல்ல தன்மை யுடையவர்கள், எங்கே - எந்த இனத்திலே, பிறந்தாலும் - பிறந்திருந்தாலும், என் - அதனால் தாழ்வு என்ன? (தாழ்வில்லை என்பது.)

(க - து.) நல்லவர்கள் தாழ்ந்த குடியிற் பிறந்தாலும் அவர் உயர்ந்தவரே யாவார். அவரைத் தாழ்ந்தவரென்று நல்லவர்கள் இகழமாட்டார்கள்.

தாமரை, சேற்றில் விளையும். பொன், மண்ணிற் கிடக்கும். முத்து, கடலிலுள்ள சிப்பிப் பூச்சியிலிருந்து வெளிப்படுவது. சாமரம் ; ஒரு விலங்கின் மயிர்க்கற்றை. கோரோசனை, ஆவின்வயிற்

றில் அகப்படும். பால், ஆவின் மடியிலிருந்து ஒழுகும். தேன், கொழுப்படையிற் கசியும். பட்டு, ஒரு பூச்சியிலிருந்து வெளி வருவது; புனுகு, ஒருவகைப் பூனையின் அழுக்கு. அழல், தாழ்ந்த கட்டையிலிருந்து எழுந்தெரிவது. மற்று - ஏ - அசைகள். (க)

அரிமந் திரம்புகுந்தா லானை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம்—நரிநுழையில்
வாலுஞ் சிறிய மயிரெலும்புங் கர்த்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்.

(இ - ள்.) அரி - சிங்கத்தின், மந்திரம் - குகையினுள்ளே, புகுந்தால் - நுழைந்தால், ஆனை - ஆனையினுடைய, மருப்பும் - (விலையுள்ள உயர்ந்த பொருள்களான) கொம்பும் (தந்தம்), பெருகு ஒளி - மிகுந்த ஒளி, சேர் - உள்ள, முத்தும் - அக்கொம்பிலுள்ள முத்தும், பெறலாம் - கண்டெடுக்கலாம்; நரிநுழையில் - நரியிருக்கும் குழியில் (பார்த்தால்), சிறிய வாலும் - அறுந்துபோன வால்களும், மயிர் - குறுமயிர்களும், எலும்பும் - துண்டு துண்டான எலும்புகளும், கர்த்தபத்தின் - கழுதையின், தோலும் - கிழிந்த தோலும், அல்லால் - (ஆக இந்தத் தாழ்ந்த பொருள்கள்) தவிர, வேறும் - வேறு உயர்ந்த பொருள்களும், உண்டோ - அவ்விடத்தில் இருக்குமோ, சொல் - நீ சொல் பார்ப்போம்!

(க - து.) பெரியோரைச் சேர்ந்தால் உயர்வும், சிறியோரைச் சேர்ந்தால் இழிவும் உண்டாகும்.

சிறிய என்பது தாழ்ந்த என்னும் பொருளது. அதனை வால், மயிர், எலும்பு, தோல் என்பனவற்றோடு சேர்த்து உரைப்பினுமாம். உயர்வினால் சிங்கத்தின் குகை மந்திரம் எனப்பட்டது. (உ)

அறிவன் பகையேனு மன்புசேர் நட்பாஞ்
சிறுவன் பகையாஞ் செறிந்த—அறிவுடைய
வென்றி வனசரன்முன் வேதியனைக் காத்தான்முன்
கொன்றதொரு வேந்தைக் குரங்கு.

(இ - ள்.) முன்-முன்னொரு காலத்தில், செறிந்த - மிகுந்த, அறிவு - அறிவும், வென்றி - வெற்றியும், உடைய - உள்ள, வனசரன்-(பகைவனை) வேடன், வேதியனை - பார்ப்பனன் உயிரை, காத்தான் - காப்பாற்றினான், குரங்கு - ஒரு குரங்கு, ஒரு வேந்தை - ஓர் அரசனை, கொன்றது - (அறிவில்லாமையால்) கொன்று விட்டது, (அதுபோல) அறிவன் - அறிவுடையோர்கள், பகை ஏனும் - பகைவர்கள் ஆனாலும், அன்பு சேர் நட்பு - அன்போடு கூடிய நண்பனாக, ஆம் - ஆவார்கள், (ஆனால்) சிறுவன் - அறிவில்லாதவன், (நண்பனாயிருந்தாலும்) பகை - பகைவனாக, ஆம் - ஆய்விடுவான்.

(க - து.) அறிவில்லாதவர்களின் நட்பைவிட அறிவுடையவர்களின் பகைமை நல்லது.

பகை என்பது பகைவனைக் குறிப்பதுபோல நட்பு என்பது நண்பனைக் குறித்தது. வனசரன் - காட்டில் வாழ்பவன், அவன் வேடன். வெற்றி என்பது வென்றி என்று மெலிந்தது. வேந்தன் என்பது வேந்து எனக் கடை குறைந்தது. நட்பில் அன்பு சேர்ந்த நட்புதான் சிறந்த தென்பதற்கு 'அன்பு சேர் நட்பு' என்றார். அதாவது அறிவுடையோர்கள் ஒருவருக் கொருவர் ஏதாவது ஒன்று குறித்துப் பகைவர் போலானாலுந் தமக்குள் இருக்கும் அன்பையும் நண்பையும் விடமாட்டார்கள் என்றபடி. தான் - அசை.

வேடன் கதை

பார்ப்பனன் ஒருவன் ஓர் அரசனிடத்தில் ஒரு மாணிக்க

மணியைப் பெற்று, அதைக் கையில் வைத்துக்கொண்டால் திரு டர்கள் பிடுங்கிக் கொள்வார்களென்று நினைத்து வாயிற் போட்டு விழுங்கி விட்டான். பின்பொருகாற் கக்கி எடுத்துக்கொள்ளலா மென்பது அவன் எண்ணம். இதை யறிந்த வேடன் ஒருவன் அந் தப் பார்ப்பனன் தன் ஊருக்குப் போகும்பொழுது கூடவே போய் நடுக்காட்டு வழியில் அவனை மடக்கி 'உன் வயிற்றிலிருக்கும் மாணிக்கத்தைக் கக்கு' என்றான். பார்ப்பனன் மாணிக்கம் உன் வயிற்றில் தானே இருக்கிறது என்று வேடனைக் கேட்டான். இவர் கள் இப்படிச் சண்டை போட்டுக்கொண்டு இருக்கும்பொழுது திருடர்கள் வந்து பார்ப்பனனைப் பிடித்துக்கொண்டு மாணிக்கத் தைக் கக்கச் சொன்னார்கள். வேடன் அறிவுள்ளவன் ஆதலால் அவன் பகைவனானாலும் அந்தப் பார்ப்பனனிடத்தில் அன்பும் இரக்கமும் கொண்டு அவன் உயிரைக் காப்பாற்ற எண்ணித் திரு டர்களைப் பார்த்து, 'ஐயா, நாங்கள் வேடிக்கைக்குப் பேசிக் கொண்டோம். வயிற்றிலா மாணிக்கம் இருக்கும்! வேண்டுமானால் என் வயிற்றைக் கீறிப்பாருங்கள்' என்றான். திருடர்கள் வேடன் வயிற்றைக் கீறிப் பார்த்து மாணிக்கம் இல்லாதது கண்டு, 'ஆ, இவன் உயிரை வீணாகக் கொன்று விட்டோமே, இந்தப் பார்ப் பனனையாவது விட்டு விடுவோம்' என்றெண்ணி அவனை விட்டு விட்டார்கள். பார்ப்பனன் உயிர் பிழைத்தான். பார்ப்பனனுக்கு வேடன் முதலிற் பகைவனாயிருந்தாலும் அவன் அறிவுடையவ னாதலால் 'அன்பு சேர் நட்பையே' கொண்டான்.

குரங்கு கதை

அரசன் ஒருவன் தான் வளர்த்துவந்த குரங்கினிடத்திற் கத்தி யைக் கொடுத்து 'இங்கு யாரும் வராமற் பார்த்துக்கொள்' என்று சொல்லித் திட்டம் செய்துவிட்டுப் படுத்துக்கொண்டான். அவன் தூங்கும் பொழுது அவன் மேலே ஒரு ஈ வந்து உட்கார்ந்தது. அறிவில்லாத அக்குரங்கு பார்த்தது. அரசன் இந்த ஈயைக் கொல் லத்தான் கத்தி கொடுத்தான் என்று நினைத்து அந்த ஈயைக் கொல்லப் போயிற்று. ஈ பறந்து விட்டது. அரசன் இருதுண்

டாக வெட்டுண்டான். அரசனுக்குக் குரங்கு நட்பானாலும் அறி வில்லாமையாற் பகைவன்போல் ஆய்விட்டது. (ந)

மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னாலிகழு மண்ணுலகம்—நன்மொழியை
ஓதுகுயி லேதங் குதவியது கர்த்தபந்தான்
எதபரா தஞ்செய்த தின்று.

(இ - ள்.) நன்மொழியை - (மெல்லிய குரலான) இனிய ஓசையை, ஓது - கூவுகின்ற, குயில் - குயிற் பறவை, ஏது உதவியது-என்ன கொடுத்துவிட்டது, (இன்று)- எதுவும் இல்லை, (அல்லது) கர்த்தபம் - அருவருக்கும்படி ஓசைபோடும் கழுதை, ஏது அபராதம் செய்தது - என்ன கெடுதி செய்து விட்டது, இன்று - எதுவும் இல்லை; (அவ்வாறிருக்கக் குயிலைமட்டும் உலகம் விரும்புவதேன்? அதன் மெல்லிய இனிய ஓசையினாலல்லவா?) ஆகவேதான், சகம்- உலகம், மென் - மெல்லிய, மதுரவாக்கால் - இன்சொல்லால், விரும்பும் - யாரையும் விரும்பி மகிழ்கின்றது, மண்ணுலகம் - இன் சொல்லால் மகிழ்ந்த இவ்வுலகம், கடின - கொடுமையான, வன்மொழியினால் - வலிய சொல்லால், இகழும் - (எவரையும்) அருவருத்துப் பேசுகின்றது.

(க - து.) இனிமையாகவே பேசவேண்டும் என்பது.

ஓசையால் மெலிந்து பொருளால் இனித்து ஒழுகும் சொல்லை 'மென் மதுரவாக்கு' என்றார். அவ்வாறே அவற்றால் உரத்துங் கைத்தும் எழும் மொழியைக் 'கடின வன்மொழி' என்றார். குயிலுங் கழுதையும் ஏதும் நன்மையாவது தீமையாவது செய்யாதிருக்கும்பொழுதே, அவ்விரண்டினுள் ஒன்றினிடத்தில் விருப்பமும் மற்றொன்றினிடத்தில் வெறுப்பும் உலகத்துக்கு உண்டாவது குயில் இன்னோசை தருவதாலும் கழுதை வல்லோசை தருவதாலுமே

யென்க. இன்சொல்லும் வன்சொல்லும் உலகத்துக்கு மகிழ்ச்சி யும் அருவருப்புந் தரும் உண்மையை "இன்சொலால் அன்றி இரு நீர் வியனுலகம் வன்சொலால் என்றும் மகிழாதே" என்னும் அருள் மொழியும் எடுத்துரைப்பது காண்க. இச்செய்யுளில் சகம் என்று முதலிற் பொதுவாகவும், பின்பு மண்ணுலகம் என்று சிறப்பாகவும் கூறினமையால், இன்சொல்லால் நல்லவருந் தீயவரும் உள்ள மேல் கீழான எல்லா உலகங்களும் மகிழ்வடையுமென்றும், தேவ ருலகம் வன்சொல்லால் மகிழாது நிற்குமேயன்றி அவ்வன்சொல் லையும் அவ்வன்சொல் பயப்பாரையும் இகழமாட்டாது. ஆனால் மண்ணுலகம் அங்ஙனம் வாளாவிராது இகழ்தலைச் செய்யும் என் றும் பெறப்படும்.

"நாவின் நுனியில் நயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார் - நாவினுனி
ஆம் கடினமாகில் அத்திருவுஞ் சேராள்முன்
ஆங்கே வருமரண மாம்"

என்று இந்நூலிற் பின்னும் வருதல் அறிக. (அ)

பகைசேரு மெண்ணான்கு பற்கொண்டே நன்னா
வகைசேர் சுவையருந்து மாபோற்—றொகைசேர்
பகைவரிட மெய்யன்பு பாவித் தவராற்
சுகமுறுத னல்லோர் தொழில்.

(இ - ள்.) நல் நா - நல்ல நாக்கு, பகை சேரும் - தனக்குப் பகையான, எண்ணான்கு பல் கொண்டே - முப் பத்திரண்டு பற்களைத் துணையாகக் கொண்டே, வகைசேர் சுவை - பலவகையான சுவைகளையும், அருந்து மாபோல் - சுவைப்பதுபோல, தொகைசேர் பகைவரிடம் - பகைவர் பலராயினும் அவர்களிடம், மெய் அன்பு - உண்மையான அன்பையே, பாவித்து - வைத்து, அவரால் - அப்பகை

வர்களால் சுகம் உறுதல் - பலவகையான இன்பங்களையும் அடைதல், நல்லோர் தொழில் - நல்லவர்களின் செய்கை.

(க - து.) நல்லவர்கள் பகைவரிடத்திலும் அன்புகொள்வார்கள்.

பற்கள் நாக்கைச் சிலவேளைகளிற் கடித்துவிடுவதால், நாக்குக்குப் பற்கள் பகையாயின. (௫)

காந்தனில் லாத கனங்குழலாள் பொற்பவமாஞ்
சாந்தகுண மில்லார் தவமவமாம்—ஏந்திழையே
அன்னையில்லாப் பிள்ளை யிருப்ப தவமவமே
துன்னெயிறில் லாரூண் சுவை.

(இ - ள்.) ஏந்து இழையே - மணிகளால் இழைக்கப்பட்ட நகைகளை யணிந்துள்ள பெண்ணே, காந்தன் இல்லாத - கணவன் இல்லாத, கனம் குழலாள் - பளுவான கூந்தலை உடைய பெண்மகளின், பொற்பு - அழகு, அவம் ஆம் - வீண் ஆகும்: அன்னையில்லா - தாயில்லாத, பிள்ளை - குழந்தை, இருப்பது - இன்னொருவரை எதிர்பார்த்துப் பிழைத்திருப்பது, அவம் (ஆம்) - வீண் ஆகும்: துன் - நெருக்கமான, எயிறு - பற்கள், இல்லார் - இல்லாதவர்கள் உண்ணும், ஊண்சுவை - உணவின் சுவை, அவம்ஆம் - வீண்ஆகும். (அதுபோல) சாந்தகுணம் - பொறுமையான பண்பு, இல்லார் - இல்லாத பேரறிஞரின், தவம் - இறைவன் வழிபாடு, அவம் ஆம் - வீணாகும்: அவ்வழிபாடு செய்தும் பயனில்லையென்றபடி.

(க - து.) பொறுமையில்லாது தவமுயற்சியில் நின்று கடவுள் வணக்கஞ் செய்வதில் ஏதும் பயனில்லை.

இச்செய்யுளில் 'சாந்தகுணமில்லார் தவம் அவமாம்' என்பது உவமேயம். மற்ற மூன்று கருத்துக்களும் உவமைகள். ஏனென்றால் இறைவனை வணங்குதற்குப் பொறுமைத் தன்மையே இன்றியமையாததென்னும் இதுவே, அறியக்கூடியதாம் ஆதலானும் என்க.

இவ்வாறு உவமைகளையும் கருத்தொடு படுத்துக் கூறுவது பாட்டியல் வழக்கு. இம்முறை பின்னும் வரும் இந்நூல் உஎ, உஅ-வது செய்யுட்களிற் காண்க.

"கல்லாத மாந்தர்க்குக் கற்றுணர்ந்தார் சொற்கூற்றம்
அல்லாத மாந்தர்க்கு அறங்கூற்றம் - மெல்லிய
வாழைக்குத் தானீன்ற காய்கூற்றம் கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண்"

என்னும் மூதுரைச் செய்யுளும் இவ்வழக்குண்மையைத் தெளியக் காட்டும். அதன்கண் ஒன்று உவமானமாகவும் மற்ற மூன்று கருத்துக்களும் உவமேயமாகவும் வந்தமைபோல இதன்கண்ணும் மூன்று கருத்துக்கள் உவமானங்களாகவும் ஒன்று உவமேயமாகவும் வந்தன. இன்னும் அடுத்தபாட்டு முற்றுவமையாகவே வருவது காண்க.

கனம் குழல் என்றது, நெய்யணிந்து நீண்டு அடர்ந்து சுருண்டு அசையும் கூந்தலை. பொற்பு என்றது, இங்கு இளமையைக் குறித்தது. இழை ஏந்தினள் என்றால் இழையைத் தாங்கினள் என்பது. அதாவது அத்துணைச் சுமையான மிகுந்த நகைகள் அணிந்து கொள்ளப்பட்டன என்க. மிகுந்த இழைகளை அணிந்து கொண்டவளே என்பது பொருள். விளங்கிய இழைகளை அணிந்துகொண்டவ ளென்றலுமாம். பிள்ளை என்றது பாலுண்ணும் பச்சைக் குழந்தையை. ஏனென்றால் அத்தகைய தொன்றே தன் தாயின் உதவியின்றி உயிர் வாழ முடியாததும் அங்ஙனம் தப்பிப்பிழைத்து உயிர்வாழினும் நோயுந் துன்பமுமின்றி வாழுதல் அரிதாதலுமாம் ஆதலால் என்க. நெருங்கிய

பற்கள் இல்லாதவர்கள் வாயிலிடும் பண்டத்தை முழுதும் மெல்ல முடியாமல் அப்படியே விழுங்கி விடுவார்கள். அங்ஙனம் அரை குறையாய் மென்று விழுங்குதலால் நன்ருய் மென்று சுவைப்பதாலாம் இன்பத்தை அவர் பெறமுடியாதுபோம். அம்முடியாமையே இங்குக் குறிக்கப்பட்டது. ஆம் என்னும் சொல்லை மற்றவற்றிற்கும் கூட்டுக. ஏ - அசை. (சு)

வருத்தவளை வேயரசர் மாமுடியின் மேலாம்
வருத்த வளையாத மூங்கில்—தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாந்திரிந்து
தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான்.

(இ - ள்.) வருத்த - தன்னைப் பிறர்வளைத்து வருத்தப்படுத்த, வளை - மிகவருந்தி வளைந்த, வேய் - மூங்கில்தண்டு, அரசர் - உலகத்துக்கே தலைவனான அரசரின், மா - பெருமைபெற்ற, முடியின் - தலைமுடியின், மேல்ஆம் - மேலாய் இருக்கும், வருத்த - அங்ஙனம் வளைத்து வருத்த, வளையாத - வளையாது நிமிர்ந்தே நின்ற, மூங்கில் - மூங்கிற்கொம்பு, தரித்திரமாய்-கீழ்மையுடையதாய், வேழம்பர் - கழைக் கூத்தாடிகளின், கைப்புகுந்து - கையிலகப்பட்டு, மேதினி எல்லாம் - உலகமெல்லாம், திரிந்து-சுற்றிச் சுற்றி அலைந்து, அவர்தம் - அவருடைய, அடிக்கீழ் - காலின்கீழே, தாழும் - கிடந்து இழிவடையும். தான் - அசை.

(க - து.) இளமையிலேயே கற்றுக்கொண்டால் பெருமையும் கல்லாவிட்டால் சிறுமையும் வரும்.

இச்செய்யுள் முழுதும் உவமையாக உள்ளது. உவமேயம் இதன்கண் எஞ்சி நின்றது. அது : இளமையிலேயே தந்தையாரும் ஆசிரியரும் வற்புறுத்துப் படிக்கவைக்க அப்பொழுது நன்ருய்ப்

படித்துக்கொண்ட பிள்ளைகள் அரசனும் போற்றும்படி பெருமை யடைவார்கள். அப்பொழுது உடம்பு வளர்ந்து படித்துக்கொள்ள மாட்டாத பிள்ளைகள் குடிக்கக் கஞ்சியுங் கட்டத் துணியும் அற்று ஊர் ஊராய் அலைந்து திரிந்து கீழ்மக்களின் வேலைகளைச் செய்து கொண்டு அவர் காலால் உதைபட்டுக்கிடப்பர் என்பது.

வளர்ந்த மூங்கில் அரசர் முடியில் இருப்பதை, அவர் ஏறி வரும் பல்லக்கின்மேற் காண்க. வளையாது கூத்தர் கைப்பட்ட மூங்கிலுக்கு வந்த வறுமையாவது, அழகு செய்யப்படாது, வெயி லாலுலர்ந்து மழையால் நனைந்து தரையிற்கிடந்து தட்டுண்டுகிடப் பது முதலியன. கூத்தாடியின் கைப்பட்ட மூங்கில் வேறு நல் வினைக்குப் பயன்படாது போதலின் கைப்புகுந்து என்றார். மூங்கி லுக்கு வளைதல் அது குருத்தாயிருக்குங் காலத்திலாதலால், உவ மேயத்திலும் இளமை என்று கொள்ளப்பட்டது. (எ)

நொய்தாந் திரணத்தி னொய்தாகும் வெண்பஞ்சின்
நொய்தா மிரப்போ னுவலுங்கால்—நொய்யசிறு
பஞ்சுதனி னொய்யானைப் பற்றாதோ காற்றனுக
அஞ்சுமவன் கேட்ப தறிந்து.

(இ - ள்.) நுவலுங்கால் - சொல்லும் பொழுது, இரப் போன் - பிச்சையெடுப்பவன், நொய்து ஆம் - சிறிதான, திரணத்தின் - துரும்பைக்காட்டிலும், நொய்து ஆம் பஞ் சின் - இன்னும் இலேசான பஞ்சைவிட, நொய்து ஆம் - மிகவும் எளியவன் ஆவான். (அங்ஙனம்) நொய்ய சிறு பஞ்சுதனின் - மிகவும் நொய்தான சிறுபஞ்சைவிட, நொய் யானை - எளியவனான அவ்விரப்போனை, காற்று - வீசியடிக்குங் காற்று, பற்றாதோ - பற்றி அடித்துக் கொண்டு போகாதோ, (எனின்) காற்றும் - அக் காற்றுகூட, அவன் கேட்பது அறிந்து - அவ்விரப்போன்

ஒவ்வொருவரையுங் கேட்டுக்கொண்டிருத்தலைத் தெரிந்து கொண்டு, அணுக அஞ்சும் - (தன்னையும் ஏதாவது கேட்டு விடுவானோவென்று அவனிடம்) நெருங்குவதற்கே அச்சப் படும்.

(க - து.) பிச்சையெடுப்பது மிகவும் தாழ்ந்தது.

இதனால், இரப்பவனின் எளிமையும் ஏழைமையுங் கூறப்படுகின் றன. திரணத்தின் பஞ்சின் என்பவற்றின் எண்ணும்மைகள் தொக்கு நின்றன. துரும்பையும் பஞ்சையும்விட இரப்போன் எளியவன் என்றபடி. அல்லது உம்மை கொள்ளாமலே துரும்பைவிட நொய் தானது பஞ்சு அப்பஞ்சைவிட எளியவன் அவ்விரப்போன் என்று கூறுதலும் அமையும். 'வெண்பஞ்சின் நொய்தாம் இரப்போன், என்று கூறியதன்மேலும் 'நொய்யசிறுபஞ்சுதனின் நொய்யானை' என்று பின்னும் பின்னுங் கூறியதும் 'காற்றும் அணுக அஞ்சும் அவன் கேட்பதறிந்து' என்றதும் முறையே அவனுடைய ஏழை மை மிகுதியையும் இழிவு மிகுதியையும் விளக்குதற்பொருட்டு. அவன் யாதுகேட்டு விடுவானோ என்று காற்றே அஞ்சுமானால், மக்கள் அஞ்சுதலைப்பற்றிக் கூறல் வேண்டா. எனவே, எல்லாரும் இவ்வாறு அஞ்சி ஒதுங்கிவிடுவார்களானால், அவ்விரப்போன் துணை யற்றுத் தவிப்பான். அப்போது அவன் எளியனாதல் புலனாதல் காண்க என்பது. (அ)

ஒருபோது யோகியே யொண்டளிர்க்கை மாதே
இருபோது போகியே யென்ப—திரிபோது
ரோகியே நான்குபோ துண்பா னுடல்விட்டுப்
போகியே யென்று புகல்.

(இ - ள்.) ஒள் - ஒளியுள்ள, தளிர் - இலைக்கொழுந்து போலும், கை - கையையுடைய, மாதே - அழகுடைய பெண்ணே, யோகியே - தவம் செய்பவனே, ஒருபோது

(உண்பான்) - ஒருநாளில் ஒருபொழுது உண்பான்: போகியே - உலக இன்பங்களை நுகர்ந்துகொண் டிருப்பவனே, இருபோது (உண்பான்) - ஒருநாளின் இரண்டுமுறை உண்பான்: ரோகியே - நோயாளியே, திரி போது (உண்பான்) - ஒரு நாளில் மூன்றுவேளைகள் உண்பான்: உடல் விட்டுப் போகியே - உடலை விட்டு இறந்துபோகக் கூடியவனே, நான்கு போது உண்பான் - ஒருநாளில் நான்கு தடவைகள் உண்பவன், என்றுபுகல் - என்று சொல்.

(க - து.) ஒருவேளை இருவேளைக்குமேல் மூன்று வேளையும் நான்கு வேளையுமாக உண்ணலாகாது.

யோகியே போகியே என்பவற்றின் இரண்டு ஏகாரமும் அசைகள். ரோகியே போகியே என்பவற்றின் ஏகாரங்கள் தேற்றம். உண்பான் என்னும் வினையாலணையும் பெயரை மற்றவற்றோடும் ஒட்டுக. என்று என்பதனோடு உம்மைகூட்டி ரோகியே யென்றும் போகியே யென்றும் என ஒட்டிப் பொருளுரைத்தலு மொன்று.

இச்செய்யுளில் மூன்று போதும் நான்கு போதும் உண்ணல் கூடாதென்று மறுத்து ஒருபோதுண்பதைத் துறவறத்தார்க்கும் இருபோதுண்ணலை இல்லறத்தார்க்குமாக ஆசிரியர் எடுத்துக் கொண்டாரென்க. ஏனென்றால், முன்னிரண்டையும் பின்னிரண்டினின்றும் என்ப என்னும் இடைகொடுத்துப் பிரித்தாராதலான் என்பது. (க)

கண்ணிரண்டே யாவர்க்குங் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணுவிழி யேழாகு மீவோர்க்கு—நண்ணும்
அநந்தந் தவத்தா லருண்ஞானம் பெற்றோர்க்
கநந்தம் விழியென் றறி.

(க - து.) நல்ல இல்லாளொடு கூடி இல்வாழ்க்கையை நடத்தல் வேண்டும்.

நல்ல சுற்றத்தார் வினைவகையால் நேர்வராதலின் 'உற்ற பெருஞ் சுற்றம்' என்றார். அதாவது நாமே இப்பிறவி முயற்சியாற் சேர்த்துக் கொள்ளல் இயலாதென்பது. பெருஞ் சுற்றமென்றது நல்லதன்மைகளிற் பெருமைமிக்க உறவினரை. ஏனென்றால் அவருடைய பண்புகளே வாழ்க்கையாற்றைக் கடத்தற்கு உதவுமாகலின் வாழ்க்கையை இப்பாட்டில் ஆறாக உருவகப்படுத்தினார், நினைத்தாலும் நெஞ்சம் நீராம்படிப் பலப்பல இடுக்கண்களை இவ்வுலக வாழ்க்கை உடையதுபோலத் தன்கண் இறங்குவாரைத் துன்பத்துக் குள்ளாக்கிக் கடைசியிற் கொல்விக்கவுந் தக்க அலைகளும் சுழிகளும் அவற்றின் விரைவுகளும் பிறவும் ஆறு உடைத்தாதலின் என்க. இவ்வகையான நடுக்கமுடைய வாழ்க்கையைக் கடந்து மேம்படுவதற்கு உதவியாகப் பற்றத்தக்க நல்ல துணை நன்மனைவியேயாவள். மனைவியாவாளே, தன் கணவனுடைய எல்லாச் செய்திகளையும் மிக நெருங்கிப் பழகியறிந்து அவ்வறிதலால் அவன் இயல்புக்கும் ஆற்றலுக்கும் ஏற்ப இடனறிந்து இடுக்கண் களைந்து இன்பந்தருவள். அம்மனைவியும் நெஞ்சொத்தவளாயிருத்தல் வேண்டுமென்பார் 'நன்மனைவியென்று' அடையொடு சேர்த்துக் கூறினார். கணவனும் மனைவியுந் தமக்குள்ள ஒருமைப்பாட்டினாலேயே எடுத்த வேலையை முடிக்கப் பெறுதல் வேண்டுமென்பது,

> "காதன் மனையாளுங் காதலனும் மாறின்றித்
> தீதி லொருகருமம் செய்பவே"

என்னும் நன்னெறிச் செய்யுளாலுந் தெளியப்படும். மனைவி கணவனைப் பாதுகாக்குங் கடமையுடையவள் என்பது,

> "தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற
> சொற்காத்துச் சோர்விலாள் பெண்"

என்னுந் திருக்குறளிற் கண்டுகொள்க.

பொருள் முதலிய வேறுவகையாற் பற்றுதல் அப்பொருள் முதலிய வேறுவகைகள் குறைவுபட்டும் இல்லாதும் போகும்வழி கணவன் மனையர்க்குள் ஒற்றுமை கெட்டுத் துன்பம் விளையுமாதலின், அப்பொருள் முதலியவை இல்லாதபொழுதும் ஒற்றுமை நின்று இன்பந் தோன்றுதற்கு அன்பாற் பற்றுக வென்பார் 'பற்றி' என்றார். மனைவியை உடன் பற்றி என்று பொருள் கூறுவதுமொன்று. மிகவாழ்க என்றது, அன்பால் நெஞ்சமொத்த மனைவியொடு கூடிப் பெறத்தக்க எல்லாநலங்களையும் மிகவும் பெற்று நன்றாக வாழ்க என்பதற்கு. பசுவின் வால்பற்றி நதி கடத்தற்கு நன்மனைவியுடன் பற்றி மிகவாழ்தலே உவமேயமாதலின், நாயின் வால்பற்றி ஆறுகடத்தற்குத் தீய மனைவியை யுடன் பற்றி வாழ்தலும் உவமேயமாகக்கொள்க. ஆற்றைக் கடத்தற்குச் சிறிது முதவியாகாது அவ்வாற்றிற் கிடத்திக் கொல்விப்பதற்கே நாய் கருவியாதல் போல, நெஞ்சொத்தில்லாத தீய மனைவியரும் அன்பற்ற பொருட்பெண்டிரும் பிறரும் வாழ்க்கையைச் செம்மைப்படுத்து வீடுபேற் றின்பந் தருதற்கு உதவியாகாது அவ் வாழ்க்கையிற் பல இன்னல் விளைத்து இறப்பித்தற்கே இடஞ் செய்வார்.

"ஏமாந்த போழ்தின் இனியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடாம் - மானோக்கின்
தம்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார்" (பொதுமகளிர், அ)

"செம்மையொன் றின்றிச் சிறியார் இனத்தராய்க்
கொம்மை வரிமுலையாள் தோள்மரீஇ - உம்மை
வலியால் பிறர்மனைமேல் சென்றாரே இம்மை
அலியாகி ஆடிஉண் பார்" (பிறர்மனை நயவாமை,ரு)

என்பன நாலடியார். (கக)

ஆசைக் கடியா னகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியா னவானே—ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பா துலகந்
தனையடிமை கொண்டவனே தான்.

(இ - ள்.) ஆசைக்கு - அவாவுக்கு, அடியான் - அடிமைப்பட்டுக் கிடப்பவன், அகில லோகத்தினுக்கும் - எல்லா உலகங்களுக்கும், ஆசு - குற்றம், அற்ற - இல்லாத நல் - நல்ல, அடியான் ஆவானே - அடிமையாவான், ஆசை தனை - அவாவை, அடிமை கொண்டவனே - தனக்கு அடிமையாகக் கொண்டவனே, (அகில) உலகந்தனை - எல்லா உலகத்தையும், தப்பாது - தவறாமல், அடிமை கொண்டவனே (ஆவான்) - அடிமைப்படுத்திக்கொள்வான்.

(க - து.) அவா இல்லாதவன் உலகத்தை வெல்வான்.

ஏகாரங்கள் மூன்றிலும் நடு நின்றது பிரிநிலை. மற்ற இரண்டுந் தான் என்பதும் அசைகள். அகிலம் ஆவான் என்பவைகளைப் பின்னுங் கொள்க. ஆசைக்கு அடியான் என்றால், ஆசைபோனவழி யெல்லாந் தான் அடங்கி நடப்பவன் என்பது. ஆசை இறுதியில் துன்பத்தையே தருமாதலால், அதன் வழியே சென்றவன் அளவில்லாத துன்பங்களாற் சூழப்பட்டிருப்பான். துன்பம் நேர்ந்து மிகுந்தமையின் அதனை நீக்கிக்கொள்ளுதற்கு உலகத்தாரின் உதவியை நாடி அவரெல்லார்க்கும் அடிமையாய்க் கிடப்பானாதலின், 'ஆசைக்கு அடியான் அகில லோகத்தினுக்கும் அடியான்' என்றார். அவனை 'ஆசற்ற நல்ல அடியான்' என்றது, இழிப்புரை. அல்லது உள்ளபடியே பிறரை எதிர்பார்த்துக் கிடக்கும் அடியான் என்றுமாம். ஆசைதனை அடிமை கொண்டவன் என்றால் ஆசைவழித் தான் நடவாமல், தன்கண் ஆசையை எழவொட்டாதபடி அதை அடக்கி நிற்பவன் என்பது. அப்படிப்பட்ட

வனுக்கு இன்பமே வரும். அவ்வின்பத்தைப்பெற உலகத்தவ ரெல்லாம் இவனை நோக்கி அடிமை கிடப்பாராதலால், 'ஆசை தனை அடிமை கொண்டவன் தப்பாது உலகந்தனை அடிமை கொண்ட வன்' என்றார். பிறரை எதிர்பாராமையின் உலகத்தார்க்கு இவன் அடிமையாகான். உலகம் என்பது உலகத்திலுள்ள உயிர்களை. இன்பத்தை எல்லா உயிர்களுந் தப்பாது பெற விரும்புதலால் அவாக் கெட்டு இன்பமார்ந்து இருப்பவனுந் தப்பாது உலகந் தனை அடிமை கொண்டவனாவான். அவா துன்பந் தரும் என்ப தும், அவாவின்மை இன்பந் தருமென்பதும்

"அவா இல்லார்க்கு இல்லாகுந்துன்பம் அஃதுஉண்டேல்
தவாஅது மென்மேல் வரும்"

"இன்பம் இடையறாது ஈண்டும் அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்"

என்னுந் திருக்குறள்கள் கொண்டு அறிந்து கொள்க. (கஉ)

ஆனந் தணர்மகளி ரன்பாங் குழந்தைவதை
மானந் தரும்பிசி வார்த்தையிவை—மேனிரையே
கூறவரு பாவங் குறையாதொவ் வொன்றுக்கு
நூறதிக மென்றே நுவல்.

(இ - ள்.) ஆன் (வதை) - ஆக்கொலை, அந்தணர் (வதை) - பார்ப்பார் கொலை, மகளிர் (வதை)-பெண்கொலை, அன்பாம் குழந்தை (வதை) - அன்பு வடிவான குழந்தை களின் கொலை, மானம் தரும் பிசிவார்த்தை - இழிவைக் கொடுக்கும் பொய்யுரை, இவை - இவ்வைந்து தீமைகளை யும், மேல் நிரையே கூற - மேல் வரிசையாகச் சொல்ல, வரும் - அவற்றால் வரும், பாவம் - தீவினை, ஒவ்வொன் றுக்கு - ஒன்றுக்கொன்று, குறையாது-குறையாமல், நூறு-

னுறுபங்கு, அதிகம்-மிகுதியாம், என்றே நவல் - என்றே சொல்லு.

(க - து.) ஆன் அந்தணர் மகளிர் குழந்தை முதலியவர்கட்குத் தீமை செய்வதும், பொய் சொல்வதுங் கூடாது.

ஏ - தேற்றம். வதை என்பதை மற்றவற்றோடும் ஒட்டுக. பொய்யையும் மற்றத் தீமைகளையும் வேறு பிரித்தற்கு வதை என்பதை இறுதியிற் கொடுத்தார் ஆசிரியர். ஏனென்றால், பொய்யுரைத்தலால் வருந் தீவினை மற்றவற்றால் வருந் தீவினையைவிடப் பெரிதானமையின் என்க. இதனை ஆசிரியர், ஆன்வதை அந்தணர்வதை மகளிர்வதை குழந்தைவதை என்னும் நான்குந் தீவினை தருமென்றும் பொய்யுரைமட்டும் அத்தீவினை தருதலோடு மானமுந் தருமென்றுங் கூறுதல் காண்க. பெற்றோர் செலுத்தும் அன்பெல்லாந் தங்குதற்குத் தக்க இடமாயுள்ளது குழந்தையே யாதலால், 'அன்பாங் குழந்தை'என்றார். பொதுவாகக் குழந்தைகளைக் கொல்லுதல் தவறென்பதனோடு, அதனினுஞ் சிறப்பாக ஆன், அந்தணர், மகளிர் என்பாரையும் அவர்தங் குழந்தைகளான ஆன் கன்றுகள், பார்ப்பனப்பிள்ளைகள், பெண் குழந்தைகள் என்பவைகளையுங் கொல்லுதல் பெரிதும் ஏதமா மென்று குறித்தற்கு அன்பாம் என்னும் அடைகொடுத்தா ரென்றலு மொன்று. ஆன், அந்தணர், மகளிர் என்னும் சொற்கள் முறையே கன்றுடை ஆனையும்,அந்தண்மையுள்ள பார்ப்பாரையும், கற்புடைப்பெண்டிரையுஞ் சிறப்பாகவும் உணர்த்தும். வதை என்பது கொலையையே யன்றிச் சிறிது துன்பஞ்செய்தலையுங் குறிக்குமாதலின், அவர்க்கு அஃதுஞ் செய்யலாகா தென்க. துன்புறுத்துதற்குங் கொலை செய்தற்கும் இவர் தகாதவர் என்பது,

"பாய்எரி இந்தப் பதியூட்டப் பண்டேஓர்
ஏவல் உடையேனல் யார்பிழைப்பார் ஈங்குஎன்னப்
பார்ப்பார் அறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்

மூத்தோர் குழவி எனும்இவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்கஎன்று காய்த்திய
பொற்றொடி ஏவப் புகைஅழல் மண்டிற்றே
நல்தேரான் கூடல் நகர்" (வஞ்சனமாலை, ௫௪-௫௭)

என்னுஞ் சிலப்பதிகார அடிகளாலும் விளங்கும்.

மானம் என்றது இங்கு இழிவுப்பொருளில் வந்தது. ஆன் அந்தணர் மகளிர் குழந்தை என்பவர்களைக் கொல்லுதலைவிடப் பொய்யுரைத்தல் மிகக் கொடியது. (௧௩)

பெற்றமையு மென்னும் பெரியோரும் பெற்றபொருண்
மற்றமையு மென்றே மகிழ்வேந்து—முற்றியநன்
மானமிலா இல்லாளு மானமுறு வேசியரும்
ஈன முறுவா ரிவர்.

(இ - ள்.) பெற்று - பொருளைப்பெற்றிருந்து, அமையும் - இதுபோதும், என்னு - என்று நெஞ்சம் மகிழாத, பெரியோரும் - சான்றோர் எனப்படுவாரும், பெற்ற பொருள் - தாம் அடைந்த பொருளை, அமையும் என்று - போதுமென்று, மகிழ் - நெஞ்சம் மகிழும், வேந்தும் - அரசர்களும், முற்றிய-மிகுந்த, நல்-நல்ல, மானம்-நாணம், இலா - இல்லாத, இல்லாளும் - மனைவியும், மானம் - அந் நாணத்தை, உறும் - பெறுகின்ற, வேசியரும் - பொது மகளிரும், இவர் - ஆக இந் நால்வரும், ஈனம் உறுவார் - தாழ்வு அடைவார்.

(க - து.) பெற்றபொருளிலே பெரியோர்கள் அமைதி பெறுமையிலும், அதனை அரசன் வெறுப்பதிலும், இல்லாள் நாணமுறாமையிலும், வேசிகள் அதனைக் கொள்வதிலும் அவர்க்குத் தாழ்வேயன்றி உயர்வில்லை.

பொருள் வேண்டக்கூடாத பெரியோர் அதனை வேண்டினுற் குற்றமாதல் போலப், பொருளை மேன்மேலும் விரும்பிச் சேகரிக்க வேண்டிய அரசன் அதனை வேண்டாது வெறுத்தலுங் குற்றமா யிற்று; அதைப்போலவே இல்லாளுக்கும் வேசியர்க்கும் நாணத் தைக் கொள்க. இல்லாளுக்கும் வேசையர்க்கும் நாணம் வேண்டி யும் வேண்டாதும் நிற்றல் போலப், பெரியார்க்கும் அரசர்க்கும் பொருள் வேண்டாதும் வேண்டியும் நின்கின்ற தென்று இதற் கோருள்ளுறையுவமமுங் கூறுப. அதற்குப் பெரியோர் அரசர் இல்லாள் வேசியர் என்பன எதிர்நிரனிரையாகும்.

பெற்றபொருள் போதுமென்று செங்கோலரசன் அமைதி யுறுவனுயின் மிகுந்த பொருளால் உலகுக்குச் செய்ய வேண்டிய உயர்ந்த அறச்செயல்களை யெல்லாம் அவன் செய்யமாட்டா தவனுய்ப் போவனுதலாலும், மிகுந்த பொருள் இல்லாமையாற் பகையரசர்களால் வெல்லப்பட்டுத் தான் எண்ணிய எண்ணப்படி நாட்டுக்கு நலஞ்செய்யமாட்டாது தன் நாட்டவரைப் பிறர்கையில் விடுவித்து அவர்க்கு இன்னலிழைத்தவன் ஆவனுதலாலும், அவனுக்குத் தாழ்வு நேர்கின்றமையின், பெற்ற பொருள் போது மென்று அரசன் அமைதியுறுதல் அவனுக்குக் குற்றமாயிற்று. அவ் வாறே, முதலிலேயே நாணமிறந்து பலரையும் மருவிக் கற்பிழந்து விட்ட வேசி மீண்டும் நாணமுடையளாய்த் தன்னைப் பாதுகாத் துக்கொள்ளுதலால் அவட்கு ஏதும் உயர்வு வராமையானும், முதலி லேயே நாணிழந்து பிறர் மெய் தொட்டுப் பொருள் தேடி உயிர் வாழ்ந்து வந்தவள், தன்னை எவரும் மணந்து தனிவாழ்க்கையாய் நிறுத்திப் பொருள் தராராதலின் தன் மக்களோடு வறுமையிற் கிடந்து உழலுதலாகிய தாழ்வே வருகின்றமையானும் வேசியர் நாணமுறுதலிற் ருழ்வு வருதல் காண்க.

இனிப் பெரியார் பொருள் விழைதலும், இல்லாள் நாணிழத் தலுந் தாழ்வென்பது வெளிப்படை. எவ்வளவு இருத்தல் வேண் டுமோ அவ்வளவும் இல்லாளுக்கு இருத்தல் வேண்டு மென்பார்

'மூற்றிய மான' மென்றும், அவட்கும் அவளோடுசேர்ந்த அவள் கொழுநனுக்கும் அது பலவகையிலும் நலமே விளைத்தலால் 'நன் மான' மென்றும் அடைமொழிகள் தரப்பட்டன.மற்று-அசை.(கச)

கற்றோர் கனமறிவர் கற்றோரே கற்றறியா
மற்றோ ரறியார் வருத்தமுறப்—பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயரம்
நொந்தறிகு வாளோ நுவல்.

(இ - ள்.) வருத்தம் உற - துன்பப்பட்டு, பெற்று அறியா-(பிள்ளையை) பெற்றறியாத, வந்தி-மலடி, மகவை-குழந்தையை,பெறுந்துயரம் - பெற்றெடுக்குந் துன்பத்தை, நொந்து - நோவுற்று, பரிவாய் - இரக்கமாய், அறிகுவாளோ-தெரிந்துகொள்வாளோ, நுவல் - நீசொல், (அவள் தெரிந்து கொள்ளமாட்டாள். அதுபோல) கற்றோர் - வருந்திப் படித்தவர்களின், கனம் - பெருமையை, கற்று அறியா, அங்ஙனம் வருந்திப் படித்தறியாத, மற்றோர் - மூடர்கள், அறியார் - தெரிந்துகொள்ளமாட்டார்கள், கற்றோரே அறிவர் - அவர்கள் பெருமையைப் படித்தவர்களே அறிவார்கள்.

(க. து.) படித்தவர் பெருமையைப் படித்தவரே அறிவார்.

அறிகுவாளோ என்பதில் கு எழுத்துப்பேறு. பரிவாய் என்றது, பிள்ளையைப் பெறுந் துன்பத்தோடு அக்கால் அப்பிள்ளைமாட்டு உண்டாகும் ஓர் அன்பை. அவ்வன்பையும் மலடி அறியாள் என்றபடி.

"பெற்றவட்கே தெரியும்அந்த வருத்தம் பிள்ளை
பெறுப்பேதை அறிவாளோ"

என்று தாயுமானுநும் இவ்வாறே கூறுவர். (கரு)

செய்யு மொருகருமந் தேர்ந்து புரிவதன்றிச்
செய்யின் மனத்தாபஞ் சேருமே—செய்யவொரு
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர்துயரம் போல்.

(இ - ள்.) செய்யும் - செய்யத்தக்க, ஒருகருமம் - ஒரு வேலையை, தேர்ந்து - ஆராய்ந்துபார்த்து, புரிவதன்றி - செய்வதல்லாமல், செய்யின் - நினைந்துபாராது செய்வதால், முன் - முன்னொருநாள், செய்ய - செம்மையான, ஒரு நல் குடியை-ஒரு நல்ல குழந்தையை, காத்த-பாதுகாத்துக்கொண்டிருந்த, நகுலனை - கீரிப்பிள்ளையை, கொன்ற - (ஆராயாது) கொன்றுவிட்ட, மறைப் பொற்கொடியை - பார்ப்பனப் பெண்ணை, சேர் - சூழ்ந்த, துயரம்போல் - துன்பம்போல, மனத்தாபம் - துன்பம், சேரும் - உண்டாகும்.

(க - து.) எதனையும் முன்னாராய்ந்து செய்தல்வேண்டும்.

தேர்ந்து புரிதலாவது, தான் எடுத்துக்கொண்ட வேலை தன் ஆற்றலுக்கும், காலம் இடம் துணை முதலியவற்றிற்கும் பொருந்துமா வென்று முன்னரே நினைந்துபார்த்து ஒரு முடிவுக்கு வருதல். அவ்வேலையை முடிக்கும் முறையையும் ஆராய்த லென்று கொள்க. மனத்தாபம் என்பது, நிகழ்ந்தது எண்ணி ஓயாது நெஞ்சுளைதல். செய்ய-அழகு. செம்மை என்னும் பண்புப்பெயர்ப் பகுதி திரிந்து செய்ய என்றாயிற்று. நல் என்றது, குலத்தின் உயர்வை. குடி - குடிக்கு நிலைக்களனை குழந்தையை உணர்த்துதலால் ஆகுபெயர். ஆகவே, அழகிய உயர்ந்த ஒரு குழந்தையை 'செய்ய ஒரு நற்குடி' என்றார். குலம் நீள்வதற்குக் குழந்தை இன்றியமையாதது என்பது வெளிப்படை. அங்ஙனமன்றிக் குடி என்பதை வீடென்று கொள்வாருமுளர். முன் - காலவாகுபெயர்.

மறைப் பொற்கொடி என்பதில், மறையென்பது பார்ப்பனக் குலத்தையும் பொற்கொடியென்பது இளமையையும் உணர்த்தவே, அத்தொடராற் காணும் பொருள் அழகிய இளம்பெண்ணாகிய பார்ப்பனி யென்பது. இது அன்மொழித்தொகை. சேர் என்பதற்கு மிகுதிப்பொருட்டுச் சூழ்தல் என்று பொருள் செய்யப்பட்டது. இச்செய்யுட் பொருளை,

"அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமும் சூழ்ந்து செயல்"

என்னுந் திருக்குறளிலுங் காண்க.

கதை: குழந்தையில்லை யென்று ஒரு கீரிப்பிள்ளையைவளர்த்து வந்த பார்ப்பனி யொருத்திக்குச் சில நாட்கள் கழித்து மகப்பேறுண்டாயிற்று. குழந்தையைப் பெற்று மகிழ்ந்தாளாயினுங் கீரியின்பால் அன்பு தளர்ந்திலது. ஒருநாள் தன்குழந்தையைத் தொட்டிலிலிட்டுத் தூங்கவைத்துக் கீரியை அக் குழந்தைக்குக் காவலாக அருகு நிறுத்திப் பக்கல் இருந்ததொரு குளஞ்சென்று நீரெடுத்துத் திரும்பினள். இவள் திரும்புதற்குள் தொட்டிலருகே ஒரு பாம்பு வந்தது அது குழந்தையைக் கடித்துவிடாதபடி கீரிப்பிள்ளை அப்பாம்பைத் துண்டு துண்டாகக் கடித்துவிட்டது. அதனால் அதன் வாயெல்லாஞ் செந்நீர் பாய்ந்து சிவப்பாய்விட்டது. இதற்குள் பார்ப்பனி வீட்டுக்கருகே வந்ததுங் கீரி மகிழ்ந்து முன்னே ஓடிற்று. பார்ப்பனி ஆராயாமல் குழந்தையைத்தான் அது கடித்ததென் றெண்ணி நீர்க்குடத்தைக் கீரிப்பிள்ளையின் தலைமேற் போட்டு அதனைக் கொன்றனள். பின்பு வீடு சேர்ந்து நடந்தது கண்டு கீரிப்பிள்ளையை நினைந்து தான் ஆராயாது செய்துவிட்டமைக்கு ஏங்கி அவ்வேகத்தாலேயே உயிர் நீத்தனள். (கசு)

நாவி னுனியி னயமிருக்கிற் பூமாதும்
நாவினிய நல்லோரு நண்ணுவார்—நாவினுனி
ஆங்க டினமாகி லத்திருவுஞ் சேராண்முன்
ஆங்கே வருமரண மாம்.

(இ - ள்.) நாவின் நுனியில் - நாக்கு முனையில், நயம்- மகிழத்தக்க இன்சொல், இருக்கில் - உண்டாகுமானால், பூமாதும் - மலர்மகளும், நா இனிய - இனிய சொற்சொல் லால் நாக்கு இனிமையடையப்பெற்ற, நல்லோரும் - நல்ல பெரியோரும், நண்ணுவார் - சேர்வார். நாவின் நுனி - அங்ஙனமன்றி அந்நாக்கு நுனி, கடினம் ஆம் ஆகில் - வன் சொற்கள் பயின்று வலிதாகுமானால், அத்திருவும் - முன் சொன்ன திருவினளும், சேராள் - சேரமாட்டாள், ஆங்கு மரணம் வரும் - அதனால் சாவும் உண்டாகும்.

(க - து.) இன்சொல்லே உடையராதல் வேண்டும்.

ஏ, ஆம். அசைகள். இருக்கில் - வினைவுப்பொருளது (காரி யப் பொருள்). நயம் மிக்க சொல்லை நயம் என்றது ஆகுபெயர். இனிய - குறிப்புப்பெயரெச்சம், நல்லோரைக்கொண்டு முடிந்த தென்க. இனிய நா நல்லோர் என்று மாற்றினும் அமையும். பூமா தும் நல்லோரும் நண்ணுவாரென்றது, அவர் அருள் நண்ணும் என்றபடி. பூமாதின் அருள் இம்மைப்பயனுக்கும், நல்லோரின் அருள் மறுமைப்பயனுக்குமெனக் கொள்க. ஆங்கடினம் என்ப தைக் கடினம் ஆம் என்று மாற்றுக. ஆங்கே - என்பது இங்கு ஏதுப்பொருளது. அல்லது அப்பொழுதே சாவுண்டாம் என்று கூறுதலுமாம். இச்செய்யுட்பொருள் முன்னும் வந்தது. (கஎ)

ஈக்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம்.

(இ - ள்.) ஈக்கு - ஈ என்னும் பூச்சிக்கு, விடம்-நஞ்சு, தலையில் எய்தும்-தலையிலே உண்டாகும், இரும் தேளுக்கு-

கருந்தேளுக்கு, விடம் - நஞ்சு, கொடுக்கில் - அதன்வால் நுனியில், வாழும் - இருக்கும், நோக்க அரிய - பார்ப்ப தற்கு அருமையான, பை - பசுமையான, கண் - கூரிய கண்களையுடைய, அரவுக்கு - பாம்புகளுக்கு, விடம்-நஞ்சு, பல் அளவே - பல்லில்மட்டும் இருக்கும். துர்ச்சனருக்கு - (ஆனால்) கெட்டவர்களுக்கோ என்றால், அங்கம் முழுதும் - அவர்கள் உடம்பு முழுவதும், விடமே ஆம் - நஞ்சேதா னிருக்கும்.

(க - து.) தீயோர் தொடர்பு சிறிதுமே கூடாது.

செந்தேள்கள் வாயினாற் கௌவிக் கடித்தாலுஞ் சிறிது நச்சு மயக்கம் நேர்தலின், இருந்தேள் என்பதற்குக் கருந்தேளென்று பொருளுரைக்கப்பட்டது. அது நண்டுத் தெறுக்கால். இருந் தேள் - கொடுமையிற் பெரிய தேளெனினுமாம். அப்பொருள் தேளுக்குக் கருமைநிறமேற்றி உரை கூறப்பட்டமையானேபெறப் படும். வாழுமே என்றார், நஞ்சுக்கெனத் தனித்துத் தேள்களுக்கு வால் நுனியிற் கொடுக்கொன் றிருத்தலா லென்க. நோக்கரிய என்பதை அரிய நோக்குப் பைங்கண் அரவு என்று மாற்றி அந் நோக்கைப் பாம்புக்காக்குதலுஞ் சிறப்பு. பைங்கண் என்றது, முதலிற் பசுமையையும், அதன் வாயிலாக இளமையையும், அது கொண்டு சிறுமையையும் உணர்த்திற்றெனலுமாம். அல்லது நஞ்சு மிக்க பாம்புகட்கு இரவின்கண் விண்மீனை யொத்துச் சுடர்விடுங் கண்கள் உண்மையின், அவற்றின் நிறத்தைக் காட்டுதற்பொருட்டு அங்ஙனங் கூறினாரென்றலும் அமையும். ஈ, தேள், பாம்பு என் பவைகட்கு அவற்றின் உடம்பில் ஒவ்வோருறுப்பில் மட்டும் நஞ் சுள்ளதென்று கூறினமையால், அவ் வுறுப்புச்சொல்லாலேயே தீயோர்க்குங் கூறவெண்ணி 'அங்கமுழுதும் விடமேயாம்' என்றனர். ஆவது கெடுதியே உருவமாயிருப்பவர் அத்தீயோர் என்றபடி ; அதாவது அவர்கள் செய்யும் வேலையெல்லாம் தீயவே யாம் என்பது. பின்வருஞ் செய்யுளும் இது. (கஅ)

துர்ச்சனரும் பாம்புந் துலையொக்கி னும்பாம்பு
துர்ச்சனரை யொக்குமோ தோகையே—துர்ச்சனர்தாம்
எந்தவிதத் தாலு மிணங்காரே பாம்புமணி
மந்திரத்தா லாமே வசம்.

(இ - ள்.) தோகையே - பெண்ணே, துர்ச்சனரும் - தீயோரும், பாம்பும் - பாம்புகளும், துலை - (ஓர்) அளவில், ஒக்கினும் - ஒப்பானாலும், பாம்பு துர்ச்சனரை ஒக்குமோ - பாம்புகள் கெட்டவரை (மற்றோர்வகையில்) ஒப்பாகுமோ? (ஒப்பாகாது; ஏனெனில்,) பாம்பு மணி மந்திரத்தால் வசம் ஆம் - பாம்புகள் மணி மந்திரங்களால் அடங்கி நிற்கும், (ஆனால்) துர்ச்சனர்தாம் எந்த விதத்தாலும் இணங்காரே - தீயோர்கள் எவ்வகையான முயற்சியினாலும் நல்ல வழியில் திரும்பமாட்டார்கள்.

(க - து.) தீயோரை இணக்குதற்பொருட்டும் உடன் சேர்க்கலாகாது.

இறுதி யிரண்டு ஏகாரங்களுந் தாமும் அசைகள். துலை - அளவு கருவி, அளவுக்கானமையின் அஃதும், தோகை என்பதும் ஆகுபெயர்கள். அளவு என்றது பாம்புந் தீயோருந் தீமையில் ஓரளவினராதலே. இணங்குதல் - கருத் தொருமித்தல். அஃதப் பொருளாதலே 'அவரோடு இணங்கி இருப்பதும் நன்று' என்னும் நல்வழியடியிற் காண்க. மந்திரம் - மறை மொழி. மணிகளாலும் பாம்பை உரிமைப்படுத்துதல் வெளிப்படை. தீயாரை இணக்க இயலாதென்பதை இதன் உக-ம் பாட்டும்,

"கப்பி கடவதாக் காலத்தன் வாய்ப்பெயினுங்
குப்பை கிளிபோவாக் கோழிபோன்—மிக்க
கனம்பொதிந்த நூல்விரித்துக் காட்டினுங் கீழ்தன்
மனம்புரிந்த வாறே மிகும்" (கீழ்மை, க)

என்னும் நாலடியாரும் நன்குணர்த்தும். இவர்தங் கொடுமையை மேல்வருஞ் செய்யுளாலும் அறியலாம். (கக)

கொம்புளதற் கைந்து குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணிற் றெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி.

(இ - ள்.) கொம்பு உளதற்கு ஐந்து - கொம்பு உள்ளதற்கு ஐந்து முழத்தொலைவும், குதிரைக்குப் பத்து முழம்- குதிரைக்குப் பத்து முழத் தொலைவும், வெம்பு கரிக்கு ஆயிரம்முழம்-சினங்கொள்ளுகின்ற யானைக்கு ஆயிர முழத் தொலைவும், வேண்டும் - விலகிப்போக வேண்டும், (ஆனால்) வம்பு - தீமைகள், செறி - மிகுந்த, தீங்கினர்தம் - தீயோருடைய, கண்ணில் - கண்களுக்கு, தெரியாத - தெரியக் கூடாத, தூரத்து - தொலைவில், நீங்குவதே - விலகிப் போவதே, நல்லநெறி - நல்லவழியாகும்.

(க - து.) விலங்குகளினுங் கொடியரென்று நினைத்துத் தீயோர் கண்ணுக்குத் தெரியாதிருப்பதே நல்லது.

தான், ஏ அசைகள். மற்றேரேகாரந் தேற்றம். உள்ளதற்கு என்பதன் இடை தொக்கது. கொம்புள்ளவைகள் ஆடுமாடு முதலியன. முழம் என்பதை மற்றவற்றிற்கும் ஒட்டுக. வெம்புதல்- நெஞ்சிலே சினக்குறிப்பு ஒன்று வைத்துக்கொண்டு அதையே நினைத்து அதன் வண்ணமாதல். கரி - ஆகுபெயர். வம்பு - குற்றமில்லாதவழி வீண் போர்த் தொடுத்தல். தீங்கினர் கண்ணிற் படலாகா தென்பதைத் "தீயாரைக் காண்பதுவுந் தீதே" என்று நல்வழியுங் கூறும். (உ0)

அவ்விய நெஞ்சத் தறிவில்லாத் துர்ச்சனரைச்
செவ்விய ராக்குஞ் செயலுண்டோ—திவ்வியநற்
கந்தம் பலவுங் கலந்தாலு முள்ளியது
கந்தங் கெடுமோ கரை.

(இ - ள்.) திவ்விய-மேன்மையான, நல் கந்தம் - நல்ல மணப்பண்டங்கள், பலவும் - பலவற்றையும், கலந்தாலும்- உடன் கலந்தாலும், உள்ளியது - உள்ளியினுடைய, கந்தம்- தீய நாற்றம், கெடுமோ நீங்குமோ, கரை - நீசொல், (அது போல) அவ்விய நெஞ்சத்து அறிவு இல்லாத் துர்ச்சனரை- பொறாமையான நெஞ்சமுடைய அறிவில்லாத தீயோரை, செவ்வியராக்கும் - நல்லவராகத் திருப்பும், செயல் உண்டோ - செய்கையு முண்டோ? (இல்லை யென்பது).

(க - து.) தீயோரை நல்லவராக்குதல் இயலாது.

அறிவுடையார் அவ்விய நெஞ்சத்தராய் இராராதலின் ; அந் நெஞ்சத்தை அறிவிலார்பால் வைத்து ‘அவ்விய நெஞ்சத் தறி வில்லா’ என்றனர். செவ்வியர் - நல்லவர். செயலுண்டோ என்றது நல்லவராக்குஞ் செயல் தீயோர்பாற் பயன்படாதென் பதற்கு. திவ்விய நல் - ஒருபொருளிருசொல். கந்தம் இரண்ட னுள் முன்னது அது உடைய பண்டத்தை உணர்த்துதலால் ஆகு பெயர். இது மணத்தின் மிகுதியைக் காட்டும். உள்ளி என்பது இங்கு வெள்ளைப்பூண்டு ; வெங்காயத்தினுந் தீய நாற்றமுடையது இதுவேயாகலான் என்க. உள்ளி வெள்ளைப்பூண்டுக்கு வருதலை, ‘உள்ளி வெள்ளுள்ளி’ என்னுஞ் சைவசமயநெறியிற் காண்க.(உக)

துன்னு மிருமலுந் துர்ச்சனரு மொக்குமே
மன்னு மினிமையான் மாறுகிப்—பன்னுங்
கடுவுங் கடுநேர் கடுமொழியுங் கண்டாற்
கடுக வசமா கையால்.

(இ - ள்.) துன்னும் இருமலும் - மிகுந்துவரும் இருமல் நோயும், துர்ச்சனரும் - தீயோரும், மன்னும் - நீங்காத, இனிமையான் - இனிமைக்கு, மாறாகி - வேறாகி, பன்னும் - சொல்லப்படுகின்ற, கடுவும் - நஞ்சு போன்ற கைப்பான மருந்தையும், கடுநேர் - அம்மருந்தை யொத்த, கடுமொழியும் - வன்சொல்லையும், கண்டால் - பார்த்தால், கடுக - விரைவாக, வசம் ஆகையால் - அடங்கி விடுதலால், ஒக்கும் - அவ்விருமலும் தீயோரும் ஒன்றுக்கொன்று ஒப்பாகும்.

(க - து.) தீயோர் கடுஞ்சொல்லையே விரும்பி அதற்கே அடங்குவார்கள்.

ஏ - அசை. தித்திப்பான பண்டங்களால் இருமல் நோய் மிகும். தீயோரும் இன்சொல்லால் அடங்காமல் மீறுவர். மற்று, கசப்பான மருந்துகளால் இருமல் நோய் நீங்கும். அது போலவே தீயோருங் கடுமொழிக்கே அஞ்சியடங்குவர். ஆதலால் அவ்விரண்டிற்கும் ஒப்புமை காண்க. துன்னுதல் - மிகுதல். மாறாகிக் கண்டால் வசமாகையால் ஒக்கும் என்று வினைமுடிவு செய்க. மன்னும் இனிமையாவது எப்பொழுதும் நீங்காத மணமும் நன்மையும். இனிமையான் - இனிமைக்கு. பன்னும் - உலகத்தவரால் மருந்தென்று சொல்லப்படும். செயப்பாட்டு வினையே செய்வினையாயிற்று. நேர் - ஒப்பு. 'நீர்மே லெழுத்துக்கு நேர்' என்பதிற் காண்க. கடுக - விரைவுப் பொருளது. (உஉ)

செங்கமலப் போதலர்ந்த செவ்விபோ லும்வதனந்
தங்கு மொழிசந் தனம்போலும்—பங்கியெறி
கத்தரியைப் போலுமிளங் காரிகையே வஞ்சமனங்
குத்திரர்பால் மூன்று குணம்.

(இ - ள்.) இளங்காரிகையே - இளம் பெண்ணே, செங்கமலப்போது - சிவந்த தாமரைப்பூ, அலர்ந்த செவ்வி போலும் - மலர்ந்த அழகை யொத்த, வதனம் - முகமும், சந்தனம் போலும் - நல்ல மணமுடைய சந்தனத்தைப் போன்ற, தங்கு மொழி - இனிமை தங்கிய மெதுவு மொழியும், பங்கி - மயிரை, எறி - வெட்டுகின்ற, கத்திரியைப் போலும் - கத்திரிக்கோலைப் போலும், வஞ்சமனம் - கரவு மனமும் (என), குத்திரர்பால் - வஞ்சகரிடத்தில், மூன்று குணம் - மூன்று கொடுந்தன்மைகள் உள்ளன.

(க - து.) உள்ளத்தில் தீமையொன்று கொண்டு வஞ்சகர்கள் முகத்தையும் மொழியையும் நன்மையாகக் காட்டுவது கண்டு அவரை நம்பி உறவாடலாகாது.

அலர்ந்த செவ்வியாவது - மலர்ந்தபோது ஏற்படும் மலர்ச்சி, கிளர்ச்சி முதலிய அழகுகள். அதைப்போலவே வஞ்சகர் முகமும், புன்னகையும் எழுச்சியும் மிக்கதாய் அழகு பெற்றுத் திகழும். தங்கு மொழி - இனிமை பொருந்திய மொழி. தங்கித் தங்கி அடக்கமாகப் பேசும் மெதுவு மொழியுமாம். அது சந்தனம் போலுதலாவது மென்மைக்கும் மணமாகிய நன்மைக்கும் உயர்வுக்கு மென்க. எறிதல் - வெட்டுதல். இஃது இப்பொருட்டாதலை "வாளெறிந்தனன்" (சிலப், கொலை, ௨௧௩) என்பதிற் காண்க. அறுத்தலென்றுங் கொள்க, "எறிவளையார்ப்ப" என்பதிற்போல (சிலப், கானல்). கத்தரி, வெட்டுந் தொழிலுக்கு உவமை. ஆவது சூழ்ச்சியால் தீசெய்கை. இறுதியில் என உள என்று இருசொற்கள் வருவிக்க. வதனம், மொழி, மனம் என்பவற்றிற்கு எண்ணும்மை விரிக்க. முகமும் மொழியும் மனமும் எனக் குத்திரர்பால் மூன்று குணம் உள என்று கூட்டுக. (௨௩)

நீசனே நீச னினையுங்காற் சொற்றவறு
நீசனே நீச னவனையே—நீசப்
புலையனு மென்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனு மென்றே புகல்.

(இ - ள்.) நீசனே - புலையனே, நீசன் - உண்மையான புலையன்? நினையுங்கால் - நினைந்து பார்த்தால், சொல் தவறும் - சொன்ன சொல்லிலிருந்து தவறிப் போகும், நீசனே - புலையனே, நீசன் - உண்மையான புலையனவான்; அவனை - சொல் தவறாத புலையனை, நீசப் புலையன் ஆம் - இழிவான புலையனுவான், என்று உரைக்கும் - என்று சொல்லும், புல்லியனே - தாழ்ந்த தன்மையுடையவனே, மேலாம் புலையனும் - பெரும் புலையனுவான், என்று புகல் - என்று நீ சொல்.

(க - து.) இனத்தால் தாழ்வு கூறாமல் தன்மையால் தாழ்வு கூறல் வேண்டும்.

மூன்றேகாரங்களுள் நடுநின்றது பிரிநிலை; ஏனைய அசைகள். நீசன் என்பவன் ஊனுண்பவன். புலையன் என்பானும் அவன். நீசப்புலையன் என்றது தீய்தாய்நாறுமுடலுடைய ஊன்பயில்வானை. நீச்சு என்பது புலால் நாற்றம்; நீச்சுநாற்றம் என்பது வழக்கு. சொல்தவறுபவன் புலையனைவிடக் கீழாவான் என்பது. (உச)

ஞானமா சார நயவா ரிடைப்புகழும்
ஏனைநால் வேத மிருக்குநெறி—தான்மொழியிற்
பாவநிறை சண்டாளர் பாண்டத்துக் கங்கைநீர்
மேவுநெறி யென்றே விடு.

(இ - ள்.) ஞானம் - அறிவும், ஆசாரமும் - ஒழுக்கமும், நயவாரிடை - விரும்பாதவரிடத்திலே, புகழும் - புக

மூப்படுகின்ற, நால் வேதம் - நான்கு திருமறைகளின் அருங்கருத்துக்களும், ஏனை - ஏனை நூல்களின் செம் பொருள்களும், இருக்கும் நெறி - இருக்கின்ற முறையை, மொழியின் - சொல்வோமானால், பாவம் மிறை - தீவினை மிக்க, சண்டாளர் - நீசருடைய, பாண்டத்து - மட்கலத் தில், கங்கை நீர் - உயர்ந்த கங்கையாற்றின் நீர், மேவும் நெறியே என்று - கிடக்கும் முறையையே ஒத்திருக்கும் என்று, விடு - போற்றுமல் விட்டுவிடு.

(க - து.) கற்றபடி நடக்கவேண்டும்.

தான், அசை. ஏகாரந் தேற்றம். அதைப் பிரித்து நெறி யோடு கூட்டுக. ஞானமும் ஆசாரமும் என்று எண்ணும்மை விரிக்க. ஞானம் - இங்கு மெய்யறிவு. நயவார் - விரும்பாதவர்; வினையாலணையும் பெயர். நயத்தல் விரும்புதற் பொருளில் வரு மென்பது "நலன் நயந்து" [புறம், கசச.] என்பதிற் காண்க. புகழும் - செயப்பாட்டு வினைப்பொருளது. நால்வேதம் ஏனை யென்று மாற்றி உம்மைகளும் விரிக்க. வேதம் ஏனை என்பன அவற்றின் கருத்துக்களுக்கு ஆதலால் இங்கு ஆகுபெயர். ஏனை என்பன மறை முடிவு முதலியவைகளே. உவமையையே ஒருவாற் ருல் உருவகமாவும் ஆக்குதல் விளங்குதற் பொருட்டு. விடு என்றது போற்று தொழிதற் பொருட்டு. (உ௫)

குணநன் குணராக் கொடியோ ரிடத்திற்
குணநன் குடையார் குறுகார்—குணமுடைமை
நண்ணுச் சமண நகரத்திற் றாசொலிக்கும்
வண்ணுனுக் குண்டோ வழக்கு.

(இ - ள்.) குணம் உடைமை நண்ணு - ஆடை கட்டுந் தன்மை யில்லாத, சமண நகரத்தில் - சமண மதத்தினர்

இருக்கும் பட்டினங்களில், தூசு ஒலிக்கும் வண்ணானுக்கு - அழுக்கான உடைகளை வெளுக்கும் வண்ணானுக்கு, வழக்கு உண்டோ - வேலை யுண்டா? (இல்லை: அதுபோல) குணம் நன்கு உணராக் கொடியோரிடத்தில் - நல்ல தன்மைகளை அறியாத தீயோரிடத்தில், குணம் நன்கு உடையார் - நல்ல தன்மையுடைய நல்லவர்கள், குறுகார் - சேரமாட்டார்கள். (அவர்கட்கொன்றும் வேலையில்லை யென்றபடி)

(க - து.) நல்லோர்க்குந் தீயோர்க்கும் ஏதுந் தொடர்பில்லை.

குண நன்கு - குண நன்மை. நன்கு - இங்குப் பெயர்ச்சொற் பொருளில் வந்தது. 'நிரம்ப' என்றுமாம். நண்ணு - சைவம் அடையாத என்னுங் குறிப்பினது. துவைத்துத் துணிகட்டு மியல்பு சமணர்க்கு இல்லை. அவர் மயிற்பீலி கொண்டு தம் உடம்பை மூடுவர். தூசு-அழுக்கு. அஃது அழுக்குடைய துணியை உணர்த்துதலால் ஆகுபெயர். ஒலித்தல்-வெளுக்கடித்தல்"ஊரொலிக்கும் வண்ணார்" என்பது பெரியபுராணம். [திருக்குறிப்பு ௪௧௩.] வழக்கு என்றது, அசசமணர்க்கும் வண்ணானுக்கும் இடைப்படுந் தொடர்பு. (௨௬)

ஆனை மருப்பு மருங்கவரி மான்மயிருங்
கான வரியுகிருங் கற்றோரு—மானே
பிறந்தவிடத் தன்றிப் பிறிதொருதே சத்தே
செறிந்தவிடத் தன்றோ சிறப்பு.

(இ - ள்.) மானே - பெண்ணே! ஆனை மருப்பும் - யானையின் கொம்புக்கும், அரும் கவரி மான்மயிரும் - அருமையான கவரிமானின் மயிருக்கும், கான வரி உகிரும் - காட்டில் வாழும் புலி நகத்திற்கும், கற்றோரும் - கற்றோர்க்கும், பிறந்த இடத்து அன்றி - பிறந்த இடங்களில் அல்லா

மல், பிறிதொரு தேசத்து = வேற்று நாடுகளில், செறிந்த இடத்து அன்றே - தாம் சேர்ந்த இடங்களில் அல்லவா, சிறப்பு = பெருமை!

(க - து.) கற்றோர்க்கு வேற்றூர்களில் மிக்க சிறப்புண்டாம்.

ஏ - அசை. மருண்ட பார்வை யுடைமையால் மான் பெண்கட்கு உவமை. மருப்பும் மயிரும் உகிரும் அவ்விலங்குகளாற் போற்றப்படாமையின், அவற்றிற்குப் பிறந்தவிடத்துப் பெருமையில்லை. இம்மூன்றுங் கற்றோர்க்கு உவமையாம் பொருளை உட்கொண்டன. இது போல்வதொன்று முன்னும் வந்தது. (உஎ)

தலைமயிருங் கூருகிரும் வெண்பல்லுந் தத்த
நிலையுடைய மானவரு நிற்கு—நிலைதவறாத்
தானத்திற் பூச்சியமே சாரு நிலைதவறுந்
தானத்திற் பூச்சியமோ தான்.

(இ - ள்.) தலை மயிரும் = தலையின் மயிரும், கூர் உகிரும் - கூரிய நகமும், வெண் பல்லும் - வெள்ளை நிறமுடைய பல்லும், தத்தம் நிலை உடைய மானவரும் - தமக்கென ஒரு நிலையுடைய மானமுடைய பெரியோரும், நிற்கும் நிலை தவறாத் தானத்தில் - தாம் நிற்கின்ற நிலையினின்றுந் தவறிப் போகாத இடத்தில், பூச்சியமே - புகழ்தான், சாரும் - தாம் சேர்ந்த, நிலை - அந்த உயர்ந்த நிலையிலிருந்து, தவறும் தானத்தின் - தவறுமிடத்தில், பூச்சியமோ - புகழோ? (புகழில்லை.)

(க - து.) தாம் நிற்கும் நிலையினின்றுந் தாழலாகாது.

ஏ - தேற்றம். முன் செய்யுளிற் போலவே இதன் கண்ணும் மயிரும் உகிரும் பல்லும் உவமைப் பொருளன. நின்ற நிலையினின்று

வழுவாமை மானம். இதனை ஆசிரியர் பரிமேலழகியார் 'எஞ் ஞான்றுந் தந்நிலையில் தாழாமை' என்பர். மயிரும் உகிரும் பல்லும் தந்நிலையினின்றால் முறையே எண்ணெயும் அழகியவாண னிலையும் பொடியும் பெற்றுப் பெருமை யடைதலும், தவறினாற் குப்பை யடைந்து இழிவடைதலுமாம். பெரியோர் நிலை தவறினால் இழி வெய்துவர். இதனைத் "தலையின் இழிந்த மயிர் அனையர் மாந்தர் நிலையின் இழிந்தக் கடை" என்றருளுவர் நந் செந்நாப் புலவர்.

வென்றி வரியுகிரும் வெண்கவரி மான்மயிருந்
துன்றுமத யானைச் சுடர்மருப்பு—நின்றநிலை
வேறுபடி னுஞ்சிறப்பா மெய்ஞ்ஞானி நின்றநிலை
வேறுபடி னுஞ்சிறப்பா மே.

(இ - ள்.) வென்றி - வெற்றியையுடைய, வரி - புலி யின், உகிரும்-நகமும், வெண்கவரிமான் மயிரும்-வெண்மை யான கவரிமானின் மயிரும், துன்று மதம் - மிகுந்த மதத் தையுடைய, யானைச் சுடர் மருப்பும் - யானையின் ஒளி யுற்ற பற்கொம்பும், நின்ற நிலை - தாம் இருந்த நிலையி லிருந்து, வேறுபடினும் - மாறுபட்டாலும், சிறப்பு ஆம் - அவைகட்குப் பெருமை உண்டாகும். (அது போல) மெய்ஞ்ஞானி - உண்மையான அருட்பெரியார், நின்ற நிலைவேறுபடினும் - தாம் இருந்த நிலையிலிருந்து மாறுபட் டாலும், சிறப்பு ஆமே - அவர்கட்குப் பெருமையே உண் டாகும்.

(க - து.) அடியார்கள் நிலை வேறுபடுவதில் எதும் இழுக் கில்லை.

ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டித் தேற்றப் பொருளுரைக்க. அன்றி அசையுமாம். கவரிமான் என்பதும் ஒரு மான் வகை. சுடர்

மருப்பாவது-கண்ணாடி போலும் பளபளப்பான மருப்பு. இம்மூன்றும் நின்றநிலை வேறுபடுதலாவது முறையே, தாலிபோலக் கழுத்தில் அணியப் பெறுதல் முதலியனவும், இறைவனுக்கும் அவனருள் பெற்ற அடியார்கட்குஞ் சிவிறியாக உதவுதலும், உயர்ந்த ஏனங்களாகப் பயன் படுதலுமாம். இங்ஙனம் அவைகள் நிலைவேறுபட்டு நிற்பதால் அவைகட்குப் பெருமை குறைவதில்லை. அதுபோலவே தாம் நிற்கும் நிலையாகிய துறவறத்தினின்றும் வேறுபட்டு இல்லறத்தில் நின்றாலும் மெய்யுணர்வு வாய்ந்த அருட்பெருமக்கள் மேன்மையையே அடைவார்கள். இது,

"எத்தொழிலைச் செய்தாலும் ஏதவத்தைப் பட்டாலும்
முத்தர் மனமிருக்கும் மோனத்தே வித்தகமாய்க்
காதிவிளை யாடியிரு கைவீசி வந்தாலுந்
தாதிமனம் நீர்க்குடத்தே தான்."

என்னும் பட்டினத்தடிகள் திருமொழியாலும் விளங்கும். (உக)

அன்னை தயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னி னழகும் புவிப்பொறையும்—வன்னமுலை
வேசி துயிலும் விறன்மந் திரிமதியும்
பேசி லிவையுடையாள் பெண்.

(இ - ள்.) பேசில் - பேசினால், அன்னை தயையும் - தாயைப் போல அன்பும், அடியாள் பணியும் - பணிவிடைக் காரியைப் போலத் தொண்டும், மலர்ப் பொன்னின் அழகும் - செந்தாமரை மலரின் மேலிருக்குந் திருமகளைப் போல அழகும், புவிப்பொறையும் - நிலத்தைப் போலப் பொறுமையும், வன்னமுலை வேசிதுயிலும் - அழகிய கொங்கைகளையுடைய வேசியைப் போலச் சிற்றின்பந் தருந் திறனும், விறல் மந்திரி மதியும் - வல்லமை மிக்க

அமைச்சரைப்போல அறிவும், (ஆகிய) இவை உடையாள். (ஆகிய) இந்த ஆறு அரிய இயல்புகளையும் உடையவளே, பெண் - பெண்ணெனத் தக்கவள், (என்று பேசுக.)

(க - து.) இரக்கம் முதலான ஆறு இயல்புகளும் உடையவளே பெண்ணெனப்படுவாள். அல்லாதவள் பெண்ணுருவம் உடையளாயிருந்தாலும் பெண்ணெனப்படாள்.

நிலத்தைப் போலப் பொறையுடைமையாவது, கடப்பாறை முதலிய இருப்புக் கருவிகளால் தன்னை ஊறுபடுத்தித் தோண்டிய போதும் நிலம் அதனைப் பொறுத்துக்கொண்டு தன்னைத் தோண்டுவாரைத் தாங்கியும் நிற்பது போலக், கணவன் முதலியோரால் எத்துணைத் துன்பந்தான் தனக்கு நேருவதாயினும், பெண்மக்கள் அதனைப் பொறுத்துக் கொண்டு அக்கணவன் முதலியோர்க்கு ஏதுந் தீங்கு நேராதபடித் தாங்குதலும் வேண்டும் என்பதாம். இதனை,

"அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தன்னை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை"

என்று நம் நாயனாருங் குறிப்பர். வனமுலை - வன்னமுலை என இடையில் ஒற்றுமிக்கது. துயில் - துயில்வார் எய்தும் இன்பம் அஃது அது தருந்திறத்தை உணர்த்தி நின்றது. இஃது இடக்கரடக்கல். விறல், எந்த நேரத்திலும் எத்துணை அரியதான செய்தியையும் விரைந்தாராய்ந்து தக்க சூழ்ச்சியோடு கூடிய முறை பொருந்திய நுட்பந்தெரிக்கும் வல்லமை. (௯௰)

பெண்ணொருத்தி பேசிற் பெரும்பூமி தானதிரும்
பெண்ணிருவர் பேசில்விழும் வான்மீன்கள் — பெண்மூவர்
பேசி லலைசுவறும் பேதையே பெண்பலர்தாம்
பேசினுல கென்னமோ பின்.

(இ - ள்.) பெண்ணொருத்தி பேசில் - பெண் ஒருத்தி பேசினால், பெரும்பூமி-இப்பெரிய நிலவுருண்டை, அதிரும்-நடுங்கும், பெண் இருவர் பேசில் - பெண்மக்கள் இரண்டு பேர் பேசுவாரானால், வான்மீன்கள் - வானில் உள்ள உடுக்கள் (நட்சத்திரங்கள்), விழும் - கீழே உதிர்ந்து விடும். பெண்மூவர் பேசில் - பெண்மக்கள் மூன்றுபேர் பேசினாலோ, அலை - கடல்நீர், சுவறும் - சுண்டிவிடும் (என்றால்), பேதையே - பெண்ணே! பெண்பலர்தாம் பேசில் - பெண்கள் பலரே பேசத்தொடங்கிவிட்டால், பின் - பின்பு, உலகு - இவ்வுலகம், என்னாமோ - என்னதான் ஆகுமோ.?

(க - து.) உலகத்தில் ஆவனவும் அழிவனவும் பெண்களாலேயே என்பது.

பூமிதான் என்பதில் உள்ள தான் என்பதைப் பிரித்து என்னதான் ஆமோ என்று இறுதியிற் சேர்க்க. தான் தாம் என்பன தேற்றத்தை யுணர்த்துவன. முன் செய்யுளில் நல்லபெண்களின் அறுவகை யியல்புகளைக் கூறினமையால், இச்செய்யுளில் எஞ்சிய தீயபெண்களின் தீய இயல்பு கூறப்பட்டது. இவைகொண்டு பெண்மக்களில் நல்லார் தீயார் இவரிவரெனப் பகுத்துத் தெரிந்துகொள்ளலாம். இப்பாட்டில் தீய இயல்பினைக் குறிக்க வந்த ஆசிரியர், பேசுந் தொழிலையே அஃதெனக் குறித்தமை நினைவுகூரற்பாலது. (௩௪)

ஒன்னே கிரேதத் திரேணுகையே கூற்றுவனாந
தன்னேர் திரேதத்திற் சானகியே—பின்யுகத்திற்
கூடுந் திரௌபதியே கூற்றாங் கலியுகத்தில்
வீடுதொறுங் கூற்றுவனா மே.

(இ - ள்.) கிரேதத்து - கிருத ஊழியில், இரேணுகையே - இரேணுகை என்பவளே, கூற்றுவன் ஆம்-நமனா

கும், திரேதத்தில் - திரேத ஊழியில், தன்நேர் - தனக்குத் தானே ஒப்பாகிய, சானகியே - சீதை என்பவளே, கூற்று வனும் - நமனாகும், பின் யுகத்தில் - அதற்கடுத்ததான துவாபர ஊழியில், கூடும் - வந்த, திரௌபதியே - திரௌபதையே, கூற்றாம் - நமனாகும், கலியுகத்தில் - இப்பொழுது நடக்குங் கலியூழியிலோ வென்றால், வீடுதொறும் - ஒவ் வொரு வீட்டிலும் இருக்கும் (ஒவ்வொரு பெண்மக்களும்), கூற்றுவன் ஆமே - நமனாகும், என்னே - இஃது என்ன வியப்பு.

(க - று.) இக்காலத்திற் பெண்களிற் பெரும்பாலார் கொடியராகவே இருக்கின்றார்.

தீயபெண்டிரைக் கூற்றென்னும்வழக்கு.

"—கூற்றமே
இல்லிற் கிசைந்தொழுகாப் பெண்"

என்பதிற் காண்க. (கூஉ)

கர்ப்பூரம் போலக் கடலுப் பிருந்தாலுங்
கர்ப்பூர மாமோ கடலுப்புப்—பொற்பூரும்
புண்ணியரைப் போல விருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல்.

(இ - ள்.) கடல்உப்பு - கடல்நீரில் உண்டாகும் உப்பு, கர்ப்பூரம் போல-கருப்பூரத்தைப்போலவே, இருந்தாலும் (உருவத்தில்) இருக்குமானாலும், கடலுப்பு - அவ்வுப்பு, கர்ப்பூரம் ஆமோ - தன்மையிலுங் கருப்பூரமே ஆய் விடுமோ? (ஒருகாலும் ஆகாது; அதுபோல) புல்லியர் - தீவினையாளர், பொற்பு ஊரும்-அழகு மிகுகின்ற, புண்ணியரைப்போல - நல்வினையாளரைப்போலவே, இருந்தாலும்

உருவத்தில் இருப்பரானாலும், புண்ணியர் ஆவாரோ - தன்மையிலும் நல்வினையாளராக ஆய்விடுவார்களோ, புகல் - நீ சொல்லு.

(க - ரு.) உருவத்தாற் பிறரை மதித்தலாகாது.

தாம் - அசை. கல்லுப்பு வேறே இருத்தலின், கருப்பூரத்தைப் பெரிதொத்திருக்கும் உப்புக் கடலுப்பெனப்பட்டது. புண்ணியர்க்குப் பொற்பு ஊருதலாவது, அவர்மாட்டு இறைவன் அருள் நிறைந்து துளும்ப, அவ் வருட்பெருக்கால் மேனி சிவந்து அழகு மிகுவது. ஊர்தல், இங்கு மேற்படுதல் என்னும் பொருட்டு. இஃதிப் பொருளாதலை,

"எறி சிறிதாயி னீரூரு மில்லத்து
வாரி சிறிதாயிற் பெண்ணூரும்—மேலைத்
தவஞ்சிறி தாயின் வினையூரு மூரு
மூரஞ்சிறி தாயிற் பகை"

என்னும் நான்மணிக்கடிகைச் (எக) செய்யுளிற் காண்க. நல்வினையாளர்க்கு அருளால் அழகு மிகத் தீவினையாளர் சிலர்க்கு அவ்வகையான் அழகு மிகாமற் பிறப்பிலிருந்தே உடம்பமைப்பின் வழியாய் அழகு மிகுந்திருக்கும். ஆனால் அவர் அழகு அவர்தம் தீச்செயலாலேயே குன்றிவிடும். ஆகவே இருவரும் ஒருவராகார். தன்மையில் வேறுவார். இன்னும் இயற்கை யழகே யன்றித் திருநீறு முதலிய அருட்குறிகள் அணிந்து பொய்யடியார் உண்மை யடியாரைப்போ லிருப்பினும், அவர் அவரை அங்ஙனம் உருவத்தால் ஒத்தாலும் உள்ளத்தால் ஒப்பாகார் என்பதுமாம். (௩௩)

சிலம்பில்லை னேதேனுஞ் செப்பிடினுந் தானந்தக்
கால மிடமறிந்து கட்டுரைத்தே—ஏலவே
செப்புமவ னுந்தானே சிந்தைநேரா காதகன்று
தப்புமவ னுத்தமனே தான்

(இ - ள்.) சீலமில்லான் - நல்லொழுக்கமில்லாதவன், ஏதேனும் - (தீயசொல்) ஏதேனும் ஒன்றை, செப்பிடினும் - சொன்னாலும், தான் - நல்லவன், அந்தக் காலம் இடம் அறிந்து - அவன் சொன்ன நேரத்தையும் இடத்தையும் ஆராய்ந்தறிந்து, ஏல - எல்லாவற்றிற்கும் பொருந்த, கட்டுரைத்துச் செப்புமவனும் - அறிவு மொழிகளை உறுத்துச் சொல்லி விடை கொடுப்பானும், தானே சிந்தை நோகாது - அத்தீயமொழியால் தனக்குத்தானே நெஞ்சம் வருந்தாமல், அகன்று தப்புமவனும் - அவ்விடத்திலிருந்தும் நீங்கித் தப்பித்துக் கொள்வானும், உத்தமனே தான் - நல்லவர்களேயாவார்கள்.

(க - து.) ஒழுக்கமில்லாதவன் சொல்லுந் தீயமொழிகளால் நல்லோர் வருந்தாராய் அவர்க்கிசைய உறுதி புரைத்தும் உரையாதும் செல்வர்.

முதலிரண்டு ஏகாரங்களும் அசைகள். பின்னிரண்டு ஏகாரங்களுள் முன்னது பிரிநிலை; பின்னது தேற்றம். தான் என்பதுந் தோற்றப்பொருளது. செப்புமவனுந் தப்புமவனும் ஒரு தன்மையராகையால் அவைகள் ஒருமை வினை கொடுக்கப்பட்டன. இது வழுவமைதி. தீயவர் தாம் தீது சொல்லியபொழுது அதைக் கேட்ட நல்லவர்கள் இருவகைப்படுவர். ஒரு வகையினர் அடங்குவர்; மற்றொருவகையினர் அடக்குவர். இருவரும் மேம்பட்ட தன்மையையே யுடையவர்க ளாதலால் மேலோரெனப்பட்டார். கட்டுரைத்தல் என்பது திருந்தும்படி பொருள் நிறைத்து உறுதியாய் விளக்கிச் சொல்லுதல். இதனைக் "கட்டுரை—விளங்கச் சொல்லுதல்" என்று சிலப்பதிகாரத்து அரும்பத உரையாசிரியரும் (சிலப், பதிகம் - அஉ), "கட்டுரை - பொருள் பொதிந்த சொல், உறுதியையுடைய சொல்லுமாம்" என்று அடியார்க்குநல்லாரும் (சிலப், பதிகம், ௯௪) உரை கூறியவாற்றால் அறிந்து கொள்க.

கட்டுரைத்துச் செப்புமவன் என்று இரண்டுவினை தருதலால், கட்டுரைத்தலுக்கு வேறாகச் செப்புதல் ஒன்றுங்கொள்க. செப்புதல், விடைகூறுதல். இப்பொருளாமாறு "செப்பும் வினவும் வழாஅ லோம்பல்" (தொல். சொல். கந. சேனு) என்பதிற் கண்டுகொள்க. (கூ-௪)

சிற்றுணர்வோ ரென்றுஞ் சிலுசிலுப்ப ரான்றமைந்த
முற்றுணர்வோ ரொன்று மொழியாரே—வெற்றிபெறும்
வெண்கலத்தி னோசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தி னுண்டோ வொலி.

(இ - ள்.) வெண்கலத்தின் ஓசை - வெண்கலத்தினின்றுண்டாகும் ஓசை, மிகும் - மிகுதியாகும், (ஆனால்) வெற்றி பெறும் விரிபசும்பொன் - மேன்மையடைகின்ற விரிந்த பசுமையான பொன்னாற்செய்யப்பட்ட, ஒண் கலத்தின் ஒலி - ஒளிபொருந்திய பாண்டத்தின் ஓசை, உண்டோ - அங்ஙனம் மிகுவதுண்டா? (இல்லை. அதுபோல) சிற்றுணர்வோர் - சிற்றறிவினையுடையவர்கள், என்றும் - எப்பொழுதும், சிலுசிலுப்பர் - சிடுசிடு என்று இரைச்சலெடுத்துப் பேசுவார்கள். ஆன்று - கல்விகேள்விகளால் நிறைந்து, அமைந்த - அடங்கிய, முற்றுணர்வோர் - பேரறிவாளர்கள், ஒன்றும் மொழியார் - அப்படிச் சிடுசிடென்னும் இரைச்சற்பேச்சொன்றும் பேசமாட்டார்கள்.

(க - து.) சிலுசிலுத்துப் பேசுவார் சிறியர்: அமைந்து பேசுவார் பெரியர்.

ஏகாரங்களிரண்டும் அசைகள். சிற்றுணர்வோர், புல்லர்கள். அஃதாவது அவர் தாம்பெற்ற சிற்றறிவினாலே தம் மலமடங்காதவர் என்பது. எனவே அவரிடம் அம்மல எழுச்சியினாலே சிலுசிலுப்

புத் தோன்றும். அங்ஙனமன்றி முற்று முணர்ந்தவரானால் அவர் தாம் பெற்ற அம்முற்றறிவினாலே தமது முழுமலத்தையும் அடக்கிக்கொள்வர். ஆதலின் அவர்பால் மல எழுச்சித் தோன்றாதாகச் சிலுசிலுக்காது அவர் அமைந்து நிற்பர். ஆன்று என்றது அறிவின் விரிவுக்கு. அமைந்த என்றது மலத்தின் அடக்கத்துக்கு. என்னை? அறிவு விரிந்தால் மலம் அடங்குமாதலின். அறிவின் விரிவும் அதனால் மலத்தின் அடக்கமும் முற்றுணர்வோர் மாட்டே காணப்படுமாதலால், அவைதாம் அதற்கு அடைமொழிகளாயின. சிலுசிலுத்தலாவது சினமுண்டாம்படி சினப்பட்டிரைவது. ஒன்று மொழியார் என்பது சிலுசிலுத்துப் பேசார் என்பதனோடு பெரும்பாலும் அவர் வீண்பேசவே மாட்டார் என்பதையுங் குறித்தபடியாம். வெண்கலத்துக்கு ஓரடைமொழிதானும் இன்றிப் பொற்கலத்துக்கு மட்டும் 'வெற்றிபெறும்' 'விரி' 'பசுமை' 'ஒள்' என்றித் துணையடைமொழிகள் வந்தமை அத்துணை உயர்வுடையது ஓசையிடுவதில்லையென்றும், ஒருயர்வுமில்லாத வெண்கலமே பேரிரைச்சலிடுமென்றுந் தேற்றுதற்கென்க. (நடுரு)

உள்ளபொழு தேது முவந்தளிப்ப தல்லாலோர்
எள்ளளவு மீய விசையுமோ—தெள்ளுதமிழ்ச்
சீரளித்தோ னுண்டநாட் சேர்மேகத் துக்கருந்த
நீரளித்த தோமுந்நீர் நின்று.

(இ - ள்.) (இரவலரே!) தெள்ளுதமிழ் - தெளிவான தமிழின், சீர் - சிறப்பை, அளித்தோன் - கொடுத்தவனாகிய குறுமுனிவன், உண்டநாள் - தனது நீரைக் குடித்துவிட்ட காலத்தில், முந்நீர் - கடல், நின்று - நீர் கொண்டு நின்று, சேர்மேகத்துக்கு - தன்னிடம்வந்த மேகத்துக்கு, அருந்த - குடிக்க, நீர் அளித்ததோ - நீர் கொடுத்ததோ? (இல்லை, அதுபோல) உள்ளபொழுது -

தன்னிடத்தில் பொருள் உள்ளகாலத்தில். ஏதும் - ஏதுவொன்றும், உவந்து - மகிழ்ந்து, அளிப்பதல்லால் - கொடுப்பதல்லாமல், (பொருளில்லாத காலத்தில்) ஓர் எள்ளளவும் - ஓர் எள்ளு அளவாயினும், ஈய - கேட்பார்க்குக் கொடுக்க, இசையுமோ - முடியுமோ (முடியாது.)

(க - து.) பொருளில்லாதாரிடம் சென்று பொருள் கொடுக்கும்படி வற்புறுத்தலாகாது.

ஓகாரமிரண்டும் வினுவோடு 'விடைப்பொருட் குறிப்பின. உள்ளபொழுது' என்றமையால், 'இல்லாதபொழுது' என்றொன்றும், 'அளிப்பது' என்றமையாற் 'பொருள்' என்றொன்றும் வருவித்துக் கொள்க. 'தெள்ளுதமிழ்' என்பதை வினைத்தொகையாகக் கொண்டு கருத்துக்களைத் தெள்ளித்தரும் சொற்களுடைய தமிழ்மொழி என்றுரைத்தலுமாம். தமிழின் அமைதியே அதாவது தமிழிலக்கியத்தின் அமைதியே தமிழிலக்கணமாவதாதலால், தமிழ்ச்சீர் என்பதை ஆறும் வேற்றுமைத் தொகையாகக்கொள்க. முந்நீர், கடல். இஃது ஆகுபெயர். "நிலத்தைப் படைத்தலும், காத்தலும், அழித்தலுமாகிய மூன்று தொழிலுமுடைமையின், முந்நீர் ஆகுபெயர் (சீவகசிந்தாமணி அவையடக்கம் ௨.) என்பார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். இச்செய்யுள் இரவலரை விளித்துக்கூறியபடி. (௩௬)

பேதையரைக் கண்டாற் பெரியோர் வழிவிலகி
நீதியொடு போத நெறியன்றோ—காதுமத
மாகரத்த யானை வழிவிலகல் புன்மலத்தின்
சூகரத்துக் கஞ்சியோ சொல்.

(இ - ள்.) காதும் - கொல்லுகின்ற; மதம் மா கரத்த யானை - மதத்தையும் பெரிய தும்பிக்கையையு முடைய யானை, வழிவிலகல் - வழிவிலகிப் போதல், புன்மலத்தின் -

தாழ்ந்த மலத்தைத் தின்கின்ற, சூகரத்துக்கு - பன்றிக்கு, அஞ்சியோ - அச்சப்பட்டோ? சொல் - நீ சொல்லு. (அச்சப்பட்டன்று, அது தனக்குள்ள பெருந்தன்மையால் அங்ஙனஞ் செய்கின்றது.) அது போலவே, பேதையரைக் கண்டால் - அறிவில்லாத கீழ்மக்களைக் கண்டால், பெரியோர் - அறிவு மிக்க மேன்மக்கள், நீதியோடு வழிவிலகிப் போதல் - பெருந் தன்மையோடு வழிவிட்டுப் போதல், நெறியன்றோ - முறையல்லவா? (அவர் அக்கீழ்மக்களுக்கு அஞ்சி அது செய்கின்றார் என்பதன்று என்றபடி.)

(க - து.) சிறியாரைக் கண்டு பெரியார் வழிவிலகிப் போதல் அவர்க்குள்ள அச்சத்தா லன்று.

ஓகாரங்கள் இரண்டும் வினாப் பொருளன. ஒருவருக் கொருவர் மாறுவார் இருவரைப் பேதையார் என்றும் பெரியார் என்றுங் கூறினமையால், முன்னவர்க்குச் சிறியார் என்பதும் பின்னவர்க்கு அறிவுடையார் என்பதும் வருவிக்கப்பட்டன. இங்ஙனம் பேதையராகிய சிறியார் அறிஞராகிய பெரியார் என்றது 'சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்' என்னும் அழகுப் பொருட்டு. இவ்வகையான அழகுகளைத் திருக்குறளுக்கு ஆசிரியர் பரிமேலழகியா ருரைத்த மதித்திறன் வாய்ந்த நுட்ப உரையிற் பரக்கக் காணலாம். நீதியொடு போதலாவது, அங்ஙனம் வழிவிலகிப் போவதை ஓரிழிவாக நினையாமல் அஃதோர் நல்லொழுக்கமெனவே நினைத்துப் போதல். காதுதல் - கொல்லுதல், இஃதிப் பொருள் தருதலை "அவுணர்தங் கிளையைக் காதி" "என்னுங் கந்தபுராணத்துத் (விடை, சக) திருமொழியிற் கண்டு கொள்க. காது மதம் என்பது 'யானை தனக்கெதிரே வந்த பன்றியைக் கொன்றுவிடக் கூடிய ஆற்றலுடையதாயிருந்தும், அவ்வாற்றலைப் பயன்படுத்தாமல் ஒதுங்கிச் சென்றது அச்சத்தாலன்று' என்னும் பொருளைச் சுட்டி நின்ற குறிப்படைமொழி. சூகரம்,

பன்றி "கடிகமழ் கள் கமல மலர்க்கண் திகிரிக் கரன்ஒரு சூகரமதாகி" (கடவுள் வாழ்த்து, உ) என்பது சிவராத்திரிபுராணம்.(அள)

மந்திரமுந் தேவு மருந்துங் குருவருளுந்
தந்திரமு ஞானந் தருமுறையும்—யந்திரமும்
மெய்யெனில் மெய்யாய் விளங்குமே மேதினியிற்
பொய்யெனிற் பொய்யாகிப் போம்.

(இ - ள்.) மேதினியில் - உலகத்தில், மந்திரமும் - மறைமொழிகளும், தேவும் - கடவுளும், மருந்தும் - மருந்துகளும், குரு அருளும் - ஆசான் அருளும், தந்திரமும் - நூல்களும், ஞானம் தருமுறையும் - வழிபாட்டு முறைகளும், யந்திரமும் - மறைமொழி யமைக்குங் கட்டங்களும் (ஆக இவ்வேழும்) மெய் எனில் - மெய்யென்று நம்பினல், மெய்யாய் ஏ விளங்கும் - மெய்யாகவே விளங்கிப் பயன் கொடுக்கும், பொய்யெனில் - பொய்யென்று நினைத்தால், பொய்யாகிப்போம் - பொய்யாகிப் பயன் படாது போம்.

(க - து.) மறைமொழி, கடவுள் முதலியவைகளை நம்பினுற்றான் பயன்.

ஏகாரத்தைப் பிரித்திசைத்துப் பொருளுரைக்க. இவை ஏழும் நினைவையே நிலைக்களனுய்க் கொண்டு அதற்கேற்பப் பயன் தருவன ஆதலால் மெய்யாய் நினைத்தால் மெய்யாவும், பொய்யாய் நினைத்தால் பொய்யாவும் பயன் தருவவாயின. இவையெல்லாம் இங்ஙனம் நினைப்புக்குத் தகப் பயனளிப்பன ஆதலாற்றான், 'நினைப்பவரைப் பாதுகாப்பது' என்னும் அப்பொருளிலேயே வரும் மந்திரம் என்பது முதற்கண் நிறுத்தப்பட்டது. நினைத்தலாற் பயனுண்டாம் முறையை விரிப்பதற்கு இஃது இடனுகாது. பெரியார்வாய்க் கேட்டுணர்க.

ஈசனெதிர் நின்றாலு மீசனருள் பெற்றுயர்ந்த
நேசரெதிர் நிற்ப தரிதாமே—தேசுவளர்
செங்கதிர்முன் னின்றாலுஞ் செங்கதிர வன்கிரணந்
தங்குமண னிற்கரிதே தான்.

(இ - ள்.) தேசுவளர் - ஒளிமிகுகின்ற, செங்கதிர் முன் - முறுக்கான கதிர்களையுடைய ஞாயிற்றின்முன், நின்றாலும் - பகைத்துநின்றாலும், செங்கதிரவன் கிரணம் தங்கும் மணல் - அஞ்ஞாயிற்றின் கதிர்ச்சூடு தங்கியுள்ள பொடி மணலில், நிற்க அரிது - (நிற்கிறேனென்பார் என்று) நிற்க இயலாது. (அதுபோல) ஈசன் எதிர்நின்றாலும் - எல்லாம்வல்ல கடவுளின் எதிரே பகைத்து நின்றாலும், ஈசன் - எல்லாம்வல்ல அக்கடவுளின், அருள்பெற்று - பேரருளைப்பெற்று, உயர்ந்த - மற்றெல்லாரையும் விட மேம்பட்டுயர்ந்த, நேசர் எதிர் - அன்பர்கள் எதிரே, நிற்பது அரிது - பகைத்து நிற்றல்கூடும் என்று நிற்பது இயலாது.

(க - து.) கடவுளுக்கு அடியார்களிடம் எதிர்த்துப் பகைத்தல் பெருங்கெடுதியாம்.

ஏகாரங்கள், ஆம், தான் என்பன அசைகள். இங்கு ஞாயிற்றைவிட அதன் கதிரே வேண்டப்படுவதாதலால், அக்கதிர் கொண்டு ஞாயிற்றை உணரவைத்தார் என்க. செம்மை - இங்கு வன்மைப் பொருளது. கருத்துக்கேற்ப முறுக்கான என்று அஃது உரை செய்யப்பட்டது. வீரனைப்பார்த்து நன்றாய்ச் சண்டை செய்தான் என்றால், வீரமாகப் பொருதான் என்று பொருளாதல் போலவென்க. கடவுளைவிடக் கடவுளடியார் மிகுத்தெடுத்துப் பாராட்டப்படுகின்றனராதலால் இங்ஙனங் கூறப்பட்டது.

எதிர்த்து நிற்றல் இயலாதவாறு அடியார் பெருமக்கள் பேராற்றல் படைத்தவர்கள் என்பதைக்

"குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது" (குறள், நீத்தார் பெருமை, கூ)

என்பதும் நன்கு விளக்கும். (கூ௯)

முற்று மிறைசெயலே முற்றிடினுந் தன்னருளைப்
பெற்றவர்தம் பாலே பெரிதாகும்—பற்றுபெருந்
தாபத் திடத்தே தழன்றிடினு நற்சோதி
தீபத் திடத்தே சிறப்பு.

(இ - ள்.) நல்சோதி - நல்ல ஒளி, பற்று பெரும் தாபத்திடத்து - பற்றக்கூடிய பெரிய காட்டுத்தீயினிடத்தில், தழன்றிடினும் - ஒளி விட்டாலும், தீபத்திடத்தே - விளக்கினிடத்திலேயே, சிறப்பு (ஆகும்) - அவ் ஒளிக்குச் சிறப்பாகும். (அதுபோல) முற்றும் - உலக மெங்கும், இறைசெயல் - கடவுளுடைய அருட் செய்கை, முற்றிடினும் - நிறைந்திருந்தாலும், தன் அருளைப் பெற்றவர்தம் பாலே - அவரருளைப் பெற்ற அடியார்களிடத்திலேயே, பெரிது ஆகும் - அவரருட்செய்கை நிறைந்திருப்பது மிகுதியாகும்.

(க - து) இறைவன் அடியார் பெருமக்களிடத்தில் மட்டும் மிக்கு விளங்குவன்.

ஏகாரங்களுள் முதலும் மூன்றாவதும் அசைகள்; மற்றவை தேற்றம். விளக்கம் - விளக்கு; ஆகும் என்பதைச் சிறப்பு என்பதனோடுங் கூட்டுக. தழன்றிடினும் - தழல் என்னும் பெயரடியாகப் பிறந்த வினை. களங்கமற்று நன்றாய்ச் சுடர் விட்டு எரியுந் தீக்கு நற்சோதி என்றார். எங்கும் இறைவன் நிறைந்திருந்தாலும்

அடியாரிடத்து மட்டும் மிகவும் விளங்கித்தோன்றுவன் என்னும் இதன் கருத்தோடொட்பவே,

"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்
உறவு கோல்நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே"

என்று அப்பர் தேவாரமும் வருதலறிக. (௪0)

௫0

கன்னியரைப் பொன்னாண் கழிந்தோரை மற்றயலார்
பன்னியரை மாயப் பரத்தையரை—முன்னரிய
தாதியரை நல்லோர் தழுவநினை யார்நரகத்
தீதுவரு மென்றே தெரிந்து.

(இ - ள்.) நல்லோர் - அறிவுடையவர்கள், கன்னியரை - மணமாகாத பெண்டிரையும், பொன் நாண் கழிந்தோரை-பொன்னாலான தாலியை யிழந்த கைம்பெண்களையும், அயலார் பன்னியரை-பிறர் மனைவியரையும், மாயப் பரத்தையரை - வஞ்சனையுடைய வேசிகளையும், முன்ன அரிய தாதியரை - விரும்பத்தகாத வேலைக்காரிகளையும், நரகத்தீது வரும் என்று தெரிந்து - நரகத்துன்பம் வந்து விடுமே என்று உணர்ந்து, தழுவ நினையார் - சேர நினைக்க மாட்டார்கள்.

(க - து) அறிஞர், மணம்பெறுப் பெண்டிர் முதலான இவ் வைந்து பேரையுந் தழுவுதற்கு நினைக்கவும் மாட்டார்.

ஏ, அசை. குறிக்கப்பட்டவரெல்லாரும் சேர்தற்குத் தகுதியற்றவர் என்பதை ஆசிரியர் அவ்வச் சொற்பொருள்களாலேயே நன்கு விளங்கவைத்தல் காண்க. தீது - இங்குத் துன்பம். (சக)

தன்னை யளித்தா டமையன் மனைகுருவின்
பன்னி யரசன் பயிதேவி—தன்மனையைப்
பெற்றா ளிவரைவர் பேசி லெவருக்கு
நற்றாய ரென்றே நவில்.

(இ - ள்.) பேசில்-பேசுமிடத்து, தன்னை அளித்தாள்-தன்னைப் பெற்றவள், தமையன் மனை - தமையனுக்கு மனைவி, குருவின் பன்னி - ஆசிரியரின் மனைவியர், அரசன் பயில்தேவி - அரசன் இன்புறிவரும் அவன் மனைவி, தன் மனையைப் பெற்றாள் - தன் மனைவியைப் பெற்றவள், இவர் ஐவர் - ஆகிய இவர்கள் ஐந்து பேரையும், எவருக்கும் - உலகத்திலுள்ள எல்லார்க்கும், நற்றாயர் என்றே நவில் - பெற்ற தாய் மார்கள் என்றே நீ சொல்லு.

(க - து) தன்னை யளித்தாள் முதலான ஐவரையுந் தாயாகக் கருதுதல் வேண்டும்.

மனை - ஆகுபெயர். தன்னைப்பெற்றாள் முதல் தன் மனைவியைப் பெற்றாள் ஈறாகக் குறிப்பிடப்பட்ட இவ்வைவராலும் உலகம் நடைபெறுதலின், அவரை எல்லார்க்குந் தாய் என்றார். எனவே தனக்குந் தாய் என்றபடியாம்; 'நற்றாய்' என்பது பெற்றெடுத்த தாயைக் குறிப்பதொரு குறியீட்டுச் சொல். இதனை அகப்பொருள் நூல்களிற் காண்க. (சஉ)

வாவியுறை நீரும் வடநிழலும் பாவகமும்
ஏவனைய கண்ணா ரிளமுலையும்—ஓவியமே
மென்சீத காலத்து வெம்மைதரும் வெம்மைதனில்
இன்பாருஞ் சீதளமா மே.

(இ - ள்.) ஓவியமே-படமெழுதினாற் போன்ற பெண்ணே, வாவி உறை நீரும்-குளத்தில் உள்ள நீரும், வட நிழ

லும் - ஆலமரத்தின் நிழலும், பாவு அகமும் - பாவு கல் லிட்ட வீடும், ஏ அனைய கண்ணார் இளமுலையும் - அம் பைப் போன்ற கூரிய கண்களையுடைய பெண்களின் இளங் கொங்கையும், மென்சித காலத்து வெம்மை தரும்-மெல் லிய குளிர்ச்சி வாய்ந்த காலங்களில் வெப்பத்தைக் கொடுக் கும், வெம்மைதனில் - சூடான காலத்தில், இன்பு ஆரும் சீதளம் ஆமே - இன்பம் நிறைந்த குளிர்ச்சியைத் தரும்.

(க - று) காதல் வெம்மை குளிர்ச்சிகளால் ஒழியாது.

குளிர்ந்த காலத்தில் குளிர்ச்சியும் சூடான காலத்தில் சூடும் அத்துணை இன்பந்தருவதில்லை. நீரும் நிழலும் அகமும் இளமு லைக்கு உவமைகளாகக் கொள்க. முலை வெம்மையாகத் தோன் றும் உண்மையை,

"கொங்கை அனலில் கொளுந்தியோ" (சுயம்வரகாண்டம், ஈஎ) என்னும் நளவெண்பா விற்காண்க. (சுக)

உற்றதொழில் செய்வோர்க் குறுபஞ்ச மில்லையாம்
பற்றுசெபத் தோர்க்கில்லை பாவங்கள் —முற்றும்
மவுனத்தோர்க் கில்லை வருகலகந் துஞ்சாப்
பவனத்தோர்க் கில்லை பயம்.

(இ - ள்.) உற்ற தொழில் செய்வோர்க்கு உறுபஞ் சம் இல்லை - தமக்கேற்ற தொழிலைச் செய்து கொண்டிருப் பவர்களுக்கு உண்டாகின்ற வற்கடம் ஏதும் இல்லை, பற்று செபத்தோர்க்குப் பாவங்கள் இல்லை - அன்போடு பற்றக் கூடிய வழிபாடுடையவர்களுக்கு வினை இராது, முற்றும் மவுனத்தோர்க்கு வருகலகம் இல்லை—சிறிதுமே பேசாமல் இருப்பவர்களுக்கு வரக்கூடிய கலகம் ஒன்றும் இல்லை,

துஞ்சாப் பவனத்தோர்க்குப் பயம் இல்லை-தூங்குதல் இல்லாத விண்ணுலகத்தாருக்கு அச்சமே இல்லை.

(க - து.) வேலை செய்பவர்கட்கு வற்கடமும், கடவுளை வழிபடுபவர்கட்குத் தீவினையும், பேசாமலே இருப்பவர்கட்குக் கலகமும், தேவர்கட்கு அச்சமும் இல்லை.

ஆம் - அசை. உற்றதொழில் - தமக்கிணக்கமான தொழில்; தீதல்லாத நல்ல தொழிலுமாம்; தம்மைத் தளர்ச்சியில் விட்டு விடாத நிலை பேறுடைய தொழில் என்றலு மொன்று. அன்போடு செய்தல் வேண்டும் என்பதற்குப் 'பற்றுசெபம்' என்றார். அன்பைப்பற்றுஞ் செபத்தோர்க்கு என்று கொள்க. தேவர்கள் இமையாராதலின் 'துஞ்சா' என்றார்.

"இமையாரின் வாழினும்"

என்பது குறள். (கஃ)

ஆபத்து வந்தா லரும்பொருடான் வேண்டுமே
ஆபத்தேன் பூமா தருகிருந்தால்—ஆபத்து
வந்தா லவளு மருவாம லெப்பொருளும்
அந்தோ வுடன்போ மறி.

(இ - ள்) ஆபத்து வந்தால் - ஒருவனுக்கு இக்கட்டான காலம் வந்தால், அரும்பொருள்தான் வேண்டும் - அருமையான செல்வமே வேண்டப்படும். பூமாது அருகு இருந்தால் ஆபத்து என் - மலர்மகள் உடன் இருக்குமானால் அவ் விடுக்கான காலம் என்வரும் (என்றால்), ஆபத்துவந்தால் - இடுக்கண் நேரிட்டால், அவளும் மருவாமல் - அத்திருவினளுஞ் சேராது, அந்தோ எப்பொருளும் உடன் போம் - ஐயோ எல்லாப் பொருள்களும் அவளோடுபோய் விடும், அறி - நீ இதனைத் தெரிந்து கொள்.

(க - து.) இக்கட்டுவரும்போது எவரும் உதவமாட்டார்; இறைவனே உதவுவான்.

ஏ - அசை, தான் தேற்றப்பொருள் கொண்டு நின்றது. இடுக்கான காலம் வந்தால் பொருள் வேண்டும்; ஆனால் அவ்விடுக்கான காலம் வரும்பொழுதே பூமகளும் நீங்கி விடுதலால், அக்காலத்தில் வேண்டப்படும் பணமேயன்றி வேறு எப்பொருள்தான் தங்கும்? எனவே, அக்காலத்தில் ஏதும் இராது என்றபடி. என்றால் என்றொருசொல் வருவிக்க. 'பூமாது மருவாமல் எப்பொருளும் போம்' என்பது மழை பெய்யாமல் நெல் சாவியாம் என்பதிற் போல வந்தது. (சகு)

இன்ன றரும்பொருளை யீட்டுதலுந் துன்பமே
பின்னதனைப் பேணுதலுந் துன்பமே—அன்ன
தழித்தலுந் துன்பமே யந்தோ பிறர்பால்
இழத்தலுந் துன்பமே யாம்.

(இ - ள்.) இன்னல் தரும் பொருளை ஈட்டுதலுந் துன்பமே - துன்பத்தைத் தரக்கூடிய செல்வத்தைச் சேகரித்தலுந் துன்பமே, பின் அதனைப் பேணுதலும் துன்பமே - அங்ஙனம் சேகரித்த பின்பு அச்செல்வத்தைக் காப்பாற்றுதலுந் துன்பமே, அன்னது அழித்தலும் துன்பமே - அப்படிப்பட்ட பொருளைச் செலவழித்தலுந் துன்பமே, அந்தோ பிறர்பால் இழத்தலும் துன்பமே ஆம் - ஐயா பிறரிடத்தில் அதனைக் கொடுத்து இழந்து போதலுந் துன்பமே யாகும்.

(க - து.) பொருட் பற்றுக் கூடாது.

ஏகாரங்கள் தேற்றம். உம்மைகள் எச்சம். பொருளுக்கு இன்னல் தரும் என்னும் அடைமொழி கொடுத்தது, அப்பொரு

ளைப் பெற்றவனுக்குத் தீயொழுக்கமுந் தீதுமான பொல்லாத பிறவித் துன்பங்களை யெல்லாம் அது தருதலாலென்க. 'அங்ஙனந் துன்பந்தரும் அச்செல்வம் எளிதாகவேனுஞ் சேர்ந்து இருந்து செலவழிந்து கொடுக்கப்படுகின்றதோவென்றால், அது தானு மில்லையே; ஆதலால் பொருட்பற்று எதற்கு' என்று இச்செய்யுள் அறிவுறுத்தியபடியாம். பேணுதல் என்பதைப் பொருள் அழிவுறாதபடி பாதுகாத்தற்கு மட்டுமேயன்றி அதனைப் பெருக்குதற் குங் கொள்க.

"ஆற்றின் அளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கு நெறி" (குறள், வலியறிதல், ௭)

என்பதுங் காண்க. எனவே, அதனை வளர்த்தலுந் துன்பமாம் என்பது. அன்னது என்றது, ஈட்டுதலாலும் பேணுதலாலும் பெருந் துன்பம் தரக்கூடிய செல்வம் என்று குறித்தற்கு. மற்ற மூன்றை விடப் பிறர்பால் இழத்தல் பெருந்துன்பந் தருதலால், அதனை புணர்த்த அந்தோ ஆம் என்பன தரப்பட்டன. (௬௬)

தானே புரிவினையாற் சாரு மிருபயனுந்
தானே யநுபவித்த றப்பாது—தானூறு
கோடிகற்பஞ் சென்றாலுங் கோதையே செய்தவினை
நாடிநிற்கு மென்றார் நயந்து.

(இ - ள்.) கோதையே - பெண்ணே! நூறு கோடி கற்பம் சென்றாலும் - அளவற்ற கோடி கோடி ஊழிகள் கடந்து விட்டாலும், செய்த வினை நயந்து நாடி நிற்கும் என்றார் - ஒருவனை அவன் செய்த வினைகள் விரும்பி எப்படியாவது தேடிச் சேர்ந்து நிற்கும் என்று பெரியார் சொல்லுவார்; ஆதலால் தானே புரிவினையால் சாரும் இரு பயனும் - ஒருவன் தானே செய்த வினையினால் வந்து சேரக்கூடிய இரண்டு பயன்களும், தானே அநுபவித்தல்

தப்பாது - செய்த அவன் தானே அடைந்து நுகர்தல் தப்பாதாகான்.

(க - து) தீவினை செய்யலாகாது.

முதலிரண்டெகாரங்கள் தேற்றம். பின்னது இசை நிறை. நூறு கோடி என்றது காலக்குறிக்கு. கற்பம் - ஊழிக்காலமாதல், "கற்பங்கடோறும் நடஞ்செய் கழலடைந்தோர்" (கோயிற்புராணம்; பாயிர - உக) என்பதால் விளங்கும். பயன் இரண்டென்றமையின் புரிவினையும் இரண்டாயின. அவை நல்வினை தீவினையாம். அவற்றின் இருபயனும் முறையே இன்பதுன்பங்கள். இவ்விரண்டு பயன்கள் எப்படியாயினுஞ் செய்தவனை நாடி நிற்கும் என்றார். இச்செய்யுட் பொருட்கு ஏற்பக்

"தாந்தாமுன் செய்தவினை தாமே அநுபவிப்பார்
பூந்தா மரையோன் பொறிவழியே - வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்றாய்
வெறுத்தாலும் போமோ விதி" (நல்வழி, உ0)

"பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று
வல்லதாம் தாய்நாடிக் கோடலைத் - தொல்லைப்
பழவினையும் அன்ன தகைத்தே தற்செய்த
கிழவனை நாடிக் கொளற்கு" (நாலடியார், பழவினை, க)

"பரியினும் ஆகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம" (குறள், ௩௭௬, ௬)

என்று ஆன்றோர் பிறர் செய்யுட்களிலும் வந்திருத்தல் காண்க.

தூய வறிவினர்முன் சூழ்துன்ப மில்லையாஞ்
சாயும் விடங்கருடற் கில்லையாட்—ஆயுங்கால்
பன்முகஞ்சேர் தீமுன் பயில்பஞ் சில்லையாந்
துன்முகனுக் குண்டோ சுகம்.

(இ - ள்.) ஆயுங்கால் - ஆராய்ந்து பார்க்குமிடத்து, காயும் விடம் கருடற்கு இல்லை - கொல்லுகின்ற நஞ்சு கருடனுக்கு ஒன்றுஞ் செய்வதில்லை, (அதுபோல) தூய அறிவினர் முன் சூழ் துன்பம் இல்லை - நல்ல அறிவுடையோர் முன் வருந் துன்பம் ஒன்றுஞ் செய்வதில்லை; பன்முகம் சேர் தீ முன் - நாலாபக்கங்களிலுஞ் சுடர் காலு நெருப்பின் முன், பயில் சீதம் இல்லை - அணுகுங் குளிர்ச்சி ஏதும் இல்லை. (அதுபோல) துன்முகனுக்கு உண்டோ சுகம் - தீயோருக்கு இன்பம் இல்லை.

(க - து) அறிஞர்க்குத் துன்பமில்லை; மூடர்க்கு இன்பமில்லை.

ஆம்-அசை. தூய அறிவினர் - நிலைதிரியாத களங்கமற்ற நல்லறிவினர். காய்தல் - கொல்லுதல், "தந்தையைக் காயில் என் பெறுவாயென" (மாபாத. கக. என்பது திருவிளையாடல். பன்முகம் - நாலாபக்கமும். பயில் சீதம்-அணுகுங் குளிர்ச்சி. பயிலுதல்-அணுகுதல், நெருங்குதல் அதாவது செறிதல் என்னும் பொருளிற் "பயில் இதழ்க்கமலமும்" (மணிமேகலை, உ௪:௩௧) என்றும், "கதிர் நுழை கல்லா மரம்பயில் கடிமிளை" (புறநானூறு, உக : ரு) என்றும் ஆன்றோர் நூல்களில் வந்திருத்தல் கண்டுகொள்க. துன்முகன்-தீயமுகமுடையவன்; அவன் தீயோன்; இச்செய்யுள், இரண்டுகருத்துக்களும் அவற்றிற்கேற்ப இரண்டுவமங்களுங் கொண்டது. (௫௮)

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லென்றிவரோ
டின்புறத்தா னுண்ட லினிதாமே — அன்புறவே
தக்கவரை யின்றித் தனித்துண்ட றன்கவர்மீன்
கொக்கருந்த லென்றே குறி.

(இ - ள்.) தென்புலத்தார் - தென் புலத்துத்தேவர், தெய்வம் - கடவுள், விருந்து - விருந்தினர், ஒக்கல் - சுற்

றத்தார், என்று இவரோடு - என்று சொல்லப்பட்ட இந்த ஐந்து பேரோடு, இன்புற - இன்பம் மிகும்படி, தான் உண்டல் இனிது-ஒருவன் தான் உண்பது நல்லது. அன்பு உற - அன்பு உண்டாகும்படி, தக்க அவரை இன்றி - அவ் உண்டற்குத் தகுந்தவர்களான அந்த ஐந்து பேரும் இல்லாமல், தனித்து உண்டல் - தனியாக இருந்து உண்ணல், கொக்கு தான் கவர்மீன் அருந்தல் என்றே - கொக்கு தான் கவர்ந்த மீனைத் தனியேயிருந்து தின்னுதலோடொக்கும் என்றே, குறி - நீ எண்ணுவாயாக.

(க - து) தென்புலத்தார் முதலிய நால்வருந் தானுமாக ஈட்டும் பொருளை ஒருவன் பயன்படுத்தல் வேண்டும்.

ஆம், ஏ அசைகள். ஈற்றில் ஏகாரம் தேற்றம். முதலிரண்டடிகள் திருவள்ளுவர் திருமொழியைத் தழுவியெடுத்து அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் பொருள்களைத்

"தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தான் என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை" (இல்வாழ்க்கை, ந)

என்னுந் திருக்குறளிலும் அதற்கு உரை கூறிய ஆசிரியர் பரிமேலழகியார் உரையிலுங் கண்டு கொள்க. தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் என்பவரோடு உண்ணுதலில் மட்டும் இன்பம் மிகுதலால், 'இன்புறத் தான் உண்டல்' என்றார். உற - மிக. அந்நால்வரும் உடனிருந்து உண்ணுதலால் உண்பிப்பான் றனக்கு அன்பு உண்டாகி அது மிகுதலின், "அன்புறவே தக்க அவரை இன்றி" என்றார். தக்க அவரை, நிலைமொழி இறுதி அகரந் தொகப் புணர்ந்தது. கொக்கு அங்ஙனம் அருந்துதல் தாழ்வு குறிப்பதொன்றாதலால், அங்ஙனந் தனித்துண்ணல் விரும்புவானுந் தாழ்ந்தவன் என்றபடியாம். (௩௧)

இந்திரவி நீள்கிரண மெங்கு நிறைந்தாலும்
இந்திரவி காந்தத் திலகுமே—இந்திரவி
நேத்திரத்தோ னெங்கு நிறைந்தாலு நித்தனருள்
நேத்திரத்தோர் பாலே நிறைவு.

(இ - ள்.) இந்து இரவி நீள்கிரணம் - திங்கள் ஞாயிறு என்பவைகளின் நீண்ட ஒளிகள், எங்கும் நிறைந்தாலும் - உலகமெங்கும் நிறைந்திருந்தாலும், இந்து இரவி - அந்தத் திங்கள் ஞாயிறுகளின் ஒளிகள், காந்தத்து இலகும் - காந்தக்கல்லினிடத்தில் மிகவும் விளங்கும், (அதுபோல) இந்து இரவி நேத்திரத்தோன் - திங்கள் ஞாயிறு என்னும் இரண்டையுமே இரண்டு கண்களாக உடைய கடவுள், எங்கும் நிறைந்தாலும் - உலகெங்கும் நிறைந்திருந்தாலும், நித்தன் நிறைவு - அக்கடவுளின் மிகுந்த விளக்கம், அருள் நேத்திரத்தோர்பாலே - அருட் கண்ணுடைய அடியவர்களிடத்தே தான் உண்டு.

(க - து) இறைவன் தன் அடியாரிடத்தில்மட்டும் விளங்கி நிற்பன்.

ஏ - அசை. காந்தக்கல் - அவ் ஒளியினை மிகுத்துக் காட்டுங் கல், இதனைக் காந்தமணி யென்றுங் கூறுப. கடவுளுக்கு உலகத்தையே ஒருடம்பாகக் கூறுவது மரபாதலால், திங்களும் ஞாயிறும் அவருக்குக் கண்களாயின. அருள் நேத்திரத்தோர் - அருட்கண்ணோர். கடவுள் அருள்வழியாக எல்லாவற்றையும் பார்ப்பவர்; அவர் அடியார். "அருளால் எவையும் பார் என்றான்" என்பது தாயுமானார் பாடல். "அருட்கண்ணோர் கண்ணுக்கு இரவிபோல் நிற்கும் அரன் எய்ந்து" என்னும் சிவஞானபோதத்துத் திருமொழியில் இச்செய்யுட் பொருள் நன்கு காணப்படுகின்றது காண்க. இச் செய்யுளைப் போலவே,

இந்நூலின் ௬௰-ம் செய்யுளும் ஒரு கருத்தின் மேலதாய் வந்திருக்கின்றது. (௫௰)

தாமோ தரன்முதலோர் சாதனூல் சாற்றுவதும்
பூமேலோர் பொன்றுவதுங் கண்டோமே—நாமுடலை
நேசிப்ப தென்றோ நிலையாகுஞ் சங்கரனைப்
பூசிப்ப தென்றோ புகல்.

(இ - ள்.) தாமோதரன் முதலோர் சாதல் நூல் சாற்றுவதும் - திருமால் முதலிய தேவர்கள் இறத்தலைப் பற்றி நூல்கள் சொல்வதையும், பூமேலோர் பொன்றுவதும் - நில உலகத்திலுள்ள மக்கள் முதலான உயிர்கள் செத்துப் போவதையும், கண்டோமே - (முறையே காதாலுங் கண்ணாலும்) தெரிந்து கொண்டோமே. (அப்படியிருந்தும்) நாம் உடலை நேசிப்பது என்றோ - நாம் உடம்பின்மேற் பற்றுவைப்பது எதற்காகவோ, சங்கரனைப் பூசிப்பதே நிலையாகும் என்று புகல் - சிவபெருமானை வழிபடுவதே நிலையானதென்று சொல்.

(க - து) நிலையில்லாத உடம்பின்மேற் பற்றுவையாது அவ்வுடம்பைக் கருவியாகக் கொண்டு நிலையான இறைவன் வழிபாட்டைச் செய்தல் வேண்டும்.

பூசிப்பது என்றோ என்பதைப் பூசிப்பதே என்று என ஏகாரத்தைப் பிரித்துக்கூட்டித் தேற்றப் பொருட் படுத்துக. தாமோதரன் முதலோர் இறந்து அழிந்து போதலை,

"நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
ஆறு கோடி நாராயணர் அங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரர்
ஈறி லாதவன் ஈசன் ஒருவனே"

(பொது, ஆதிபுராணத் திருக்குறுந்தொகை, ௩)

"எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண் தோணோக்கம்"

என்னுந் தேவார திருவாசகங்களால் உணர்ந்து கொள்க. சாதல் என்பதற்கு இரண்டாம் வேற்றுமை உருபு விரிக்க. பொன்றுதல்-அழிந்து இறந்துபடுதல், "பொன்றுங்காற் பொன்றாத் துணை" (அறன்வலியுறுத்தல், கூ) என்பது திருக்குறள். 'சங்கரனைப் பூசிப்பதே நிலையாகும் என்று புகல்' என முடிக்க. (கூக)

அரசி னிலைபதனி னக்கிரத்தி னின்று
விரைய விழுதுளியே போலும்—புரையுடைய
ஆக்கைவிடா முன்ன மரன்பாதம் பூசித்தல்
நோக்கனன் றென்றே நவல்.

(இ - ள்.) அரசின் இலைபதனின் அக்கிரத்தின் நின்று-அரசிலையின் நுனியிலிருந்து, விரைய விழு துளியே போலும் - விரைவாக விழுகின்ற நீர்த்துளியைப்போல, புரை உடைய ஆக்கை விடாமுன்னம் - குற்றமுடைய உடம்பு நீங்காததன் முன்னமேயே, அரன்பாதம் பூசித்தல் - சிவபெருமான் திருவடியை வழிபடுதலும், நோக்கல் - வழிபட்டபின் அதனைக் கண்ணாரக்கண்டு மகிழ்தலும், நன்று என்றே நவில் - நன்மை யென்றே சொல்.

(க - து.) இறந்து போதற்கு முன்பே இறைவனை வணங்கிக் கொள்ள வேண்டும்.

ஏகாரம் தேற்றம். அக்கிரம், கிலாக்கிரம் குசலாக்கிரம் என்று வழங்குதலறிக. அரசிலையில் இருக்கும் நீர்த்துளி அதன் கண் தங்காமல் அரன் நுனிவழியாகக் கீழ் வீழ்ந்து விடுதல் போலவே, உடம்பிலுள்ள செந்நீருந் துளித் துளியாக அவ்வுடம்பின் ஒருபுறப்பால் ஒழுகிச் சுண்டிக் கேடுறுதலான புரை யுடையது உடம்பு என்றார். இங்ஙனங் குறிப்பிட்டது உடம்பின்

கொழுப்பு அது கழிதற்கான ஒரு புணர்ச்சி யொழுக்கத்தை நினைப்பிக்கும் புரையுடைமையின் என்க. இதனை ஆசிரியர் வெளிப் படையாகக் கூறுமற் 'புரை' என்று குறிப்பாகவே வைத்து உவமையால் உணரச்செய்தார். உடல் விடு முன்னமே இறை வனைத் தொழல்வேண்டுமென்பது.

"கால மான கழிவதன் முன்னமே
ஏலு மாறு வணங்கிநின் றேத்துமின்"

என்னுந் தேவாரத்தால் விளங்கும். பூசித்தல் நோக்கல் கூறின மையின், பூசித்துப் பின் நோக்குவார்க்கு உள்ளங் கசிதலும், பின் பாடுதல் முதலாயினவும் நேர்தல் இயல்பாதலால் அவைகளெல் லாவற்றையும் அவ்விரண்டின் வரிசையிற் கொள்க. முன் செய் யுளிற் கூறிய கடமையை இச்செய்யுள் விரைந்து செய்யுமாறு வற்புறுத்திற்று. (௫உ)

சத்தியத்தை வெல்லா தசத்தியந்தா னின்பொறையை
மெத்திய கோபமது வெல்லாது—பத்திமிகு
புண்ணியத்தைப் பாவமது வெல்லாது போரரக்கர்
கண்ணனைத்தான் வெல்லுவரோ காண்.

(இ - ள்.) போர் அரக்கர் கண்ணனை வெல்லுவரோ - சண்டை செய்கின்ற இராக்கதர்கள் கண்ணபிரானை வென்று விடுவார்களோ? (வெல்லமாட்டார்கள். அதுபோல) அசத் தியம் சத்தியத்தை வெல்லாது - பொய் மெய்யை வெல்ல மாட்டாது, மெத்திய கோபமது நீள் பொறையை வெல் லாது - மிகுந்த சினம் மேலான பொறுமையை வெல்லாது, பத்தி மிகு புண்ணியத்தைப் பாவமது வெல்லாது - அன்பு மிக்க நல்வினையைத் தீவினை வெல்லாது.

(க - து.) நன்மையைத் தீமை வெல்லமாட்டா.

காண்-முன்னிலை அசை. ஓ - வினா. நீள்-மேன்மையின் மிகுந்தமைக்கு. மெத்திய - அளவின் மிகுந்தமைக்கு. கோபமது பாவமது, என்பவற்றிற்கு அது பகுதிப்பொருள் விகுதி. மெத்த-மிக்க என்பதன் சிதைவு. நல்வினை யென்பது இறைவன்பாற் கொள்ளும் மெய்யன்பு நிலையேயாதலாற் “ பத்தி மிகு புண்ணியம் ” என்றார். போரரக்கர் என்றது, சண்டையே செய்வாராய் அதிற்பழக்கம் மிகுந்த அரக்கருங் கண்ணனை வெல்ல மாட்டார் என்பதற்கு. கண்ணன் - ஏதுப்பெயர். இச்செய்யுள் ஒருவமை கொண்டு மூன்று கருத்துகளை அறிவுறுத்திற்று. இதன் பொருள்

“வெட்டெனவை மெத்தெனவை வெல்லாவாம் வேழத்திற்
பட்டுருவுங் கோல்பஞ்சிற் பாயாது—நெட்டிருப்புப்
பாறைக்கு நெக்குவிடாப் பாறை பசுமரத்தின்
வேருக்கு நெக்கு விடும்”

என்னும் நல்வழியின் கருத்தோடொத்து நிற்கின்றது. (௩௫)

பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பேறலினோர்
நற்புதல்வ னைப்பெறுத னன்றாமே—பொற்கொடியே
பன்றிபல குட்டி பயந்ததனா லேதுபயன்
ஒன்றமையா தோகரிக்கன் றோது.

(இ - ள்.) பொற்கொடியே - பொன்னாலான கொடியைப்போலிருப்பவளே, பன்றி பல குட்டி பயந்ததனால் ஏதுபயன் - பன்றி பல குட்டிகளைப் பெற்றதனால் என்ன பயன்? (ஒன்றுமில்லை) கரிக் கன்று ஒன்று அமையாதோ - யானைக்கு அதன் கன்று ஒன்று போதாதோ, ஓது - நீ சொல், (ஆகலால்) பொற்பு அறிவு இல்லாத பல புத்திரரைப் பேறலின் - நல்ல அறிவில்லாத பிள்ளைகள் பலரைப் பெறுதலினும் - ஓர் நற்புதல்வனைப் பெறுதல் நன்று

ஆம். நல்லறிவுடைய ஆண் பிள்ளை ஒன்றைப் பெறுவது நன்மையாகும்.

(க - து.) அறிவுடைய மக்களே விரும்பத்தக்கவர்.

பொற்பு அறிவு - அழகான அறிவு. "கல்வியழகே அழகு" என்றமையால், அங்ஙனம் அழகுதரும் அறிவென்க. அவ்வறிவு நல்லறிவு. பெறலின் என்பது முதல் நீண்டது. பொற்கொடியே, அன்மொழித்தொகை விளியுருபேற்றது. பல குட்டிகள் பயப்பதிற் பன்றியே முதல் நிற்பது. அங்ஙனமே ஒன்று பயத்தலிற் கரியும் என்க. பயத்தல்-பயன்தரல். நன் மக்களைப் பெறுதலும் மக்கட் பிறப்பாலாகும் பயன்களுள் ஒன்றாமாதலின், அச்சொல்லால் அதனைக் குறிப்பது மரபு. கரிக்குக்கன்று என்க. அறிவில்லாத பலரைப் பெற்றெடுப்பதினும் அறிவுடைய ஒருவனைப் பெறுவது நன்மைதரும் என்பது. ஏனென்றால், "மடமாக்கள் பொன்றிலென் பொன்றாக்கா லென்" (நாலடியார், புல்லறிவாண்மை, ௩) என்று ஆன்றோர்கள் ஏசுதலின் என்க. (௫௪)

அத்தி மலரு மருங்காக்கை வெண்ணிறமுங்
கத்துபுனல் மீன்பதமுங் கண்டாலும்—பித்தரே
காணார் தெரியற் கடவுளருங் காண்பரோ
மாணார் விழியார் மனம்.

(இ - ள்.) பித்தரே - பெண் மயக்குப் பிடித்த பித்தர்களே, அரும்-பார்ப்பதற்கு அருமையான, அத்திமலரும்-அத்திப் பூவும், காக்கை வெண்ணிறமும் - காக்கையின் வெள்ளை நிறமும், கத்துபுனல் மீன்பதமும் - ஒலிக்கின்ற கடலில் உள்ள பெரு மீன்களின் கால்களும், கண்டாலும் - ஒருகாற் பார்க்க இயன்றாலும், (பெண்களின் நெஞ்சினைப்பற்ற நம்மால் அறியமுடியாது. நாம் மட்டுமா என்றால்) காண் ஆர் தெரியல் கடவுளரும் - மணம் பொருந்திய

மாலைகளையுடைய தேவர்களும், மான் ஆர் விழியார் மனம் - மான் போலும் மருண்ட பார்வை மிக்க கண்களையுடைய அப்பெண்களின் நெஞ்சத்தை, காண்பரோ - காண்பார் களோ? (அவருங் காணமாட்டார்.)

(க - து.) பெண்மக்கள் மிக ஆழ்ந்த நினைப்பும் மறைந்த ஒழுக்கமும் உடையவர்.

அரும் என்பதை எல்லாவற்றிற்குங் கூட்டிக்கொள்க. அது மலர் முதலியவைகளின் அருமையை உணர்த்தி நின்றது. கந்தும் என்னுங் குறிப்பால், புனல் என்பதற்குக் கடல் என்று பொருள் கூறப்பட்டது. அஃது ஆகு பெயர். கண்டாலும் என்பது காண மாட்டார் என்பதைக் காட்டிற்று. கான் - மணம். கடவுளர் தேவ ருக்குப் பெயராய் வருதலைக் "கடவுளர் அதனை நோக்கிக் கரங் குவைத் திரங்கலுற்றார்." (தாரக, ௰௯) என்னுங் கந்தபுராணத்துட் காண்க. (௫௫)

காளவிடப் பாந்தள் கருடனையுங் கட்டுமோ
வாளெரியைக் கட்டுமோ வன்கயிறு—நீளும்
பவமருளும் பாசம்வெம் பஞ்சேந் திரியஞ்
சிவயோகி யைப்பிணியா வே.

(இ-ள்,) காளவிடம் பாந்தள் கருடனையுங் கட்டுமோ - கருமையான நஞ்சையுடைய பாம்பு கருடனைக் கட்டுமோ? (கட்டாது); வன்கயிறு வாள் எரியைக் கட்டுமோ - வலிய கயிறு ஒளி மிக்க நெருப்புக் கொழுந்தைக் கட்டுமோ ! (கட்டாது. அவைபோல) நீளும் பவம் அருளும் பாசம் மிகுந்து கொண்டேயிருக்குந் தீவினையைக் கொடுக்கும் மலங்களும், வெம் பஞ்சேந்திரியம் - அம்மலங்கட்கு உதவி யாயிருக்குங் கொடுமையான ஐம்பொறிகளும். சிவயோகி

யைப் பிணியா - சிவத்தை நோக்கித் தவம்புரியும் அடியார்களைத் துன்புறுத்தா.

(க-து.) சிவனடியார்களுக்கு இவ் வுலகத்துன்பங்கள் கிடையா.

ஏ. அசை. காளம் - கருமை. இது, "காளம் ஆகு இருளை" (மண்மக, ககசக) என்னுஞ் சிந்தாமணியாலும், அதற்குக் "கருமை மேன் மேலும் பெருகாநின்ற இருளை" என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் எழுதிய உரையாலும் விளங்கும். பவங்கொடுக்கும் பாசத்தின் கொடைத்தொழில் அருளும் என்றது இழிவு சிறப்பு. இறைவனது அருள் விளக்கத்தோடு நெஞ்சம் பொருந்தி நெகிழும் பெரியார்களுக்கு மலத்தாலும் ஐம்பொறியாலும் எய்துந் துன்பந் துன்பமாகத் தோன்ற மாட்டாதாதலின், "சிவயோகியைப் பிணியா" என்றார். இவ்வாறான அவரியல்பினை,

"உடற்கு வருமிடர்நெஞ்சு ஓங்குபரத்து உற்றோர்
அடுக்கும் ஒருகோடி யாக - நடுக்கமுறார்" (நன்னெறி, உக)

என்று சிவப்பிரகாசரும் அருளுதல் காண்க. அடியார்க்கு உலகத் துன்பம் ஒன்றுஞ் செய்யாது என்பதை இச்செய்யுள் உவமைகளையே வேறு முறையிற்கொண்டு மூன்னும் (சகூ) வந்தது. (ருகூ)

புத்தியொடு முத்திதரும் புண்ணியத்தா லன்றியே
மத்தமிகு பாவத்தால் வாழ்வாமோ—வித்துபயிர்
தாயாகி யேவளர்க்குந் தண்புனலா லல்லாது
தீயால் வளருமோ செப்பு.

(இ - ள்.) வித்து பயிர் - விதைத்துண்டாகும் பயிர், தாயாகி வளர்க்கும் தண்புனலால் அல்லாது - தாயைப் போலவேநின்று தன்னை வளர்க்குங் குளிர்ச்சியான தண்ணீரால் விளைவதல்லாமல், தீயால் வளருமோ - நெருப்பினால் விளையுமோ, செப்பு - நீ சொல், (அதுபோல) புத்தியொடு

முத்திதரும் புண்ணியத்தால் அன்றி - அறிவோடு அவ் வழியின் பயனான வீடுபேற்றையுங் கொடுக்கும் நல்வினையா லல்லாமல், மத்தம்மிகு பாவத்தால் - அறியாமை மிகுகின்ற தீவினையால், வாழ்வு ஆமோ - நல்வாழ்வு உண்டாகுமோ? (தீவினையால் உண்டாகாது. நல்வினையினாலேயே நல் வாழ்வு உண்டாகும என்பது.)

(க - து.) இம்மையிலும் மறுமையிலும் வேண்டப்படும் நல் வாழ்வு நல்வினையினாலேயே வரும்.

ஏ - அசை. அறிவு பெற்று அது கொண்டு வீடுபெற வேண்டு மாதலால் 'புத்தியொடு முத்திதரும்' என்று முன்னும் பின்னுமாகக் கூறினார். அப்புத்தி முத்தியென்பன இங்குக் குறிப்பாக இம்மை மறுமை இன்பங் குறித்தன. "ஞானத்தால் வீடு" என்று (அ, உஎ) சிவஞானசித்தியார் கூறுதல் காண்க. மத்தம் - மதம்; அது விரித் தல் விகாரம்; பொருள் அறியாமை என்பது. மணம் அடை மொழி தராது வாளா கூறப்பட்டால் அது நன்மணத்தையே உணர்த்துதல் போல, இங்கு அடைமொழி தராது இடப்பட்ட வாழ்வென்னுஞ் சொல்லும் நல்வாழ்வைக் குறித்தது. நல்வாழ் வாவது இன்பவாழ்வு. அது நல்வினையினாலேயே உண்டாம் என் பது. 'வித்து பயிர்' வினைத்தொகை. வித்து வினைச் சொல்லாய் வருதலை "வித்திய உழவர் நெல்லொடு பெயரும்" (ஐங்குறுநூறு, மருதம், க) என்பதிற் காண்க. ஓகார மிரண்டும் வினா. (௩எ)

சிவனே சிவனே சிவனேயென் பார்பின்
சிவனுமையா ளோடுந் திரிவன்—சிவனருளால்
பெற்றவிளங் கன்றைப் பிரியாமற் பின்றொடரு
சுற்று பசுப்போற் றொடர்ந்து.

(இ - ள்.) சிவன் அருளால் - சிவபிரான் திருவருளி னாலே, சிவனே சிவனே சிவனே என்பார் பின் - சிவபெரு

மானே சிவபெருமானே சிவபெருமானே என்று அலறு பவர்களின் பின்னே, பெற்ற இளம் கன்றைப் பிரியாமல் பின் ஓடிச் சுற்று பசுப்போல் - தான் பெற்ற இளமை யாகிய கன்றைப் பிரியாமல் அதன்பின் ஓடி அதனைச் சுற்றிச் சுற்றித் திரிகின்ற ஆவைப்போல, தொடர்ந்து - இடைவிடாமல், சிவன் - சிவபெருமான், உமையாளோடும் - அருளுருவாகிய உமையம்மையோடும், திரிவன் - கூடவே திரிந்து கொண்டிருப்பான்.

ஏகாரங்கள் - விளி. 'என்பார்' என்று பொதுச் சொல்லில் விறுத்தினர், சிவனே சிவனே சிவனே என்று வாயாற் கேட்கச் சொல்லுதலே யன்றி அதனைக் கேட்கவொட்டாமற் சொல்லுதலும், எண்ணுதல் முதலியவைகளும் உண்டாதலின். சிவபிரான் அருளுக்கு இருப்பிடம் உமையம்மையாதலாலும், அவ்வருளம்மை இல்லாமல் அவன் இல்லையாதலாலும், இவ்வுண்மையை 'அருளுண்டாமீசற்கு அது சத்தியன்றே: அருளும் அவனன்றியில்லை; அருளின்றவனன்றே யில்லை' என்று சிவஞானபோதம் எடுத்துரைப்பதாலும் சிவனும் உமையும் ஒருவரையொருவர் பிரியார் என்க. சிவனருளால் சிவனை வணங்கும் உண்மையை "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்று மாணிக்கவாசகர் அருளுதல் காண்க. (கஅ)

தாமுங்கொ டார்கொடுப்போர் தம்மையுமீ யாதவகை
சேமஞ்செய் வாருஞ் சிலருண்டே—ஏமமிகுல்
இட்டுமலர் காய்கனிக ளீந்துதவு நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண்.

(இ - ள்.) தாமும் கொடார் - தாங்களும் ஒருவர்க்கு ஒன்று கொடுக்காமல், கொடுப்போர் தம்மையும் - கொடுக்கக்கூடிய ஈகை யியல்புடைய நன்மக்களையும், ஏமம் மிகுல்

இட்டு மலர் காய் கனிகள் ஈந்து உதவும் நல் மரத்தைக் கட்டும் உடைமுள் என - இன்பமான நிழலைக் கொடுத்து பூவுங் காயும் பழமுந் தந்து உதவக்கூடிய நல்ல மரத்தைச் சூழ்ந்த உடைவேல் முள்ளைப்போல, ஈயாத வகை சேமம் செய்வாரும் - கொடுக்காதபடி தடுப்பாரும், சிலர் உண்டு - சிலர் இருக்கின்றார்கள்.

(க - து.) கொடுத்தலைத் தடுத்தலாகாது.

காண் - முன்னிலையசை. 'தாமுங்கொடார்; கொடுப்போர் தம்மையும், உதவும் நன்மரத்தைக் கட்டும் முள்ளெனச் சேமம் செய்வாரும் சிலருண்டு' என்று முடிக்க. கொடார் என்பது முற்றெச்சம். சேமம் - காவல்; இப்பொருளுண்மை "தீங்கு புரிந்தவன் றன்னைச் சேமமுறக் கொண்டு போகி" (திருநாவு, கஉக) என்னுந் திருத்தொண்டர் புராணந் திரு உரையாற் றெளியப்படும். உடை என்பது ஒருவகையான முள் மிக்க வேலமரம்; இது குடை வேலமரம் என்றும் வழங்கும். (பிங்கல, ௩கஃ0) கொடையாளனுக்குப் பழமரம் உவமையாதலைப் "பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்" என்னுந் திருக்குறளிற் காண்க. (சுக)

ஆயுமலர்த் தேன்வண் டருந்துவது போலிரப்போர்
ஈயு மவர்வருந்தா தேற்றலறந்—தூயவிளம்
பச்சிலையைக் கீடமறப் பற்றி யரிப்பதுபோல்
அச்சமுற வாங்க லகம்.

(இ - ள்.) ஆயும் மலர்த் தேன் - வண்டினால் ஆராயப்படும் மலரில் உள்ள தேனை, வண்டு அருந்துவதுபோல் - அவ்வண்டு உண்பதுபோல, இரப்போர் - பிச்சையெடுப்போர், ஈயுமவர் வருந்தாது - கொடுப்பவர்கள் வருந்தாதபடி, ஏற்றல் அறம்-அவர் குறிப்பறிந்து பெறுதல் நல்லது; கீடம் தூய இளம் பச்சிலையைப்பற்றி அற அரிப்பதுபோல்-

புழு அழுக்கற்ற இளைய பச்சிலையைப் பிடித்து நின்று அதனை முழுதும் அரித்துவிடுவதுபோல, அச்சம் உற வாங்கல் அகம் - கொடுப்பவர்கள் அஞ்சும்படி வாங்குதல் தீது.

(க - து.) கொடுப்பவரை வருத்தாது வாங்குவது நன்று. வருத்தி வாங்குவது தீது.

வருந்தாதேற்றல் அறம் என்றமையின், அச்சமுற வாங்கல் மறம் அதாவது தீது ஆயிற்று. மற் குறிப்பால் அகம் என்பதற்குத் தீது என்று பொருளுரைக்கப்பட்டது. (கூ௰)

மாதா மரிக்கின் மகனாவி னற்சுவைபோம்
தாதா வெனிற்கல்வி தானகலும்—ஓதினுடன்
வந்தோன் மரித்துவிடில் வாகுவலி போமனையேல்
அந்தோ விவையாவும் போம்.

(இ - ள்.) ஓதின் - சொல்லுவோமானால், மாதா மாக்கின் மகன் நாவின் நல் சுவை போம் - தாய் இறந்துபோனால் பிள்ளைக்கு நாக்கின் நல்ல சுவைகள் கெட்டுப்போம், தாதா எனில் கல்வி அகலும் - தந்தை இறந்தான் என்றால் அப்பிள்ளைக்குக் கல்வி கெட்டுப்போம், உடன் வந்தோன் மரித்துவிடில் வாகுவலி போம் - உடன் பிறந்தோன் மரித்து விட்டால் தோள்வலி கெட்டுப்போம், மனையேல் - மனைவியே இறந்தாளென்றால், அந்தோ இவையாவும்போம் - ஐயோ நாவின் சுவை, கல்வி, தோள்வலி என்னும் இவை எல்லாம் கெட்டுப்போய் விடும்.

(க - து.) ஒருவனுக்குத் தாய் தந்தை உடன்பிறந்தான் என்பாரும் மனைவியும் இல்லாவிட்டால், அவனுக்கு முறையே உணவு, கல்வி, வெற்றி என்பனவும் இம்மூன்றுங் கெட்டுப் போம்.

மனைவி ஒரு குடும்பத்தின் பல துறைகளையும் ஏற்றுப் பொறுப்புடன் செய்யு நீரள் ஆதலின், அவளோடு இம்மூன்றுமே போமென்றார். அந்தோ, இரக்கச்சொல்; ஐயோ என்பது பொருள். இச்செய்யுட்பொருளையே,

“தாயோ டறுசுவைபோம் தந்தையொடு கல்விபோம்
சேயோடு தான்பெற்ற செல்வம்போம்”

என்றார் பிறரும். (௬௧)

ஓதுபொருள் கண்டோர்க் குறுமாசை நீதியிலாப்
பாதகரைக் கண்டோர்க்குப் பாவமாஞ்—சீதமலர்
கண்டோர்க் குறும்வாசங் கற்றமைந்த நற்றவரைக்
கண்டோர்க் குடனாங் கதி.

(இ - ள்.) ஓது பொருள் கண்டோர்க்கு ஆசை உறும் - உலகத்திலே சொல்லப்படுகின்ற செல்வத்தைப் பார்த்தவர்களுக்கு அதில் ஆர்வம் மிகும், நீதி இலாப் பாதகரைக் கண்டோர்க்குப் பாவம் ஆம் - ஒழுக்கமில்லாத தீயோரைக் கண்டவர்களுக்குத் தீது உண்டாகும். சீத மலர் கண்டோர்க்கு வாசம் உறும் - குளிர்ச்சியான பூக்களைப் பார்த்தவர்களுக்கு மணம் உண்டாகும், கற்று அமைந்த நற்றவரைக் கண்டோர்க்கு கதி உடன் ஆம் - படித்தடங்கிய பெரியாரைக் கண்டவர்களுக்கு நல்ல வழி உடனே உண்டாகும்.

(க - து.) நல்லாரைக் காண்பது நன்று.

கற்று அமைந்த - கற்று அடங்கிய. “அறிவோர்க்கழகு கற்றுணர்ந்தடங்கல்” என்பது வெற்றிவேற்கை. அது குறிக்கவே ‘கற்றமைந்த’ என்றார். கதி - வீடுபேறு. இதனைக் “கதியிழக்கினுங்

கட்டுரை இழக்கிலேம்" என்னும் அரிச்சந்திர புராணத் தொடரிற்காண்க. இங்கே, இது நல்வழியை உணர்த்திற்று. (கஉ)

பாவிதனந் தண்டிப்போர் பாலாகு மல்லதருள்
மேவுசிவ னன்பர்பான் மேவாதே—ஓவியமே
நாயின்பா லத்தனையு நாய்தனக்கா மன்றியே
தூயவருக் காகுமோ சொல்.

(இ - ள்.) ஓவியமே-படத்திலெழுதப்பட்ட பொம்மை போன்றவளே! நாயின்பால்அத்தனையும் நாய் தனக்கு ஆம் அன்றி - நாயினுடைய பால் அவ்வளவும் நாய்க்கே ஆமல்லது, தூயவருக்கு ஆகுமோ சொல் - தூய்மையா யிருக்கும் மக்களுக்கு ஆகுமா நீ சொல். (அதுபோல) பாவி தனம் தண்டிப்போர்பால் ஆகுமல்லது - தீயவர்களின் பணம் கண்டித்து வாங்குந் தீயவர்களிடத்திற் சேருமேயல்லாமல், அருள் மேவு சிவன் அன்பர்பால் மேவாது - இரக்கம் பொருந்திய சிவனடியார்களிடத்திற் சேராது.

(க - து.) சிவனடியார்கள் பணத்தை விரும்பமாட்டார்கள்.

நாய்தனக்கு தூயவருக்கு என்னுங் குறிப்பாற் பணத்தின் இழிவும் அழுக்குந் தெளியப்பட்டன. சிவனடியார் அப்பணத்தை ஒரு துன்பமாகவே எண்ணி அதனை வெறுப்பாரென்பது 'செல்வமென்னும் அல்லலிற் பிழைத்தும்' என்னுந் திருவாசகத்தால் விளங்கும். (கங)

பொன்னுங் கரும்பும் புகழ்பாலுஞ் சந்தனமுஞ்
சின்னம் படவருத்தஞ் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்று நலிந்தாலு முத்தமர்பால்
நற்குணமே தோன்று நயந்து.

(இ - ள்.) புகழ் - இனிமையானதென்று எல்லாராலும் புகழப்படுகின்ற, பொன்னும் கரும்பும் பாலும் சந்தனமும் - பொன் கரும்பு பால் சந்தனம் என்னும் இந் நான்கு நற்பொருள்களையும், சின்னம்பட வருத்தம் செய்தாலும் - நிலைமாறி வருந்தும்படி துன்புறுத்தினாலும், முன்னிருந்த நற்குணமே தோன்றும் - முன்னே இருந்த ஒளி, இனிமை, சுவை, மணம் என்னும் நல்ல இயல்புகளே மிகுந்து தோன்றும்; (அதுபோல) உத்தமர்பால்-நல்லோரிடத்து, நலிந்தாலும் - அவர் துன்புற்றாலும், நற்குணமே நயந்து தோன்றும் - நல்ல இயல்பே மிகவுந் தோன்றும்.

(க - து.) நல்லோர் எவ்வளவு வருந்தினாலும் அவர் நல்லியல்பு மாறாது. ஏ - தேற்றம். (௬௪)

வேசியரு நாயும் விதிநூல் வயித்தியரும்
பூசுரருங் கோழிகளும் பொன்னனையாய்—பேசிலொரு
காரணந்தா னின்றியே கண்டவுட னேபகையாங்
காரணந்தா னப்பிறப்பே காண்.

(இ - ள்.) பொன் அனையாய் - திருமகளைப்போன்ற பெண்ணே, பேசில்-சொல்லுமிடத்து, வேசியரும் - பொதுப் பெண்களும், நாயும் - நாய்களும், விதிநூல் வைத்தியரும் - மருத்துநூல் ஆசிரியர்களும், பூசுரரும் - பார்ப்பனரும், கோழிகளும் - கோழிகளும், ஒரு காரணந்தான் இன்றியே கண்ட உடனே பகைஆம் - ஒரேதுவும் இல்லாமலே பார்த்த உடனேயே பகைவராய்விடுவர்; காரணந்தான் அப்பிறப்பே காண் - அதற்கு ஏது அப்பிறப்பின் தன்மையே யாம்; இது காண்க.

(க - து.) வேசியர் மருத்துவர் பார்ப்பனர் என்பாரின் பகை யாந்தன்மை அவர்கட்குப் பிறப்பிலேயே உள்ளது.

நாயையுங் கோழியையும் எடுத்துக்காட்டியது வேசியர்க்கும் வயித்திியர்க்கும் பூசுராருக்கும் உள்ள தன்மையைப் புலப்படுத்துதற் காம் ஆதலின், அவ்விரண்டையும் உவமைகளாகக்கொள்க. (சுரு)

அன்னமனை யாய்குயிலுக் கான வழ கின்னிசையே
கன்னன்மொழி யார்க்கழகு கற்பாமே—மன்னுகலை
கற்றோர்க் கழகு கருணையே யாசைமயக்
கற்றோர்க் கழகுபொறை யாம்.

(இ - ள்.) அன்னம் அனையாய் - அன்னப்பறவை போல்வாளே! குயிலுக்கான அழகு இன் இசையே - குயிலுக்கு உள்ள அழகு இனிய இசையேயாவதுபோல, கன்னல் மொழியார்க்கு அழகு கற்பு ஆம் - இனிக்கும் மொழியையுடைய பெண்மக்களுக்கு அழகு கற்பேயாகும். மன்னு கலை கற்றோர்க்கு அழகு கருணையே ஆம் - நிலை பெற்ற கல்வியைப் படித்தவர்களுக்கு அழகு இரக்கமே யாகும்; ஆசை மயக்கு அற்றோர்க்கு அழகு பொறையே ஆம் - அவாவாகிய மயக்கத்தை விட்டவர்களுக்கு அழகு பொறுமையேயாகும்.

(க - து.) பெண்கள் கற்பாகவும், கற்றவர்கள் இரக்கமாகவும், துறவிகள் பொறுமையாகவும் இருத்தல்வேண்டும்.

மன்னுகலை என்றது அறிவு நூற்கல்வியை. மற்று உலக நூற் கல்வி காலத்துக்கேற்ப மாறுபட்டொழியுமாதலின், நிலைபெற்ற அறிவு நூற்கல்வியை 'மன்னுகலை' என்றார். பெண்ணாய்ப் பிறப்ப தாலும், படிப்பதாலும், துறப்பதாலும் ஆனபயன் முறையே கற்பும் இரக்கமும், பொறுமையுமே யாம் என்று உணர்த்தியபடி. (சுசு)

இதமகித வார்த்தை யெவர்க்கேனு மேலாம
இதமெனவே கூறலிக மன்றே—இதமுரைத்த
வாக்கினு லேரண்ட மாமுனியுஞ் சோழனொடு
தேக்குநீர் வீழ்ந்தொழிந்தான் சேர்ந்து.

(இ - ள்.) இதம் உரைத்த வாக்கினுல் - நன்மை பயக்கும் உரையைச் சொன்ன சொல்லால், ஏரண்டமாமுனியும் - ஏரண்டர் என்னும் மாபெரும் முனிவரும, சோழனொடு சேர்ந்து தேக்கு நீர் வீழ்ந்தொழிந்தான் - சோழ மன்னனோடு கூடத் தானும் தேங்கியிருந்த மிகுந்த நீரில் விழுந்து இறந்தார், (ஆதலால்) எவர்க்கேனும்-நல்லவர் தீயவர் என்று அவர் எவராயிருந்தாலும், இதவார்த்தை-நல்லவர்களுக்கு நல்லசொற்களையும், அகித வார்த்தை - தீயவர்களுக்குத் தீய சொற்களையும், மேலாம் இதம் எனவே - மேலான நன்மை என்றே, கூறல் - சொல்லுதல், இதம் அன்றே - நன்றன்றே.

(க - து.) நல்லவர்களுக்கு நல்லவாயுந் தீயோர்க்குத் தீய உரையாயுமே உரைத்தல் வேண்டும் என்னும் வரம்பின்றிக் காலம் இடம் முதலியவைகட்கு ஏற்றபடி சொற்களை அவ்வவர்பாற் சொல்லல் வேண்டும்.

'இதமுரைத்த முனி சோழனொடு சேர்ந்து வீழ்ந்தொழிந் தான்; (ஆதலால்,) எவர்க்கும் இதம் அகிதவார்த்தை மேலாம் இதமெனவே கூறல் இதமன்றே' என்று முடிக்க. சொல்லப் படுவன தீயவாயினும் நல்லவாயினும் அவை முடிவில் நன்மை யையே பயத்தல் வேண்டும் என்று உணர்த்திய படியாம். தேங்கு நீர் என்பது வலித்தது. நீர் தேங்கினமையின் மிகுந்த நீர் என்று பொருளுரைக்கப்பட்டது.

கதை: காவிரியாறு திருவலஞ்சுழியென்னுமிடத்துக்குப்பக்கத்தில் நீர் தேங்கி நிலத்துட் சுழித்துச் சென்றது. சோழன், அந்நீர் நாட்டுக்குப் பயன்படாமற் போகின்றதே என்றெண்ணி வருந்தி ஏரண்ட முனிவரிடஞ் சொன்னான். முனிவர் அந்த நீர்ச்சுழியில் ஒரு மயிர்த்தலையைப் பலி கொடுத்தால் அது நாட்டிற்பாயும் என்றார். அரசன் உலகம் நன்மையடைய வேண்டுமேயென்று தன் தலையைக்கொடுத்து இறந்தார். நம்முடைய சொல்லாலன்றோ அரசன் உயிரிழக்க நேர்ந்ததென்று முனிவரும் அவனோடு சேர்ந்து அச்சுழியில் வீழ்ந்து இறந்தான். 'அரசன் இரக்கமுடையவனாதலால் இக்காலத்தில் உண்மையான பயன் படுஞ் சொல்லைச் சொன்னால் என்னநேருமோ' என்று நினையாமல், நல்லவனிடத்தில் நற்சொல் சொல்லல் வேண்டுமென்று ஏரண்டர் சொன்னமையால், நாடு கெட்டு அரசன் இறந்ததுமன்றித் தானும் உயிரிழக்க நேர்ந்தமை காண்க. (௬௭)

இத்தரையோர் தம்மி லிருவரே மேலானோர்
சித்திரச வாதி சிவயோகி—முத்தனையாய்
நல்குரவு முற்பவமு நாசம் புரிவாரே
அல்லவர் வீரியக் கீடம்.

(இ - ள்.) முத்து அனையாய் - முத்துப்போல்வாளே! இத்தரையோர் தம்மில் - இவ் வுலகத்தில் உள்ளவர்களில், நல்குரவும் உற்பவமும் நாசம் புரிவார் - இல்லாமையையும் பிறப்பையும் ஒழிப்பவர்களாகிய, சித்திரசவாதி சிவயோகி - சித்தர்களும் சிவயோகிகளும் என்னும், இருவரே - இரண்டு வகையானவர்களே, மேலானோர் - மேன்மையானவர்கள்; அல்லவர் - இவ்விருவருமல்லாத மற்றையோர், வீரியக் கீடம் - பொறியினாலான புழுக்கள்.

(க - து.) பொருளும் அருளுந் தேடும் பெரியாரன்றி மற்றவரெல்லாம் புழுக்களாவார்.

சித்திரசவாதிகள், இரும்பு முதலானவைகளை யெல்லாம் பொன்னாக்குதலின் அது கொண்டு நல்குரவின் நீங்கிச் செல்வரா வர். சிவயோகிகள், கடவுள் அருளை அடைதலால் அது கொண்டு பிறப்பை ஒழித்து வீடுபெறுவர்.

"அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க்
கிவ்வுலக மில்லா கியாங்கு" (அருளுடைமை, எ.)

என்று திருக்குறள் கூறுவது போல, இவ்விருவரும் இம்மைக்கு வேண்டிய செல்வத்தையும் மறுமைக்கு வேண்டிய அருளையும் பெறுதலின், இவரே மற்றவரினுஞ் சிறந்தார். மற்றவர் இம்மைக் கும் மறுமைக்குந் தேட வேண்டிய பொருளையும் அருளையுந் தேடா மல் எடுத்த உடம்பை வீணாக்குதலால், 'அல்லவர் வீரியக்கூடம்' என்றார். அவர் பார்வைக்கு உடம்பு மட்டும் உடையராய் இருத் தலால் அவ் வுடம்பு எதனாலாயிற்றோ அதனையே சுட்டி இழிவு படுத்தினார் என்க. உற்பவம் பிறப்பைக்குறித்து வருதலை "மானுட உற்பவம் பெற்று வாழுதலரிது" (பாரதம், சஞ்சய, எ) என்பதிற் காண்க. (கூஅ)

அற்றசிவ யோகிக் கருஞ்சின்ன மூன்றுண்டு
பற்றலகை யுன்மத்தர் பாலரியல்—முற்றுரச
வாதிக்குச் சின்னமூன் றுண்டே மகிழ்போகம்
ஈத லிரவாமை யென்று.

(இ - ள்.) முற்றுரசவாதிக்கு - தலையான சித்தருக்கு, மகிழ்போகம் ஈதல் இரவாமை என்று - மகிழ்ச்சியான வாழ்வு, கொடுப்பது, பிச்சையெடாமை என்று, சின்னம் மூன்று உண்டு - அடையாளங்கள் மூன்றிருக்கின்றன; அங் ஙனமே, அற்ற சிவயோகிக்கு - துறந்த சிவனடியாருக் கும், பற்று அலகை உன்மத்தர் பாலர் இயல் - மலத் தன்மையுள்ள பேய்களியல்பு, வெறிபிடித்தோரியல்பு, குழந்

தைகளியல்பு என்று, அருஞ்சின்னம் மூன்று உண்டு - அருமையான அடையாளங்கள் மூன்று உள.

(க - து.) இல்வாழ்வாரிற் சிறந்தவரை நல்வாழ்வு, கொடை, இரவாமை என்பவைகளாலும், துறவறத்தாரிற் றலையாயினரைப் பேயியல்பு வெறியரியல்பு குழந்தையியல்பு என்பவைகளாலுந் தெரிந்துகொள்ளலாம்.

இச்செய்யுள் முன்செய்யுளிற் கூறப்பட்ட இரசவாதியையுஞ் சிவயோகியையும் அறிந்துகொள்ளத் தக்க அடையாளங்களைக் கூறிற்று. அலகையியல்பு தன் செயல் இழந்து ஏதேனும் ஒன்றை எப்பொழுதுஞ் செய்து கொண்டேயிருப்பது; வெறியரியல்பு ஒருகாற் செய்வதும் மற்றொருகாற் செய்யாமல் வாளா இருப்பது மாம்; குழந்தை யியல்பு எப்பொழுதும் ஏதுஞ் செய்யாமற் களங்க மற்றிருப்பது. சிவனடியார்கட்குள்ள இவ்வியல்புகளையும் இவ் வியல்புகளின் உண்மைகளையும்,

“ பாலருடன் உன்மத்தர் பிசாசர்குணம் மருவிப்
பாடலினொ டாடலிவை பயின்றிடினும் பயில்வார்”
(நூற்பா அ, அதி உ, கூஉ)

என்னுஞ் சிவஞானசித்தித் திருஉரையாலும், “பாலர் குணம் அற வொழிதற்கும், உன்மத்தர் குணம் ஒருகாற் செய்தொருகாலொழி தற்கும், பிசாசர் குணம் செயலிழப்பினின்று செய்தற்கும் உவமை யாயின” என்று இதற்குச சிவஞான முனிவரா எழுதிய பொழிப் பானுந் தெளிந்து கொள்க. இவ்விரண்டு செய்யுட் குறிப்பினாலும் முற்றுரசவாதி என்பாரும், அற்ற சிவயோகி என்பாரும் முறையே இல்வாழ்வாருந் துறவறத்தாருமாவர் என்று கொள்க. (சுக)

வல்லவர்பாற் கல்வி மதமா ணவம்போக்கும்
அல்லவர்பாற் கல்வி யவையாக்கும்—நல்லிடத்தில்
யோகம் பயில்வா ருயர்ந்தோ ரிழிந்தோர்கள்

(இ - ள்.) வல்லவர்பால் கல்வி மதம் ஆணவம் போக்கும் - தக்கவரிடத்தில் உண்டான கல்வி அறியாமையையும் ஆணவத்தையுங் கெடுக்கும், உயர்ந்தோர் நல்லிடத்தில் யோகம் பயில்வார் - ஆதலால் அக்கல்வியில் உயர்ந்தவர்கள் நல்ல இடங்கொண்டு கடவுளை வணங்குவார்கள், அல்லவர்பால் கல்வி அவை ஆக்கும் - வல்லவரல்லாத கீழோரிடத்துள்ள கல்வி அவ்வறியாமையையும் ஆணவத்தையும் மிகுதியாக்கும். இழிந்தோர்கள் போகம் புரிந்து பயில்வார் - ஆதலால் அக் கீழோர்கள் தாழ்ந்த உலக வாழ்க்கைகளை விரும்பி அதனை நுகர்ந்துகொண்டிருப்பார்.

(க - து.) உயர்ந்தோர் கல்வி அறியாமை முதலியவைகளைக் கெடுத்தலால் அவர் கடவுள் வணக்கத்தை விரும்புவர், தாழ்ந்தோர் கல்வி அவ் வறியாமை முதலியவைகளைப் பெருக்குதலால் அவர் உலக வாழ்க்கையையே விரும்புவர்.

ஆதலால் என்னும் ஏதுக் குறிப்புச் சொல்லை இரண்டிடங்களினுங்கொள்க. மதம் அறியாமைக்கும், புரிந்து விரும்பி என்பதற்கும் வருதலை முறையே, "உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன்றாள்" (திருமுருகாற்றுப்படை, ௪) "காதலே புரிந்து தோன்றுந் தன்மை" (சிந்தாமணி, ௧௭௪௮) என்னுந் திருமொழிகளாற் கொள்க. (௭௰)

தீயவர்பாற் கல்வி சிறந்தாலு மற்றவரைத்
தூயவரென் றெண்ணியே துன்னற்க—சேயிழையே
தண்ணொளிய மாணிக்கஞ் சர்ப்பந் தரித்தாலு
நண்ணுவரோ மற்றதனை நாடு.

(இ - ள்.) சேயிழையே - நல்ல நகைகளை அணிந்த பெண்ணே, சர்ப்பம் தண் ஒளிய மாணிக்கம் தரித்தாலும் - பாம்பு குளிர்ச்சியான ஒளிபொருந்திய மாணிக்க மணியைத்

வைத்திருந்தாலும், அதனை நண்ணுவரோ - மாணிக்கத்தை விரும்பி அப் பாம்பை நெருங்குவார்களோ, நாடு - நீ அதனை நினைத்துப்பார்; (ஒருகாலும் நெருங்கமாட்டார்கள்; அதுபோல.) தீயவர்பால் கல்வி சிறந்தாலும் - கெட்டதன்மையுள்ளவர்களிடத்திற் கல்வி மிகுந்திருந்தாலும், அவரைத் தூயவர் என்றெண்ணித் துன்னற்க - அவர்களைப் பெரியவர்களென்று நினைத்துச் சேரா தொழிக.

(க - து.) நல்லியல்பு இல்லாதவர் கல்வியிற் பெரியராயிருத்தலால்மட்டும் பெரியவராகமாட்டார்கள்.

மற்று, ஏ-அசை. தூயவர் - கெட்டதன்மையென்னும் அழுக்கற்றுத் தூய்மையாய் விளங்கும் நல்லவர்கள்; அவர் பெரியோர்.()

ஊரூ ரெனும்வனத்தே யொள்வாட்கண் மாதரெனுங்
கூரூர் விடமுட் குழாமுண்டே—சீரூர்
விரத்திவை ராக்ய விவேகத் தொடுதோல்
உடுத்தணியத் தையாவென் றேறு.

(இ - ள்.) ஊர் ஊர் எனும் வனத்தே - வாழ்கின்ற ஊர் என்னுங் காட்டிலே, ஒள் வாள் கண் மாதர் எனும் கூர் ஊர் விடம் முள் குழாம் உண்டு - ஒளியுள்ள வாட்படையைப்போன்ற கண்களையுடைய பெண்கள் என்னும் கூர்மைமிகுந்த நஞ்சுபோலும் முட்கூட்டங்கள் உண்டு, சீர் ஊர் விரத்தி - சிறப்பு மிக்க துறவோர், விவேக வைராக்ய தொடுதோல் உடுத்து அணிய - அறிவு உறைப்பு என்னுஞ் செருப்பை அறிவான காலில் இட்டுக்கொள்ள, தையா என்று ஏறு - அந்தப் பெண் என்னும் முட்கள் அவர் நெஞ்சக் காலைத் தைக்கமாட்டா என்று சொல்லு.

(க - து.) சிவனடியார்கள் தமக்கிருக்கும் உறுதியான எண்ணத்தால் மாயவலையிற் சிக்கமாட்டார்கள்.

இச்செய்யுளின் உருவகம் மிகவும் அழகானது. ஊரூர் வினைத்தொகை. ஊரூம் ஊர் என்க. மக்கள் ஊர்தலால் வாழ்விடத்தைக் குறிக்கும் ஊர், ஆகுபெயர். மாதர் என்று வாளா கூறாது ஒள்வாள் கண் மாதர் என்றமையின், அவர்தந் தொழிலுணர்த்தியபடியாம். ஆகவே அத்தொழிலையுடைய பெண்களுக்கே முள் உருவகமன்றி அத்தொழிலில்லாத நற்பெண்டிர்க்கன்றாம் என்றுணர்க. ஊர்தல் மிகுதிப் பொருளில் வருதல் மேலே கங-ஞ் செய்யுளுரையிற் காட்டப்பட்டது. உரம் என்பது திண்ணிய அறிவுக்கே பெயர். "உரமொருவற் குள்ள வெறுக்கை" (ஊக்கமுடைமை, ெ) என்னுந் திருக்குறளை நோக்குக. (எஉ)

போற்று குருகிளைஞர் பொன்னுசை யோர்க்கில்லை
தோற்றுபசிக் கில்லை சுவைபாகந்—தேற்றுகல்வி
நேசர்க் கிலைசுகமு நித்திரையுங் காமுகர்தம்
ஆசைக் கிலைபயமா னம்.

(இ - ள்.) போற்று குரு கிளைஞர் பொன்னாசையோர்க்கு இல்லை - போற்றப்படுதற்குரிய ஆசிரியரும் சுற்றத்தாரும் பண ஆசை பிடித்தவர்களுக்கு இல்லை, தோற்று பசிக்கு இல்லை சுவை பாகம் - தோன்றும் பசிக்கு நல்ல சுவையும் நல்ல சமையலும் வேண்டாம், தேற்று கல்வி நேசர்க்கு இலை சுகமும் நித்திரையும் - தெளிவிக்குங் கல்வியில் விருப்பமுடைய நல்லோர்க்கு இன்பமுந் தூக்கமும் இல்லை, காமுகர்தம் ஆசைக்கு இல்லை பயம் மானம் - பெண்ணாசை யுடையவர்களின் விருப்பத்துக்கு அச்சமும் அவமானமும் இல்லை.

(க - து.) பொன்னாசை, பசி, இன்பம், தூக்கம், பெண்ணாசை என்பவற்றை அளவின் நிறுத்துதல் வேண்டும்.

இச்செய்யுளின் எதிர்மறைக்கருத்துக்களைப்

பணத்தின் மேல்ஆசைவையாது குரு இளைஞரைப் போற்றுதல் வேண்டும்;

துடிக்கத்தக்க பசியெடுக்கு முன்னரே தக்கபசியோடு சுவையும் பாகமும் பார்த்து உண்ணல் வேண்டும்;

கற்கும்போது இன்பமுந் தூக்கமும் இடையூறுகளாய்நேர்ந்த விடத்தும் அவற்றை நீக்கிக் கல்வியிலேயே கருத்திருத்தல் வேண்டும்;

பெண்ணாசையை ஒழித்து அச்சத்தையு மானத்தையுங் கைக்கொள்ளல் வேண்டும்;

என்று உடன்பாட்டுக் கருத்துகளாகக் கொண்டுகொள்க. (எங)

நன்றறியாத் தீயோர்க் கிடங்கொடுத்த நல்லோர்க்குந்
துன்று கிளைக்குந் துயர்சேரும்—குன்றிடத்திற்
பின்னிரவில் வந்தகரும் பிள்ளைக் கிடங்கொடுத்த
அன்னமுதற் பட்டதுபோ லாம்.

(இ - ள்.) நன்று அறியாத் தீயோர்க்கு இடம் கொடுத்த நல்லோர்க்கும் - செய்த நன்மையினை அறிந்து கொள்ளமாட்டாத தீயோர்க்குத் தமது இடம் கொடுக்கும் நல்லவர்களுக்கும், துன்று கிளைக்கும - நெருங்கிய சுற்றத்தாருக்கும், துயர்சேரும் - துன்பம் வந்து சேரும், (அஃது எதுபோல வெனின்): முதல் - முன்னொருநாளில், குன்றிடத்தில் - மலையில், இரவில் வந்த - இரவிலே வந்த, கரும்பிள்ளைக்கு - காக்கைக்கு, இடம் கொடுத்த அன்னம் - இருக்க இடங் கொடுத்த அன்னப்பறவை, பின் பட்டது போல் ஆம் - பின்னால் துயரப்பட்டதுபோ லாகும்.

(க - து.) கெட்ட மக்களை நம்மோடு சேர்த்தலாகாது.

செய்த நன்மையை யறியாது தீங்கு செய்வார்க்கு 'நன்றறி யாத் தீயோர்' என்றார். இத்தொடர் கருப்பொருள் கொண்டது. கிளை - சுற்றம்; அவர் ஒரு மரத்தோடு சதைத்தொடர்புற்றுள்ள கிளைகள்போல ஒருவனுக்கு உடம்புத் தொடர்புடைய உறவின ராவர். துயர்க்குச் 'சேரும்' என்றது மிகுதிப் பொருட்டு. கரும் பிள்ளை - காக்கை; நிறம்பற்றி வந்த எதுப்பெயர். முதலும் பின் னுங் காலத்தைக் குறிப்பன.

கதை:—ஒருபெரிய மலையில் ஓ ரன்னப்பறவை தன் இனத் தோடு வாழ்ந்துகொண்டிருந்தது. அப்போது ஒருநா ளிரவில் மழையால் நனைந்து வருந்திய காகமொன்று, அங்குவந்து இருக்க இடங்கேட்டது. அவ்வன்னம் இடந்தரவே, காகமும் அங்குத் தங் கினமையின், அஃது எச்சமிட நேரிட்டது. அவ்வெச்சத்திலிருந்த ஆலம் விதை முளைத்தெழுந்து மரமாகிக் கீழே விழுதுவிட, அவ் விழுதுகளைப் பற்றிப் பலபேர் மேலே ஏறி வந்து அவ்வன்னத் தையும், அதைச் சேர்ந்த பிற அன்னங்களையும் பிடித்துக்கொண் டார்கள். தாழ்ந்த காக்கைக்கு இடம் விட்டமையின், உயர்ந்த அன்னத்துக்குத் துன்பம் வந்தமை காண்க. (எ௩)

மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில் வேறு
வினைவேறு பட்டவர்பால் மேவும்—அனமே
மனமொன்று சொல்லொன்று வான்பொருளு மொன்றே
கனமொன்று மேலவர்தங் கண்.

(இ - ள்.) அனமே - அன்னம்போல்வாளே! வினை வேறுபட்டவர்பால் - ஒழுங்கற்ற செய்கையை உடைய கீழோரிடத்தில், மனம்வேறு சொல்வேறு மன்னுதொழில் வேறு மேவும் - மனமும் சொல்லும் செய்யுஞ் செய்கை யும் வேறு வேறா யிருக்கும்; கனம ஒன்று மேலவா தம்

கண் - பெருமை பொருந்திய பெரியாரிடத்தில், மனம் ஒன்று சொல் ஒன்று வான்பொருளும் ஒன்றே - மனமுஞ் சொல்லும் உயர்ந்த செயலும் ஒன்றேயாம்.

(க - து.) நினைவு சொற் செயல்கள் ஒத்து நிற்ப ஒவ்வொரு செயலையுஞ் செய்தல் வேண்டும்.

'மன்னு தொழில்' என்றது தமக்கு நேர்ந்த தொழிலென்பதற்கு. இச்செய்யுட் பொருள்.

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழு
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான்
செய்கின்ற பூசையெவ் வாறுகொள்வாய்வினை தீர்த்தவனே.

என்னும் பட்டினத்தடிகள் திருமொழியில் விளக்கமாகக் காணப்படும். (எ௫)

கண்ணுக் கினிய சபைக்குமணி கற்றோனே
விண்ணுக் கினியமணி வெய்யோனே—வண்ணநறுஞ்
சந்த முலையாள் சயனத் தினியமணி
மைந்தன் மனைக்கு மணி.

(இ - ள்.) - விண்ணுக்கு இனிய மணி வெய்யோனே - வானத்துக்கு நல்மணி சூரியனே, (அதுபோல) கண்ணுக்கு இனிய சபைக்கு மணி கற்றோனே - பார்வைக்கு அழகாயுள்ள அவைக்களத்துக்கு நல்ல மணி படித்தவனே, சயனத்து இனிய மணி நறுமண சந்த வண்ண முலையாள் - படுக்கைக்கு இனிமையான மணி நல்ல மணம் பொருந்திய சந்தனத்தை அணிந்த அழகிய கொங்கையினையுடைய

மனைவியாம். மனைக்கு மணி மைந்தன் - வீட்டுக்கு மணி மகன்.

(க - து.) அவைக்குக் கற்றோரும், அறைக்கு மனையாளும், மனைக்கு மைந்தனுமே அழகு செய்வர்.

ஏகாரங்கள் - பிரிநிலை. மணி மணி என்பன மூதன்மை குறித்தன. கண்ணுக்கு இனிய என்பதை அவைக்கும், அங்கு நின்ற கற்றோனுக்குங் கொள்க. இங்குக் கண் என்பது அறிவாகிய அகக் கண்ணையுங் குறிப்பிட்டுக்கொண்டது. 'விண்ணுக் கினியமணி வெய்யோனே' என்பதை உவமையாகக் கொள்க. வண்ணம் என்பது மூலைக்கும் நறும் என்பது சாந்துக்கும் அடைமொழிகள். இனிய என்பதை மைந்தனாகிய மணிக்குங் கூட்டுக. (எசு)

பாலினீர் தீய ணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலுநீர் கண்டமையு மேன்மைபோல்—நூலினெறி
உற்றோ ரிடுக்க ணுயிர்கொடுத்து மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து.

(இ - ள்.) பாலின் நீர் தீ அணுக - பாலில் உள்ள நீரைத் தீ அணுகிச் சுட, பால் வெகுண்டு தீ புகுந்து - பால் சினந்து பொங்கி அத் தீயுட் புகுந்து அதனை அவித்து, மேலும் நீர் கண்டு அமையும் மேன்மைபோல் - பின்னும் நீரைக்கண்டு தன் சினம் அடங்கும் பெருமை போல, நூலின் நெறி உற்றோர் - நூல் வழியே நடப்பவர்கள், இடுக்கண் - தம்மைச் சேர்ந்தவர்க்கு உண்டான துன்பத்தை, மற்றோர் புகல - பிறர் இதுவே தகுதியென்று புகழ்ந்து சொல்லுமாறு, மதித்து உயிர்கொடுத்தும் மாற்றுவர் - இதுவே நன்றும் என்று எண்ணித் தம் உயிரைக் கொடுத்தும் மாற்றுவார்கள்.

(க - து.) தம்மை அடுத்தாரின் துன்பத்தை உயிர்கொடுத்தாயினுங் கற்றவர் காப்பாற்றுவார்.

வெகுண்டு புகுந்து அமையும் என்பன வெல்லாம் உருவக வினைகள். (எஎ)

அந்தோ புரமெரித்த வண்ணலடி யார்பொருள்கள்
செந்தீ யினுங்கொடிய தீகண்டாய்—செந்தீயை
நீங்கிற் சுடாதே நெடுந்தூரம் போனாலும்
ஏங்கச் சுடுமே யிது.

(இ - ள்.) அந்தோ - ஐயோ! புரம் எரித்த அண்ணல் அடியார் பொருள்கள் - மூன்று பட்டினங்களையுஞ் சொளுத்திவிட்ட பெருமை மிக்க தீப்பிழம்பாகிய சிவபிரான்றனடியார் பொருள்கள், செம் தீயினும் கொடிய தீ கண்டாய் - சிவந்த நெருப்பைவிட இன்னுங் கொடுமையான நெருப்பென்று அறிவாயாக, (ஏனென்றால்) செம் தீயை நீங்கில் சுடாதே - அச் சிவந்த நெருப்பைவிட்டு நீங்கிவிட்டால் அது சுடாதே, நெடுந்தூரம் போனாலும் இது ஏங்கச் சுடுமே - எவ்வளவு தொலைவுதான் மறைந்து சென்றாலும் அடியார் பொருளாகிய தீ ஏங்கித் துடிக்குமாறு சுட்டுவிடுமே!

(க - து.) அடியார் பொருள்களைக் கவர்தலாகாது.

புரமெரித்த அண்ணல் - புரமெரித்த பெருமையையுடையான். அடியார் பொருள்களின் தீ மிகுதியைக் காட்டுதற்குச் சிவபிரானைப் 'புரமெரித்த அண்ணல்' என்று விதந்தார். கண்டாய் என்பது, எளிதாக நினைத்திருந்த பொருளை அரிதென்று இடித்துரைத்தற்கண் வந்த முன்னிலை அசைச்சொல். இது சிறிது பொருள் பயந்து நின்றது. அளவற்ற பிறவிகளை எடுத்து அப்

பாற்சென்றாலும் அத் தீ விடாது என்பார் 'நெடுந்தூரம் போனாலும்' என்றார். ஏகாரங்கள் இரக்கங் குறித்தன. (எஅ)

நிந்தையிலாத் தூயவரு நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே—நிந்தைமிகு
தாலநிழற் கீழிருந்தான் றன்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுவரோ பார்.

(இ - ள்.) நிந்தை மிகு தால நிழல் கீழ் இருந்து ஆன் றன் பால் அருந்திடினும் பாலது எனச் சொல்லுவரோ-இழிவு மிகுந்த பனைமரத்தின் நிழலடியிலுட்கார்ந்து ஆவின்பாலைக் குடித்தாலும் பிறர் அதனைப் பால் என்று சொல்லுவார்களோ, பார் - நீ அதனை நினைத்துப் பார், (பாலென்று சொல்லாமற் கள்ளென்றே சொல்லுவார்: அதுபோல) நிந்தை இலாத் தூயவரும் நிந்தையரைச் சேரில் அவர் நிந்தையது தம் இடத்தே நிற்கும் - இகழப்படாத மேன்மக்களும் இகழப்படுங் கீழ்மக்களைச் சேர்ந்தால் அக் கீழ்மக்களின் இகழ்ச்சியையே தாமும் பெறுவர்.

(க - து.) கீழோருடைய தொடர்பே கூடாது.

பனைமரத்துக்கு வருமிடத்தில் இழிவு என்றும், மற்ற இடங்களிற் பழியென்றும் நிந்தைக்குப் பொருள்கொள்க. (எகூ)

கன்மமே பூரித்த காயத்தோர் தனுசெவியிற்
றன்மநூல் புக்காலுந் தங்காதே—சன்மமெலும்
புண்டு சமிக்குநா யூனவி னெய்யதனை
உண்டு சமிக்குமோ வோது.

(இ - ள்.) சன்மம் எலும்பு உண்டு சமிக்கும் நாய் - தோலையும் எலும்பையும் உண்டு பசியாறும் நாய், ஆவின்

நெய் ஊண் அதனை உண்டு சமிக்குமோ - ஆவினமுறைய கலந்த இனிய உணவினை உண்டு அமையுமோ, ஓது - நீ சொல். (அதுபோல) கன்மமே பூரித்த காயத்தோர்தம் செவியில் - வினையே மிகுந்து அதனாலான உடம்பையுடைய தியோரின் காதிலே, தன்மநூல் புக்காலும் தங்காது - அறநூற் கருத்து அறிவுறுக்கப்பட்டாலும் அஃது அவரிடத்தில் நில்லாது.

(க - து.) தீயோர்க்கு அறவுரைகள் கூறுதலால் எதும் பயனில்லை.

கருமம் தருமம் கன்மம் தன்மம் என்றாயினாற்போல, சருமம் என்பதுஞ் சன்மம் என்றாயிற்று. 'ஊனாவினெய்' என்பதை 'ஆவின் நெய்யூண்' என்று மாற்றுக. (அ௰)

௬௧

பெண்ணுதவுங் காலை பிதாவிரும்பும் வித்தையே
எண்ணி றனம்விரும்பு மீன்றதாய்—நண்ணிடையிற்
கூரியநற் சுற்றங் குலம்விரும்புங் காந்தனது
பேரழகு தான்விரும்பும் பெண்.

(இ - ள்.) பெண் உதவுங் காலை - பெண்ணை மணஞ் செய்து ஒருவனுக்குக் கொடுக்கும்போது, பிதா வித்தையே விரும்பும் - அப்பெண்ணின் தந்தை மணமகனின் கல்வியையே விரும்புவான். ஈன்ற தாய் - பெற்ற தாயார், எண்ணில் தனம் விரும்பும் - மிகுந்த பணத்தையே விரும்புவாள், நல் இடையில் கூரிய நல் சுற்றம் குலம் விரும்பும் - இடைக்காலத்திற் பொருந்தி மிகுந்த நல்ல சுற்றத்தவர் நல்ல குலத்தையே விரும்புவார்கள். பெண் காந்தனது பேர் அழகுதான் விரும்பும் - மணமக

ளாகிய அப்பெண் தன் கணவனுடைய பேரழகையே விரும்புவாள்.

(க - து.) பெண்ணும் அப்பெண்ணுக்கு உறவினராவாரும் பலவாறு நினைத்தலின், இயற்கைக் காதலொழுக்கங் கண்டு அவட்குத் திருமணஞ் செய்தல் வேண்டும்.

இச்செய்யுளினுற் றந்தையாயினனுக்குந் தாயாயினளுக்குஞ் சுற்றமாவாருக்கும் மணப்பெண்ணவாளுக்கும் உள்ள உள்ளவியல்பு புலப்பட்டது காண்க. ஒருவனுக்குப் பெண்ணை மணஞ் செய்து கொடுத்தல் ஓர் உதவுதலாமென் றறியற்பாலது. (அக)

காந்துநறும் புண்ணைக் கலந்தீ விரும்புமே
வேந்தர் தனமே விரும்புவார்—சாந்தநூல்
கல்லார் பகைசேர் கலகம் விரும்புவார்
நல்லார் விரும்புவார் நட்பு.

(இ - ள்.) ஈ காந்தும் நறும் புண்ணைக் கலந்து விரும்பும் - ஈக்கள் காந்துகின்ற நாற்றமுடைய புண்ணையே சேர்ந்து அதனை விரும்பும், வேந்தர் தனமே விரும்புவார் - அரசர்கள் செல்வத்தையே விரும்புவார்கள், (அதுபோல) சாந்தநூல் கல்லார் பகைசேர் கலகம் விரும்புவார் - அடக்கந் தரக்கூடிய அறிவு நூல்களைப் படியாதவர்கள் பகையை உண்டாக்குகின்ற கலகத்தையே விரும்புவார்கள், நல்லார் நட்பு விரும்புவார் - அவ்வறிவுநூல் கற்ற நல்லவர்கள் இணக்கத்தையே விரும்புவார்கள்.

(க - து.) கெட்டவர்கள் பகைமூட்டுவதிலும் நல்லவர்கள் நட்புக் கூட்டுதலிலும் மகிழ்ச்சியுடையவர்கள்.

ஏகாரங்கள் தேற்றப் பொருளன. முதல் ஏகாரத்தைப் பிரித்திசைக்க. (அஉ)

கற்றைக் குழலார் கவினெல்லா மோர்மகவைப்
பெற்றக் கணமே பிரியுமே—கற்றருளை
வேட்ட பெரியோர் பெருமையெல்லாம் வேறொன்றைக்
கேட்ட பொழுதே கெடும்.

(இ - ள்.) கற்றைக் குழலார் கவின் எல்லாம் - அடர்த்தியான மயிரையுடைய பெண்களின் அழகெல்லாம், ஓர் மகவைப் பெற்ற கணமே பிரியும் - ஒரு குழந்தையைப் பெற்ற அந்த விநாடியே நீங்கிவிடும், (அது போல) கற்று அருளை வேட்ட பெரியார் பெருமை எலாம் - நல்ல நூல்களைப் படித்துணர்ந்து கடவுளருளைப்பெற விரும்பிய பெரியவர்களின் பெருமைகளெல்லாம், வேறு ஒன்றைக் கேட்ட பொழுதே கெடும் - அவ் வருளின்பத்துக்கு வேறான உலக இன்பங்களைப்பற்றிக் கேள்விப்பட்ட அவ்வளவிலேயே ஒழிந்துவிடும்.

(க - து.) ஒரு நெறிய மனமில்லாதவர்களுக்குக் கடவுளருள் உண்டாகாது.

நரம்பிளக்கத்தால் உடம்பின் வலிகுன்றிக் கட்டற்று இளமைகெட்டு அழகழியும் பெண்டிர்க்கு உடம்பு இங்ஙனம் மாறியது போலவே, ஆன்றோரும் உலக இன்பங்களை விரும்பினார்களாயின், அவர்கள் அறிவும் நிலைகுலைந்து தடுமாறிக் கட்டற்று உரங்கெட்டு உறுதி குறைந்து பெருமை கெடும். அவர்கள் அச்சிற்றின்பங்களைச் சிறிதும் நினைக்கவும் ஆகாதென்பார் 'கேட்ட பொழுதே கெடும்' என்றார். இறையருளை வேண்டுவார் வேறு நினைப்பின்றி அவ்வருட்பெருக்கிலேயே படிந்திருத்தல் வேண்டுமென்று அவர்கட்கு விழிப்புக்கூறிற்று. அப்பாடி நள,

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவா திருக்க வரந்தரல் வேண்டும்"
(திருப்பாதிரிப்புலியூர்த் தேவாரம்)

என்று குறையிரப்பாராஞர்கள். (அ௩)

சீலங் குலமடியா ளண்டிற் கெடுங்கணிகை
ஆலிங் கனந்தனநா சம்மாகும்—நூலிழந்த
வல்லிதழு வக்குறையும் வாழ்நாள் பிறர்தாரம்
புல்லினர்க்கெல் லாநலமும் போம்.

(இ - ள்.) அடியாள் தீண்டில் சீலம் குலம் கெடும் - தேவடியாளைச் சேர்ந்தால் ஒழுக்கமுங் குலமுங் கெட்டுப் போகும், கணிகை ஆலிங்கனம் தனம் நாசம் ஆகும் - வேசியரின் சேர்க்கையால் செல்வம் அழிந்து போகும், நூல் இழந்த வல்லி தழுவ வாழ்நாள் குறையும - தாலி நீங்கிய கைம்பெண்களைச் சேர்ந்தால் வாழ்நாள் (ஆயுசு) குறையும், பிறர் தாரம் புல்லினர்க்கு எல்லா நலமும்போம் - பிறர் மனைவியரைச் சேர்ந்தவர்களுக்கு இங்குச் கூறிய சீலம் குலம் செல்வம் வாழ்நாள் என்பனவைகளும் பிறவும் ஆகிய எல்லா நலங்களும் ஒழிந்து போம்.

(க - ரு.) தேவடியாள், கணிகை, கைம்பெண், பிறன்மனைவி என்பாரைச சேர்தலாகாது.

அடியாள் தேவுக்கு அடியாளாதலின் அவளைத் தீண்டில் சிவனடியாரைப் பிழைத்த குற்றத்துட்பட, அவ்வாற்றால் ஒழுக்கமுஞ் சுற்றமுங் கெடுமென்றும், கணிகைகள் பொருட்பெண்டிராதலால் அவரைச் சேர்ந்தவர் பொருளிழந்து போவரென்றும், நூலிழந்த வல்லி கணவனிழந்தவ ளாதலால் அவள் கணவனுக்கு வாழ்நாள் குறைந்தது போலவே அவளைச் சேர்ந்தவர்க்கும் வாழ்நாள்

குறையுமென்றுங் கூறினாரென்க. பிறன் மனைவியைச் சேர்வது அவள் வாழ்க்கையையே கொல்வது போலுதலால், அங்ஙனஞ் சேர்ந்து அவள் வாழ்க்கையின் நலங்களைக் கெடுத்த தமக்கும் தம் வாழ்நல மெல்லாம் போமென்றார். பிறன் மனை நயந்து தன் வாழ் நலங் கெடுதலை நாயனார்,

"நலக்குரியார் யாரெனின் நாமநீர் வைப்பில்
பிறற்குரியாள் தோள்தோயா தார்." (பிறனில்விழையாமை, ௬)

"விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரின்
தீமை புரிந்தொழுகு வார்" ( ,, ௩)

என்று கூறியருளினமை காண்க. (௮௪)

சத்தியமெக் காலுஞ் சனவிருத்த மாகுமே
எத்தியபொய் யார்க்கு மிதமாகும்—நத்தியபால்
வீடுதொறுஞ் சென்று விலையா மதுவிருந்த
வீடுதனி லேவிலையா மே.

(இ - ள்.) நத்தியபால் வீடுதொறுஞ் சென்று விலையாம் - உடம்பை வளர்க்கின்ற ஆவின்பால் வீடு வீடாய்ப் போய் விலையாகும், மது இருந்த வீடுதனில் விலையாம் - உடம்பைக் கெடுக்கும் இழிவான கள் தான் இருக்குங் குடிசையிலேயே விலையாய் விடும், (இதனாற் பாலுக்குத் தாழ்வுங் கள்ளுக்கு உயர்வும் வந்துவிட மாட்டா; அது போலவே) சத்தியம் எக்காலும் சனவிருத்தமாகும் - எல்லாரையுந் தெளிவிக்கும் உயர்வான உண்மை கீழ்மக்களுக்கு வெறுப்பாகும். எத்தியபொய் யார்க்கும் இதம் ஆகும் - எல்லாரையும் மயக்குகின்ற பொய் அக் கீழ்மக்கட்கு விருப்பாகும். (இதனால் மெய்க்குத் தாழ்வும் பொய்க்கு உயர்வும் உண்டாகமாட்டா என்க.)

(க - ரு.) கீழ்மக்கள் சிலரால் இழிக்கப்படுவது கண்டு, தம் முயிர்க்கு உறுதிபயக்கும் உண்மையைக் கைவிடலாகாது.

சனம் என்பதும், மது என்பதுந் தம் சொற்பொருள்க ளாலேயே கீழ்மக்களையுங் கள்ளையும் முறையே உணர்த்தின. என்னை? கீழ்மக்களே உலகத்தில் மிகுந்தவராதலாலும், மயக்கம் என்னும் பொருளுடைமையாலும் என்பது. வீடுதொறுஞ்சென்று விலையாதலும் இருந்த வீட்டிலேயே விலையாதலும், மக்கள் பாராட் டாமைக்கும் பாராட்டுதற்கும் எடுத்துக்காட்டாவனவாம். (அகூ)

நல்லொழுக்க மில்லா ரிடஞ்சேர்ந்த நல்லோர்க்கு
நல்லொழுக்க மில்லாச்சொ னண்ணுமே—கொல்லும்விடப்
பாம்பெனவுன் றோரோ பழுதையே யானாலுந்
தூம்பமரும் புற்றடுத்தாற் சொல்.

(இ - ள்.) தூம்பு அமரும் புற்று அடுத்தால் - சந்துகள் உள்ள புற்றுக்குப் பக்கத்திற் கிடக்குமானால், பழுதையே ஆனாலும் - அங்ஙனங் கிடப்பது பழுதைக் கயிறே யானாலும், கொல்லும் விடப்பாம்பு என உன்றோரோ சொல் - கொல்லக்கூடிய நஞ்சையுடைய பாம்பு என்று அதனைச் சொல்மாட்டார்களோ நீ சொல், (அது போல) நல் ஒழுக்கம் இல்லார் இடம் சேர்ந்த நல்லோர்க்கு- நல்ல நடக்கைகள் இல்லாத தீயோரிடத்தைச் சேர்ந்த நல்லவர்களுக்கும், நல் ஒழுக்கம் இல்லாச் சொல் நண்ணும்- பழிச்சொல்லே வந்து சேரும்.

(க - து.) தீயவரிடத்தைச் சேர்ந்து நல்லொழுக்கத்திலேயே நின்றாராயினும், நல்லோர்க்குப் பொல்லாப் பெயரே உண்டாகும்.

எகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. இப்பொருளுடைய செய்ய

ளொன்று மூன்னும் வந்தது. (எக) தூம்பு - உட்டொளைப் பொருள்; இதனை,

"வாயிலு முட்டொளைப் பொருளு மூங்கிலு
மரக்காலு மதகுந் தூம்பென லாகும்"

என்னும் பிங்கலந்தையிற் (௩௬௬௧) காண்க. அமரும் - இங்கு உள்ள வென்பதன் குறிப்பு. (அ௬)

வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை
ஆக்கைநயத் தாலறிய லாகாதே—காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடிசையா லன்றியே
கோலத் தறிவருமோ கூறு.

(இ - ள்.) காக்கையொடு நீலச் சிறு குயிலை - காக்கையையும் அதைப்போலவே கருநிறமுடைய சிறிய குயிலையும், நீடு இசையால் அன்றி-இனிமை மிக்க இசைக்குரலால் அல்லாமல், கோலத்து அறிவருமோ கூறு - உருவத்தினால் அவற்றின் பெருமையை அறியக் கூடுமோ நீ சொல். (அவற்றின் பெருமையை எப்படி உருவத்தால் அறியமுடியாதோ, அதைப்போலவே) கற்றவரை மற்றவரை - படித்த பெரியவர்களையும் அங்ஙனம் படியாத மற்றவர்களையும், வாக்கு நயத்தால் அன்றி - அவரவர்கள் பேச்சின் இனிமையினு லல்லாமல், ஆக்கை நயத்தால் அறியலாகாதே - உடம்பழகினால் அறிய முடியாது.

(க - து.) கற்றாரையுங் கல்லாதாரையும் உடல் வளத்தால் மதித்தலாகாது.

உலகத்துப் பொதுமக்களில் கற்றவர் இவர் கல்லாதவர் இவர் என்று அறியும் முறை கூறிற்று. அஃது உடலாலன்று உரை

யால் அறிக வென்பது. இச்செய்யுளில் உவமானத்தாலும், உவமேயத்தாலும் அறியப்படுங் கருத்துகள் இரண்டுடேள; 'காக்கையொடு நீலச்சிறுகுயில்' என்பதில் கருநிறக்காக்கையும் நீலநிறக்குயிலும் ஒரே அழகுடையன ஆயினும் அவ்வுடலொற்றுமையினாலேயே அவற்றின் பெருமையை அறிவதற்கில்லை யாதலின், கற்றாருடம்பைப்போலவே கல்லாதாருடம்பு அழகாயிருப்பினும் அஃது ஒன்றினாலேயே அவரைக் கற்றாரென்று மதித்தற்கில்லை என்பது விளங்கும். இவ்வுவமையிற் பெறப்பட்ட கருத்து, உடலொப்புமையினாலேயே பெருமை சிறுமைகளை அறிய முடியாதென்பது. இனி 'ஆக்கைநயத்தால் ஆகாதே' என்பதில், கல்லாதாருடம்பு கற்றாருடம்பைவிட இன்னும் அழகாயிருந்தாலும், அவ்வுடம்பழகினாலேயே அவர் கற்றாரைவிடப் பெருமையானவர் என்று கொள்ளுதற்கில்லை என்பது புலப்படுகின்றது. இவ்வுவமேயத்தாற் பெறப்பட்ட கருத்து உடலின் உயர்வினாலேயே பெருமை சிறுமைகளை அறியமுடியாதென்பது. 'கற்றோர் உடல் சிறியரென்றிருக்க வேண்டாம்' (வாக்குண்டாம்,௧௨) என்பதும் ஒரு கருத்துடையது.

ஆசையெனும் பாசத்தா லாடவர்தஞ் சிந்தைதனை
வீசுமனை யாந்தறியில் வீழ்த்தியே—மாசுபுரி
மாயா மனைவியரா மக்கண் மகவென்னும்
நாயாற் கடிப்பித்த னடு.

(இ - ள்.) மாசு புரி மாயா மனைவியர் - குற்றஞ்செய்யும் மாயைமலமாகிய தீய மனைவிமார்கள், ஆசை எனும் பாசத்தால் ஆடவர் தம் சிந்தைதனை - பெண்ணாசை யென்னுங் கயிற்றினால் ஆண்மக்களின் நெஞ்சமாகிய விலங்குகளை, வீசு மனையாம் தறியில் வீழ்த்தியே - இல்வாழ்க்கையென்னுந் தூணிற் கட்டி, மக்கள் மகவு என்னும் நாயால்

கடிப்பித்தல் - குழந்தைகுட்டிகள் என்னும் நாய்களாற் கடிக்கும்படி செய்தலை, நாடு - நீ நினைப்பாயாக. ஆ ஈதென்ன கொடுமை !

(க - து.) அருள்வழி நின்று குடும்பங்களை நடத்தல் வேண்டும்.

இச்செய்யுளுருவகம் மிக அழகிது ; இஃது இறைவனருள் கொண்டு அதன் வழி நின்று நடத்தாமல், வெறுங் காம விருப்பங் கொண்டு அதன்வழி நின்று நடத்தப்படுங் குடும்பநிலை கூறிற்று. ஆண்மக்களின் மலவுணர்ச்சியினைப் பெண்மக்கள்மே லேற்றி உரைத்த தென்று கொள்க. (அஅ)

தானறிந்தோ ருக்குதவி தன்னா லமையுமெனில்
தானுவந் தீத றலையாமே—ஆனதனாற்
சொன்னாற் புரிதலிடை சொல்லியும்பன் னாண்மறுத்துப
பின்னாட் புரிவதுவே பின்.

(இ - ள்.) தான் அறிந்தோருக்கு - தன்னோடு பழகிய நண்பர்களுக்கு, உதவி தன்னால் அமையும் எனில் - தன்னால் ஏதேனும் உதவி செய்யக் கூடுமானால், தானே உவந்து ஈதல் தலையாம் - அவர் கேளாமுன் தானே மகிழ்ந்து கொடுத்தல் முதலாகும், ஆனதனால் - அது முதலானதனால், சொன்னால் புரிதல் இடை - அவர் கேட்ட பின்பு அது செய்தல் இடையாகும், சொல்லியும் பல் நாள் மறுத்துப் பின்நாள் புரிவது பின் - அவர்கள் கேட்டுங் கூடப் பலநாட்கள் ஆகட்டும் ஆகட்டும் என்று செய்யாமலே நாள் தள்ளிக்கொண்டு வந்து அதன்பின் ஒரு நாள் செய்துபோடுவது கடையாகும்.

(க - து.) இல்லாதவர்களுக்கு அவர்கள் கேளாமுன் தனால் இயல்வதைத் தருவது நன்று.

7

முதல் ஏகாரத்தைப் பிரித்துக் கூட்டுக. இன்றென்று அசை. தான் அறிந்தோர்க்கு என்பதைத் தன்னைத் தெரிந்து கொண்டவர்களுக்கு என்றும் பொருட்படுத்தலாம். அன்றித் 'தன்னால் இதுபோது இல்லாதவர்கள் என்று தெரிந்துகொள்ளப்பட்டவர்களுக்கு' என்றலும் ஒன்று. பின்னாற் சொன்னால் என்றும் சொல்லியும் என்றும் வருதலின், முதலிற் சொல்லாமலே அதாவது கேளாமலே என்று வருவித்துக்கொள்ளப்பட்டது. மறுத்து என்பது செயலின்மேல் நின்றது. (௨௯)

உற்ற மறையகத்தி லுய்க்குமவ னுத்தமனே
மற்றும் மறைபகர்வோன் மத்திமனே—முற்றிழையே
அத்த முறலாற் புகல்வா னதமனென
வித்தகநூ லோதும் விரித்து.

(இ - ள்.) முற்று இழையே - முழுதும் தூய்மையாய மணிவகைகள் நிரம்பிய நகைகளை அணிந்த பெண்ணே, உற்றமறை அகத்தின் உய்க்குமவன் உத்தமன் - செவியிலே வந்து பொருந்திய பிறருடைய மறைபொருள்களை (இரகசியங்களை) வெளியேவிடாமல் நெஞ்சத்துட் செலுத்துபவன் தலையானவன். மற்று அம் மறை பகர்வோன் மத்திமன் - அவ்வாறன்றி அம்மறைபொருளை வெளியே சொல்லுபவன் இடைப்பட்டவன், அத்தம் உறலால் புகல்வான் அதமன் - பணம் கிடைக்கின்றது என்று அதனால் அம் மறை பொருளைப் பிறருக்குச் சொல்பவன் கடைப்பட்டவன், என - என்று, வித்தகநூல் விரித்து ஓதும் - அறிவுநூல் விரித்துச் சொல்லும்.

(க - து.) மறைபொருள்களை வெளியிடலாகாது.

மற்று - வினைமாற்று. தலையானவன் கேட்ட மறையை வெளியே செலுத்தாது உள்ளே செலுத்தினான் என்க. அதாவது

நெஞ்சத்தே அடக்கினான் என்பது. உய்த்தல் செலுத்தலுக்கு வருதலைக்,

"கொலையுடை நெடுங்கூர் வாளி
கோடிகோ டிகள்நின்று உய்ப்ப" (கந்தபு-சிங்கமுகா-௧௬௨)

என்பதிற் காண்க. உற்றமறை என்றமையால், தானும் அம்மறைகளைக் கேட்க முயலலாகாது என்பது பெறப்பட்டது. முற்றிழை முடிந்த தொழிலையுடைய இழை. அதாவது தலையான தொழிலையுடைய இழை என்பதாம். இதற்குத் தொழில் முடிந்த இழை என்றும் உரை கூறுப. தொழில் முடியாத இழைகள் இருக்கு மென்பது கூடாமையால், அங்ஙனமொன்று கூறுதலிற் பொருட்பேறின்றாம். அத்தம் - அர்த்தம் என்னும் வடசொல்லின் திரிபு; அது செல்வம். (௯௰)

உத்தமர்தா மீயுமிடத் தோங்குபனை போல்வரே
மத்திமர்தாந் தெங்குதனை மானுவரே—முத்தலரும்
ஆங்கமுகு போல்வா ரதம ரவர்களே
தேங்கதலி யும்போல்வார் தேர்ந்து.

(இ - ள்.) தேர்ந்து ஈயுமிடத்து உத்தமர் ஓங்குபனை போல்வர் - குறிப்பறிந்து கொடுக்கும்பொழுது தலையானவர்கள் ஓங்கிவளரும் பனைமரத்துக்கு ஒப்பாவார், மத்திமர் தெங்குதனை மானுவர் - இடைப்பட்டவர் அங்ஙனமொன்று கொடுப்பதில் தென்னைமரத்துக்கு ஒப்பாவார், முத்து அலரும் கமுகுபோல்வார் அதமர் - கடைப்பட்டவர்கள் முத்துப்போற் பூக்கும் பாக்கு மரத்தைப்போல்வார்கள், அவர்களே தேம் கதலியும் போல்வர் - அக்கடையானவர்களே இனிய பழங்களைத் தரும் வாழை மரத்தைப் போல்வார்கள்.

(க - து.) பனைமரத்தைப்போற் பிறர்க்கு உதவுதல்வேண்டும்.

நீரூற்றிப் பாதுகாவாமலிருக்கும்போதே பனைமரம் எல்லாங் கொடுத்து எல்லாவற்றிற்கும் மிக்க பயன் படுதலால், பிறர் கேளாதே அவர்க்கு மிகவுங் கொடுத்துப் பேருதவிசெய்யுந் தலையான மக்கட்கு அஃது உவமையாயிற்று. தெங்கோ, சிறிது காலம் நீரூற்றிப் பாதுகாத்த பின்னரே ஓங்கி வளர்ந்து, அங்ஙனம் பாதுகாத்தாலுங்கூட, பனைமரத்தைப்போல அவ்வளவு முழு உதவி செய்யாது சிறு உதவியே செய்தலால், பிறர் முன்னுதவி செய்து கேட்டபிறகுஞ் சிறிதே கொடுக்கும் இடைப்பட்டவர்களுக்கு அஃது உவமையாயிற்று. பனைமரம் கொடுக்குங் கிழங்கு, சாறு, சோறு, மூடை ஓலை, செதில் விறகு, காழ்த்த கட்டை முதலியன தென்னைமரம் தருதலில்லை. பனந்தோப்பு ஒன்றே கொண்டும் மக்கள் உயிர் வாழ்தலாம். ஆனால், தென்னையை வைத்துக்கொண்டு அங்ஙனம் உயிர் வாழ்தல் இயலாது. இனிக் கமுக மரமோ என்றால், தென்னையைவிட மிகுந்தகாலம் பாதுகாத்தாலல்லாமற் பயன் தராது. அங்ஙனந் தரும் அப்பயனும் ஏதோ ஒன்றுக்கே பயன்படக்கூடிய மிகச் சிறுபயனே யாம். ஆகவே முன்னுதவி மிகச்செய்து கேட்டாலும் நீண்டநாட் கழித்து மிகச் சிறிதே உதவி செய்யும் அழுக்கர்கள் அதற்கு நிகரானார்கள். அதனோடுகூட அவர்கள் ஒருமுறைக்குமேல் மறுமுறை எவ்வளவு கேட்டாலுந் தரார்களாதலால், அங்ஙனமே ஒருமுறைக்கு மேல் மறு முறை ஈனாத வாழைமரம் அவர்க்கு உவமையாயிற்று. ஏ-தேம் என்றதனால் அக்கடையவர்கட்குப் பெறுவதோர் உவமை முடிவு யாது மில்லை. மானுவர் - ஒப்பர். (கூக)

எல்லோர் தமக்கு மினிதுதவ லன்றியே
நல்லோர் தமக்குதவி நாடாரே—வல்லதரு
நாமநிதி மேக நயந்துதவ லன்றியே
தாமுதவி நாடுமோ சாற்று.

(இ - ள்.) வல்ல தரு - விரும்பும் பொருள்களைக் கொடுக்கவல்ல தேவதாரு என்னும் மரமும், நாமநிதி-பெருமையுடைய சங்கநிதி பதுமநிதிகளும், மேகம் - மேகமும், நயந்து உதவல் அன்றியே - பிறர்க்குத் தாம் விரும்பி உதவுதலல்லாமல், தாமுதவி நாடுமோ - தாம் அவர்களிடமிருந்து எதிர் உதவி ஏதேனும் விரும்புமோ, சாற்று - நீ சொல். (அதுபோல) நல்லோர் எல்லோர் தமக்கும் இனிது உதவல் அன்றியே தமக்கு உதவி நாடார் - நல்லவர்களாயிருப்பவர்கள் பிறரெல்லார்க்கும் நன்றாய் உதவுவதல்லாமல் அவர்களிடமிருந்து தமக்கோர் எதிர் உதவி வேண்டமாட்டார்கள்.

(க - து.) எதிர் உதவி நாடாமல் உதவி செய்தல் வேண்டும்.

தருவும் நிதியுந் தேவேந்திரனுக்கு உரிமைப் பொருள்களாய் விண்ணாட்டில் இருக்குமென்ப. நாமம் - புகழ். "நாம நல்லுரை நாட்டுதுமென்று" (கூ: உ௬) என்பது சிலப்பதிகாரம். இனிது உதவல் - மகிழ்வோடு மகிழ்வு கொள்ளக் கொடுத்தல். இனிது, குறிப்புவினையாலணையும் பெயருமாம். அஃதானல் நல்லது கொடுத்தல் என்று பொருள் செய்க. (௯௨)

வெய்யோன் கிரண மிகச்சுடுமே வெய்யவனிற்
செய்யோன் கிரணமிகத் தீதாமே—வெய்யகதிர்
எல்லோன் கிரணத் தெரிபினிலு மெண்ணமில்லார்
சொல்லே மிகவுஞ் சுடும்.

(இ - ள்.) வெய்யோன் கிரணம் மிகச்சுடும் - கதிரவனுடைய வெயிலே மிகவுஞ் சுடும், வெய்யவனின் செய்யோன் கிரணம் மிகத் தீது ஆம் - கதிரவனைவிட நெருப்பின்

சுடர் இன்னுங் கொடியதாகும், வெய்யகதிர் எல்லோன் கிரணத்து எரியினிலும - கொடிய சூட்டுக் கதிர்களை உடைய கதிரவன் வெயிலையும் நெருப்பின் சுடரையும்விட, எண்ணம் இல்லார் சொல்லே மிகவும் சுடும் - நல்ல எண்ணம் இல்லாத தீயோர் கூறுந் தீய சொல்லே மிகவுஞ் சுடும்.

(க - து.) தீயோர்சொல் சுடுவதுபோல உலகத்தில் எதுவுமே சுடாது.

செய்யோன் - நெருப்பு. அது சிவந்த நிறமுடையதாதலின், அப்பெயர் பெற்றது. எல் - ஒளி. அஃதுடைய கதிரவன் எல்லோன் எனப்பட்டான். எரிதலின் நெருப்புக்கு எரி என்றார்.(௯௯)

திங்க ளமிர்த கிரணமிகச் சீதளமே
திங்களினுஞ் சந்தனமே சீதளமாம்—இங்கிவற்றின்
அன்பறிவு சாந்த மருளுடையார் நல்வசனம்
இன்பமிகுஞ் சீதளமா மே.

(இ - ள்) இங்கு - இவ் வுலகத்தில், திங்கள் அமிர்த கிரணம் மிகச்சீதளம் ஆம் - நிலவின் அமிழ்துபோன்ற கதிர்கள் மிகவுங் குளிர்ச்சியானவை. திங்களினும் சந்தனமே சீதளம் ஆம் - அந்த நிலவின் ஒளியைவிடச் சந்தனமே இன்னுங் குளிர்ச்சியுடையதாகும். இவற்றின் அன்பு அறிவு சாந்தம் அருள் உடையார் நல்வசனம் இன்பம் மிகும் சீதளம் ஆம் - இவ்விரண்டையும்விட அன்பும் அறிவும் பொறுமையும் அருளும் உடைய நல்லவர்களின் நல்ல சொல் இன்பம் பெருகக்கூடிய மிக்க குளிர்ச்சியினையுடையதாகும்.

(க - து.) நல்லோர் சொல்லைவிடக் குளிர்ந்தது உலகத்தில் ஒன்றுமே இல்லை.

திங்கள் கிரணத்துக்கு அமிர்தமென்றமையால் நல்லோர் வசனத்துக்கு இன்பமென்றார். சந்தனம் குளிர்ச்சியானதென்பதை,

'சந்தனஞ்சொரி தண்கதிர்த்திங்கள்' (மண்மக, உ௱௩)

என்று சிந்தாமணி கூறும். (௯௪)

சீராம்வெண் ணீற்றுத் திரிபுண் டரம்விடுத்தே
பேரான முத்தி பெறவிரும்பல்—ஆரமிர்த
சஞ்சீ வியைவிடுத்தே சாகா திருப்பதற்கு
நஞ்சே புசித்ததுபோ னாடு.

(இ - ள்.) சீர் ஆம் வெண்ணீற்றுத் திரிபுண்டரம் விடுத்து - சிறப்பான திருவெண்ணீற்றினால் நெற்றிக்குத் திருக்குறியிடுதலை விட்டுவிட்டு, பேரான முத்தி பெறவிரும்பல் - மேன்மையாகிய வீடுபேற்றை அடைய ஆசைப்படுவது, ஆர் அமிர்த சஞ்சீவியை விடுத்து - அருமையான அமிழ்தமென்னும் மருந்தை விட்டுவிட்டு, சாகாதிருப்பதற்கு நஞ்சே புசித்ததுபோல் - சாவாமல் இருப்பதற்கு நஞ்சையே உண்டதுபோலாகும். நாடு - நீ ஆராய்ந்துபார்.

(க - து.) கடவுளை வழிபட்டு வீடுபேறடைவதற்குச் சைவருக்குத் திருநீறுமே தக்கனவாம்.

உலகத்திலே மக்கட்பிறப்பிற் பிறந்ததன் நோக்கம் மலத்தை நீக்கிக்கொள்ளுதலேயாமாதலால், அம்மலம் நீறுதலை உணர்த்துந் திருநீறு அங்ஙனமொன்றை யுணர்த்தாத மற்ற திருக்குறிகளை விடச் சிறப்பாயிற்று. திரிபுண்டரம் - உயிர்களுக்குற்ற மூன்று மலங்களும் எரிக்கப்பட்டதற்கு அறிகுறியாக நெற்றியில் மூன்று

கோடாக இடப்படும் நீற்றுக்குறி. திருநீற்றொழுக்கத்தால் எவரும் வீடடைதல் கூடுமென்பது,

'கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்விரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே'

என்னுந் திருமந்திரத்தினால் துணியப்படும். அமிர்த சஞ்சீவினி என்றொரு சாவா மருந்துண்டென்ப. இச்செய்யுளால் நீற்றினெறியின் உண்மையும், இச்செய்யுளாசிரியர்க்கு அதன்கண் உள்ள அன்பும் வெளிப்படும். (கூ௫)

செந்தா மரையிரவி சேருதயம் பார்க்குமே
சந்திரோ தயம்பார்க்குந் தண்குமுதம்—கந்தமிகும்
பூவலரப் பார்க்கும் பொறிவண் டரனன்பர்
தேவரவைப் பார்ப்பர் தெளிந்து.

(இ - ள்.) செந்தாமரை இரவிசேர் உதயம் பார்க்கும் - சிவந்த தாமரை மலர்கள் கதிரவன்வந்து புறம்படு காலத்தை எதிர்பார்க்கும், சந்திரோதயம் பார்க்கும் தண் குமுதம் - குளிர்ச்சியான ஆம்பல்மலர் நிலவு புறப்படுதலை எதிர்பார்க்கும், கந்தம் மிகும் பூ அலரப் பார்க்கும் பொறி வண்டு - புள்ளிகளை யுடைய வண்டுகள் மணம் மிகுந்த பூக்கள் மலர அதனைப் பார்க்கும், (அதுபோல) அரன் அன்பர் தெளிந்து தேவரவைப் பார்ப்பர்-சிவனடியார்கள் உண்மை உணர்ந்து சிவபெருமானொருவனையே எதிர்நோக்கிக் கிடப்பார்.

(க - து.) சிவனடியார்கள் கடவுளருளையே நோக்கி நிற்பார்கள்.

சேருதயம் என்பதற்குத் தாமரையிடத்தே சேரும் உதயம் என்று பொருள் கொள்ளுவாரும் உளர். தெளிதல், இறைவனுக்கும் அவனல்லாத மற்றைப் பொருள்களுக்கும் உள்ள வேற்றுமை முதலியவற்றைத் தெளிதல். திங்களுங் கதிரும் அம்மையப்பராந் திருக்கோலத்துக்கும், அலர்பூ அவர்கள் அருட்செய்கைக்கும் உள்ளுறையுவமமாய் வந்தன. (கக)

வில்லமறுகுக் கொவ்வா மென்மலர்க ணால்வரெனும்
நல்லவன்பர் சொற்கொவ்வா நான்மறைகள்-மெல்லிநல்லாய்
ஆமந் திரமெவையு மைந்தெழுத்தை யொவ்வாவே
சோமசுந்த ரற்கென்றே சொல்.

(இ - ள்.) மெல்லிநல்லாய் - மெல்லிய நல்லியல்பினையுடைய பெண்ணே, சோமசுந்தரற்கு - அம்மையப்பராய் விளங்கும் பேரழகராகிய சிவபெருமானுக்கு, மென் மலர்கள் வில்லம் அறுகுக்கு ஒவ்வா - மெல்லிய தன்மையுடைய எல்லாப்பூக்களும் வில்வத்துக்கும் அறுகுக்கும் இணையாகா, நான் மறைகள் நால்வரெனும் நல்லவன்பர் சொற்கு ஒவ்வா - இக்காலத்திற் கூறப்படும் நான்கு வேதங்களும் நால்வரென்று புகழ்ந்து சொல்லப்படுகின்ற நல்ல அன்பர்களாகிய திருஞானசமபந்தப் பெருமான் முதலியவர்கள் அருளிய அருட் சொல்லாகிய தேவார திருவாசகங்கட்கு ஒப்பாகா, மந்திரம் எவையும் ஐந்தெழுத்தை ஒவ்வா - எவ்வகையான மந்திரங்களும திருவைந்தெழுத்தை ஒவ்வா.

(க - து.) சைவராவார் வில்வமும் அறுகுங்கொண்டு வழிபட்டுத் தேவார திருவாசகங்கள் ஓதி ஐந்தெழுத்து எண்ணிச் சிவபிரானை வணங்குதல் வேண்டும்.

வில்வம்அறுகுகளும்,தேவாரதிருவாசகங்களும்,ஐந்தெழுத்தும் சிவபிரான் வழிபாட்டிற்குச் சிறந்தவைகள் என்றபடி. மென்மலர்கள் என்பன, மல்லிகை முதலானவைகள். அவைகள் தமக்குள்ள இனிய மணத்தாலும் அழகாலும் மக்களால் விரும்பப்படுதலின், சிவபிரானுக்கு ஆகாவாயின. இக்காலத்து நான்மறைகள் என்று சொல்லப்படுபவை இருக்கு எசுர் சாம அதர்வண மென்பவைகள். அவைகள் முழுமுதற் கடவுளின் இலக்கணங்களுக்கு மாறான உரைகளையும் உடைமையால், அம்முழுமுதற்கடவுளிலக்கணங்கள் வழாது உரைக்குந் தேவாரதிருவாசகங்களுக்கு ஒவ்வாவாயின. நால்வர் திருஞானசம்பந்த நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசகப்பெருமான் என்பவர்கள். பிற மந்திரங்கள், காயத்திரி, அஷ்டாட்சர முதலியன. அவைகட்கு இருள் நிலையிற் கிடந்த உயிர்கள் சிவ நிலையை எய்தும் வரையில், இறைவன் செய்யும் அருட்செய்கைகளையும் ஒழுங்கான நெறிமுறைகளையும் அவ்வுயிர்கட்கு முறை முறையாக உணர்த்தி அவற்றை வீடுபேறடைவிக்கும் பொருட்பேறும் முழுமுதலாற்றலும் இல்லாமையின், அவைதாம் அவையெல்லாம் ஒருங்கே உடைய திருவைந்தெழுத்துக்கு நிகராகாவாயின. சொற்கு - ஆகுபெயர். (௬௭)

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினுநூல்
வல்லா னொருவனையே மானுவரோ—அல்லாரும்
எண்ணிலா வான்மீ னிலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா வாமோ விளம்பு.

(இ - ள்.) வான் அகத்து - வானத்தில், அல் ஆரும் எண்ணிலா வான்மீன் இலகிடினும் - இரவிலே நிறையும் அளவில்லாத விண்மீன்கள் ஒன்றாய் விளங்கினாலும், ஓர் வெண்ணிலா ஆமோ-ஒரு வெண்ணிலாவுக்கு நிகராகுமோ,

விளம்பு - நீ சொல்லு, (அதுபோல) கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும் - படியாத மூடர்கள் பலரேகூடி ஒருவரையொருவர் விரும்பி வாழ்ந்தாலும், நூல் வல்லான் ஒருவனை மானுவரோ - கல்வியில் வல்ல பெரியாரொருவருக்கு ஒப்பாவார்களோ - (ஒப்பாகமாட்டார்கள் என்றபடி.)

(க - து.) எதற்குங் கற்றார் கூட்டுறவு இன்றியமையாதது.

காதலித்து என்றமையின், உவமையின் ஒன்றாய் என்று வருவிக்கப்பட்டது. கல்வியை உணர்த்தி நூல் ஆகுபெயராய் நின்றது. மானுதல் ஒத்தல். அல் - இருட்டு. 'அல்லும் பகலும்' என்பது வழக்கு. உலக நிகழ்ச்சிகளெல்லாம் 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்றாற்போலக் கற்ற பெருமக்களின் நெஞ்சத் துறுதியில் அடங்குதலாலும், கல்லாதார் அவர் ஆட்ட ஆடுபவரே யன்றித் தாமே எதும் செய்யமாட்டாராதலாலும் இங்ஙனங் கூறினார். (கூஅ)

சந்தனத்தைச் சேர்தருவுந் தக்க மணங்கமழுஞ்
சந்தனத்தைச் சார்வேய் தழல்பற்ற—அந்தவனந்
தானுமச் சந்தனமுந் தன்னினமு மாள்வதன்றித்
தானுங் கெடச்சுடுமே தான்.

(இ - ள்.) சந்தனத்தைச் சேர்தருவும் தக்க மணங் கமழும் - சந்தன மரத்தை அடுத்துள்ள மரங்களும் (அச் சந்தன மரமேபோல அதன் தொடர்பினால்) நல்ல மணம் வீசும், சந்தனத்தைச் சார்வேய் தழல்பற்ற - (ஆனால்) அச் சந்தனத்தைச் சேர்ந்துள்ள மூங்கில்கள் நெருப்புப்பற்றிக் கொள்ள, அந்த வனமும் - அந்தக் காடு முழுமையும், சந்

தனமும் - மணமுள்ள அச் சந்தன மரமும், தன் இனமும்- தனக்கு இனமான மற்ற மூங்கில்களும், மாள்வதன்றி - எரிந்து பொசுங்கிக் கெடுவதல்லாமல், தானும் கெட - தானும் எரிந்து கெட்டுப்போம்படி, சுடும் - பற்றியெரியும்.

(க - து.) தீயோர்களை நெருங்கவொட்டலாகாது.

நல்லவர்களைச் சேருகின்றவர்களிற் சிலர், எல்லார்க்கும் நன்மை விளைத்துத் தாமும் நல்லவராவர். ஆனால் அங்ஙனஞ் சேருகின்றவர்களில் வேறு சிலர் பிறர்க்குந் தமக்குந் தீங்கு தேடிக்கொள்வதோடு, பலர்க்கும் நன்மையாயிருக்குந் தாஞ் சேர்ந்த நல்லோரையுங் கெடுத்து விடுவர் என்பது இதனால் உணர்த்தப்படும் பொருள். இச்செய்யுள் முற்றுவமையில் வந்தது. (கக)

கங்கைநதி பாவஞ் சசிதாபங் கற்பகந்தான்
மங்க லுறும்வறுமை மாற்றுமே—துங்கமிகும்
இக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடஞ்சேரில்
அக்கணமே போமென் றறி.

(இ - ள்.) கங்கை நதி பாவம் - கங்கையாறு தீவினைகளையும், சசிதாபம் - திங்கள் வெப்பத்தையும், கற்பகம் மங்கல் உறும் வறுமை - கற்பகம் எனப்படும் மரம் எல்லா நலங்களையும் மங்கும்படி செய்யும் வறுமையையும், மாற்றும் - நீக்கும், இக்குணம் ஓர் மூன்றும் - தீயவையான வினை வெப்பம் வறுமை என்னும் இம் மூன்று தன்மைகளும், துங்கம் மிகும் பெரியோரிடம் சேரில் அக்கணமே போம் என்று அறி - உயர்வு மிக்க பெரியோரிடத்திற் சேர்ந்தால், சேர்ந்த அந்த விநாடியே ஒழிந்துபோகுமென்று நீ அறிந்துகொள்.

(க - து.) இம்மை மறுமைப் பயன்களுக்குப் பெரியாரிணக்கமே வேண்டப்படுவதாம்.

கங்கை என்பது இமயமலையின் பக்கலில் ஓடுமோர் ஆறு. இது பல மட்சாரங்களிலும் பச்சிலைச்சாரங்களிலும் ஊறி அப்பொருட்டன்மைகளை ஏற்று வருதலால், அந்நீரிற் றலைமுழுகுவோர் செம்மையான உடம்புந் தெளிந்த அறிவும் பெற்று நல்லவழியில் ஒழுகநேர்தலின், 'கங்கை நதி பாவம் மாற்றும்' என்றார். கதிரவனால் ஆன பகலின்வெம்மையை இரவின் நிலவு தணிக்கும். கற்பகம் வேண்டியவற்றைத் தருமென்பது,

"வல்லதரு
காமநிதி மேகம் நயந்துதவ வன்றியே
தாமுதவி நாடுமோ சாற்று" (செ - ௬௨)

என்று இவரால் முன்னும் உணர்த்தப்பட்டது. உறும்-பிறவினைப் பொருள் தன்வினையின்கண் வந்தது.மங்குதலைஉறுவிக்கும் வறுமை என்று கொள்க. பாவம் தாபம் கற்பகம் என்பவற்றிற்கு எண்ணும்மைவிரிக்க.துங்கம் மிகும் என்பதைப் பெரியோர்க்குஅடைமொழியாக்கிக் கங்கை திங்கள் கற்பகம் என்பவற்றினும் உயர்வுமிக்க பெரியோர் என்று பொருளுரைக்க. துங்கமிகும் பெரியோர் என்பதில், துங்க மிகும் என்பது அம்மூன்று தன்மைகளும் நீக்கும் ஆற்றலையும், பெரியோர் என்பது அக்கணமே நீக்கும் ஆற்றலையும் அறிவிக்க வந்தன வென்க. அங்ஙனமன்றிப் பெரியோரிடஞ் சேரில் அக்கணமே போவதோடு துங்கமும் மிகும் என்று கொள்ளினும் அமையும். இங்குப் பெரியோ ரெனப்படுபவர் திருவருளாற்றல் பெற்ற அடியாராவர். அவர் நினைந்தால் எல்லாம் உண்டாமாதலின், இம் மூன்றும் அக்கணமே போமென்றார். கங்கை நதி பாவம் மாற்றுமென்பது சமய வழியையும், சசி தாபம் மாற்றுமென்பது சிற்றின்ப நுகர்ச்சியையும், கற்பகந்தான் மங்கவுறும் வறுமை மாற்றுமென்பது, செல்வ நிலையையுங் குறிப்பால்

உணர்த்தி நின்றன. இம்மூன்றினிலும் பெரியா ரிணக்கம் சிறந்த தென்க.

"மூர்த்திதலம் தீர்த்தம் முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே"

என்று தாயுமானச்செல்வருந் திறைபடிதல் முதலியவற்றின் பயன் பெரியாரிணக்கம் பெறுதலென்று காட்டினமை காண்க. (௱)

முற்றிற்று.



# பாட்டு முதற்குறிப் பகராதி

---

கழக வெளியீடு - ௧௮௫

முனைப்பாடியார்

இயற்றிய

# அறநெறிச்சாரம்

124/2

சேலம், இராசிபுரம்

நாட்டாண்மைக் கழகக் கலாசாலைத்

தலைமைத் தமிழாசிரியர்

திரு. S. பொன்னுசாமிப் பிள்ளை யவர்கள்

எழுதிய

உரையுடன்

திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி & சென்னை

தாது—ஐப்பசி

# பதிப்புரை

இந்நூல் அருக சமயத்து அறிஞர் முனைப்பாடியார் என்பார் இயற்றியது. இருநூற்றிருபத்தாறு (226) வெண்பாக்கள் கொண்டது. வெண்பாக்களின் அமைப்பும் பொருளும் அறிஞருள்ளத்தைக் கவரும் மாண்பின. அருகக்கடவுளும் அருகசமயமும் அருக ஆகமமும் சிறப்பாகக் கொண்டுரைக்கும் வெண்பாக்கள் நீங்க அறம் ஒழுக்க முதலியன கூறும் ஏனைய பாக்கள் செம்பாகமாய்ச் சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல் முதலிய அழகு நிறைந்து சமயவெறுப்பின்றி எவரும் பயின்று மேற்கொள்ளத் தக்கனவாயிருக்கின்றன. உருவக முகத்தால் விளக்கியிருக்கும் பாடற் கருத்துக்கள் பசுமரத்தாணிபோல் மனதிற் பதிந்து நிலைக்கும் பண்பு வாய்ந்தவை.

சங்கச் செய்யுள்கள் முதல் கம்பராமாயணம், நளவெண்பா முதலிய பிற்காலத்திலக்கியங்கள்வரை பன்னூல்களினின்றும் எடுத்த பாக்களின் தொகுப்பே புறத்திரட்டு. இதில் இந்நூலிற் காணும் வெண்பாக்களிற் சில காணப்படுகின்றன. இத்திரட்டு சுமார் ஐஞ்ஞூறு ஆண்டுகட்குமுன் திரட்டப் பெற்றது. ஆகவே, இவ் அறநெறிச்சாரம் ஐஞ்ஞூறு ஆண்டுகட்கு முற்பட்டதொரு பழையநூல்.

இந்நூல் மூலமட்டும் ஏட்டுச்சுவடியிலுள்ளபடி இற்றைக்கு முப்பத்து மூன்று ஆண்டுகட்கு முன்னர், திருசிரபுரம், நேஷனல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர், திரு. தி. ச. ஆறுமுக நயினார் அவர்களால் வெளியிடப்பெற்றுள்ளது. அவர்கள் பதிப்புக் குறிப்பில் விரைவில் வெளியிடவேண்டி நேர்ந்தமையால் தக்காரொடுத்து ஒழுங்கு படுத்தி வெளியிடற்கு ஒரு துணையாக இது வெளியிடப் பெறுவதாயிற்று என்று குறித்துள்ளார்கள்.

பின்னர், சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தலைமைத் தமிழ்ப்புலமைச் செல்வர் திருமணம். செல்வக்கேசவராய முதலி

யார், **M. A.**, அவர்கள், இந்நூலின் செய்யுளமைதி, நீதி, உருவக வுயர்வு முதலியன கண்டு மகிழ்ந்து, யாவரும் விரும்பி ஏற்றுப் பயின்று அயின்று மகிழ்ந்திடுமாறு நாலடியார்போற் பாகுபடுத்தி வெளியிடமுயன்று, அருங்கலச் செப்பின் றுணைகொண்டும், இந் நூல் பதினொன்றாஞ் செய்யுளாகிய "காட்சியொழுக்கொடு ஞானந் தலைநின்று" என்னுஞ் செய்யுளின் பகுப்புக் கிணங்கவும் பாகு படுத்தி, அருஞ்சொற் குறிப்புடனும் சில மேற்கோள்களுடனும் 1905-ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ளார். குறித்த இவர்கள் வெளி யீடு பின்னிரண்டு பதிப்புகளும் பெற்றுள்ளன.

அருகசமய அருங்கொள்கை விளக்கத்துடன் நல்லொழுக்கம், இல்லறம், துறவறம் ஆகிய இவற்றினியல்புகளை எளிய தீந்தமி ழில் விளக்கி வீடெய்து மாற்றையும் அடைவிக்கும் இந்நூற்கு, காலத்தில் வேண்டப்பெறும் பதவுரை, குறிப்புரை, அருஞ்சொல் விளக்கம் முதலியவற்றை அமைத்துப் பதினெண் கீழ்க்கணக்கு நூல்போற் பள்ளி மாணவரும் பிறரும் பயின்று தேர்தற்குத் துணை யாக வெளியீடொன்றை விரைவில் வெளியிட்டுதவும்படி தமிழறி ஞர்கள் பலர் கேட்டுக்கொண்டார்கள். அதற்கிணங்க இதுகாறும் வெளியிடப்பெற்ற மூல நூல்களையும் ஏட்டுச்சுவடிகளையும் ஒப்பு நோக்கிச் சிறந்த மூலபாடங் கண்டோம். பதவுரை விளக்கவுரை முதலியன எழுதி முடித்தற்கு ஏற்றவர் சேலம் ஜில்லா, இராசி புரம், நாட்டாண்மைக் கழக உயர்தரப் பள்ளித் தலைமைத் தமிழா சிரியர். திரு. S. பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள் என்பதை ஷை ஜில்லா கல்வித்துறைத் தலைவரும், நம் கழக வாயிலாகத் தம் அரும்பெறற் புலமை விளங்கும் மொழிபெயர்ப்பு நூல்கள் வெளி யிட்டுவருபவருமாகிய திரு. T. B. கிருஷ்ணசாமி முதலியார், M. A., B. L., அவர்கள் வாயிலாக அறிந்து, அவர்களைக் கொண்டே பதவுரை முதலியன எழுதி வாங்கலானேம்.

எளிதில் உரைத்தெளிவு காணமுடியாத இந்நூல் ௬௭, ௬௪, ௧௨௪, ௧௩௧, ௧௬௪, ௧௮௫, ௨௧௦-ஆம் செய்யுள்களுக்கு, அண்ணா மலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேராசிரியர் திரு. ந. மு. வேங்கட

சாமி நாட்டாரவர்கள், திருச்சி, துரைத்தன மகம்மதிய உயர்தரப் பள்ளித் தமிழாசிரியர், திரு. அ. நடராச பிள்ளை யவர்கள் ஆகிய இவ்விருவரும் வேண்டும் மேற்கோள்களுடன் உரைவிளக்கம் செய்து உதவியுள்ளார்கள்.

இந்நூற் பொருட்பாகுபாடு திருமணம் செல்வக்கேசவராய முதலியாரவர்கள் பதிப்பு முறையைத் தழுவியிருப்பினும், செய்யுட்கள் தனித்தனி நுதல் பொருள் அமைப்பைக் கொண்டிலங்குவது பயில்வார்க்கு இன்பம் பயப்பதாம். குறிப்பு மொழி வழி பொருள் நயம் தோற்றுவிக்கும் ஆசிரியரின் ஆற்றல் உ0எ, உ0அ-ம் செய்யுட்கள் முதலியவற்றால் விளங்கும். இப்பதிப்பில் அருகசமயத் துணிபுகள் கொண்டு எளிதில் பொருட்டுணிபு விளக்கம் பெறுதிருக்கும் ஆறு செய்யுட்கள் இறுதியில் மூலபாடமாக இணைக்கப்பெற் றிருக்கின் றன.

கழகம் ஏற்பட்ட காலத்திருந்தே சங்கமருவிய நூல்களில் பதினெண் கீழ்க்கணக்கைத் திருத்தமான முறையிற் பதிப்பித்து வெளியிட வேண்டித் தாம் அரிதின் ஆராய்ந்து எழுதிவைத்த கையெழுத்துப் படிகளைக் கழகத்திற்குதவி ஊக்கிவந்த தமிழ்ப் பெரும்புலவர் திரு. தி. த. கனகசுந்தரம் பிள்ளை, B. A. அவர்கள் மூலப்படியொன்றும் இந்நூலச்சிட்டு முடியுங்காலத்தில் ஒப்பு நோக்கக் கிடைத்தது. அதிற் கண்ட பாட வேற்றுமைகளும் இத்துடன் இணைத்திருக்கும் பாடவேற்றுமைக்குறிப்பிற் சேர்க்கப் பெற்றுள்ளன. இதற்கு முந்திய பதிப்புகளிற் காணாத செய்யுள் முதற்குறிப் பகராதி இந்நூல் பயில்வார்க்கு உறுதுணையாம். பதவுரையிலும் மூலபாடத்திலும் சிறந்த விளக்கக் குறிப்புக்கள் கிடைக்குமாயின் அடுத்த பதிப்பை இதனினும் திருத்தமாகப் பதிக்க விரும்புகின்றோம்.

தமிழ் மக்கள் இத்தகைய வெளியீடுகளைப் போற்றி ஊக்க முன்வருவார்களாக.

தென்னிந்திய சைவசித்தாந்த சங்கத்தார்.

# பாடபேதக் குறிப்பு

| செய்யுள் எண் | செய்யுள் முதற் குறிப்பு | செய். அடி எண் | பழைய பாடம் | திருத்தப் பாடம் |
|---|---|---|---|---|
| உக | மின்னுமிளமை உளதாம் | உ | அறிவென்றல் | அறிவெனென்றல் |
| சரு | அறந்தார் அறந்திலர் | ரு | கொடுப்பவற்றூர் காண | கொடுப்பவற்றூற்காண |
| சஎ | இந்தியக் கொல்கா | க&ரு | விந்தியக்கு...வருவாரிவை யெய்து | இந்தியக்கு...அரிதலிவை யெய்து |
| சஅ | குருட்டுச் செவிடர்கள் | உ | தெருட்டு வழி | தெருட்டிவழி |
| அக | எள்ளிப் பிறருரைக்கும் | ச | பிறிதெனினும் | பிறிதொன்றும் |
| கூஉ | மக்களுமக்களல்லாரும் | ச | துளக்கறு | துளக்குறு |
| க0எ | தூயவாய்ச் சொல்லாடல் | க | வண்மையும் | வன்மையும் |
| கஉஎ | நீததொழிந்த வாறைந் | க&உ | அடக்கியபின் பெண்ணுளையும் | அடக்கிப்பின் பெண்ணுனையும் |
| கருரு | ஒழுக்கமிலனுகியோர்த் | க | ஓர்ததுடையனென்னும் | ஓர்த்துடையனேனும் |
| கசகூ | தடுமாற்றமஞ்சிய | க | தம்மையுடையார் | தன்மையுடையார் |
| கருச | முற்பிறப்பிற்றுஞ்செய்த | உ | இற்புறத்தின்புறு | இற்பிறந்தின்புறு |
| உ0ச | குற்றங் குறைத்துக் | க&உ | மூவுலகில் நற்ற | மூவுலகின் அற்ற |
| உகக | அருவினையுமாற்றுள் | உ | இருவினையு நின்று | இருவினையுநின்ற |
| உஉ0 | முனைப்பாடியானை | ச | வந்தோற்கு...நீமீ கென்றான் | வந்தேற்கு...நீமீக வென்றான் |

ஓம்

# அறநெறிச்சாரம்

## மூலமும் விருத்தியுரையும்

### கடவுள் வாழ்த்து.

---

தாவின்றி எப்பொருளுங் கண்டுணர்ந்து தாமரைப்
பூவின்மேற் சென்றான் புகழடியை—நாவிற்
றுதித்தீண் டறநெறிச் சாரத்தைத் தோன்ற
விரிப்பன் சுருக்காய் விரைந்து.

(பதவுரை) தா இன்றி - குற்றம் இல்லாமல், எப்பொருளும் - எல்லாப் பொருள்களினியல்புகளையும், கண்டு உணர்ந்து - ஆராய்ந்து அறிந்து, தாமரைப் பூவின்மேல் - தாமரை மலரின்மேல், சென்றான் - சென்ற அருகனது, புகழடியை - பெயர்பெற்ற திருவடிகளை, நாவின் துதித்து - நாவினால் புகழ்ந்து, ஈண்டு - இங்கே, அறநெறிச் சாரத்தை - அறநெறிச்சாரமாகிய இந்நூலை, தோன்ற - விளங்க, சுருக்காய் விரைந்து - மிகவிரைவாக, விரிப்பன் - விரித்துக் கூறுவேன்.

(குறிப்பு) இது தற்சிறப்புப்பாயிரம்; தெய்வவணக்கமும் செயப்படு பொருளும் உரைப்பது தற்சிறப்பாகலின். தெய்வம் - வழிபடுகடவுள்; ஏற்புடைக் கடவுளும் ஆம், அறத்திற்கு முதல்வனாக லின். குற்றம் - ஐயம் திரிபுகள். காணல் - ஈண்டு ஆராய்தல். சென்றான் - வினையாலணையும் பெயர். 'மலர்மிசை ஏகினான்' என்றார்—திருவள்ளுவனாரும். (க)

## பாயிரம்

### அறவுரையின் இன்றியமையாமை.

*மறவுரையும் காமத் துரையும் மயங்கிப்*
*பிறவுரையும் மல்கிய ஞாலத்—தறவுரை*
*கேட்கும் திருவுடை யாரே பிறவியை*
*நீக்கும் திருவுடை யார்.*

(ப-ரை.) *மற உரையும் - பாவத்தினை வளர்க்கும் நூல்களும், காமத்து உரையும் - ஆசையினை வள்ர்க்கும் நூல்களும், பிற உரையும் - பிறவற்றினை வளர்க்கும் நூல்களும், மயங்கி - கலந்து, மல்கிய - நிறைந்த, ஞாலத்து - உலகில், அறவுரை - அறத்தினை வளர்க்கும் நூல்களை, கேட்கும் - கேட்கின்ற, திரு உடையாரே - நற்பேற்றினை உடையவர்களே, பிறவியை - பிறப்பினை, நீக்கும் - நீக்குதற்கேற்ற, திரு உடையார் - வீட்டுலகினையுடையவராவர்.*

(கு-பு.) *காமத்து - அத்து சாரியை. பிறவுரை - சோம்பல் முதலியவற்றை வளர்ப்பன. உரை - ஈண்டுநூலை உணர்த்தலின் ஆகுபெயர். திரு ஈண்டு நற்பேற்றினையும், வீட்டினையும் உணர்த்திற்று. இதனால், அறவுரை கேட்டலின் இன்றியமையாமை கூறப்பட்டது.* (உ)

### அறவுரைக் கின்றியமையா நான்கு.

*உரைப்பவன் கேட்பான் உரைக்கப் படுவ*
*துரைத்ததனு லாய பயனும்—புரைப்பின்றி*
*நான்மையும் போலியை நீக்கி அவைநாட்டல்*
*வான்மையின் மிக்கார் வழக்கு.*

(ப-ரை.) *உரைப்பவன் - அறங்கூறுபவனையும், கேட்பான் - அதனைக்கேட்பவனையும், உரைக்கப்படுவது - உரைக்கப்படும் அறத்தினையும், உரைத்ததனுல் ஆய பயனும்-உரைப்பதனுல் உண்டாகும்*

பயனையும், புரைப்பு இன்றி - குற்றமிலாவகை ஆராய்ந்து, நான்மையும் போலியை நீக்கி - அந்நான்கனுள்ளும் பிழைபடுவனவற்றை நீக்கி, அவைகாட்டல் - அவையினை நிலைபெறச்செய்தல், வான்மையின் மிக்கார் வழக்கு - ஒழுக்கத்தால் உயர்ந்தோர் கடனும்.

(கு-பு.) உரைப்பவன், கேட்பான், உரைக்கப்படுவது - வினையாலணையும் பெயர்கள். புரைப்பு - குற்றம். வான்மை - உயர்வு: ஈண்டு ஒழுக்கம். இதன்கண் அறவுரைக்கின்றியமையா நான்கும் அவற்றின், போலியும் தொகுத்துக் கூறப்பட்டன. அவற்றை மேலே விரிப்பர். (௩.)

## அறமுரைப்பவன் இயல்பு.

அறங்கேட் டருள்புரிந் தைம்புலன்கள் மாட்டும்
இறங்கா திருசார் பொருளும்—துறந்தடங்கி
மன்னுயிர்க் குய்ந்துபோம் வாயி லுரைப்பானே ற
பன்னுதற்குப் பாற்பட் டவன்.

(ப-ரை.) அறம் கேட்டு - அறநூல்கள் பலவுங் கேட்டவனும், அருள்புரிந்து - அருளுடையவனும், ஐம்புலன்கள் மாட்டும் இறங்காது - ஐம்பொறிகளால் நுகரப்படும் இன்பங்களை விரும்பாதவனும், இருசார் பொருளும் துறந்து - அகப்பற்று புறப்பற்றுக்களை விட்டவனும், அடங்கி - அடக்க முடையவனும், மன் உயிர்க்கு - நிலைபெற்ற உயிர்களுக்கு, உய்ந்து போம் வாயில் - வீடுபேற்றுக்குரிய வழியினை, உரைப்பானேல் - உரைப்பவன் ஒருவனுளனாயின், பன்னுதற்குப் பாற்பட்டவன் - (அவன்) அறமுரைத்தற்கு உரியவனாவான்.

(கு-பு.) சார்-பற்று. மன்னுதல்-நிலைபெறுதல். பால்-உரிமை. இதனால், அறமுரைப்பவன் றன்மை விரித்துக் கூறப்பட்டது. அறநூல்களை அற மென்றது ஆகுபெயர். பன்னுதல் - விளக்கிச் சொல்லுதல். ஐம்புலன்கள்-சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம். (௪)

மயக்கத்தைத் தரும் சிற்றின்பத்தால் ஆசை பெருகும் ; காம விழை வின்மையால் வீடு வளரும் - ஆசையைவிட வீடு பேறு உளதாம்.

(கு-பு.) தெருள் - அறிவு. இதன் எதிர்மொழி மருள் தெருளா விழைவு - புணர்ச்சி ; இணைவிழைச்சு. விழைவு விருப்பம். (கசுசு

வீட்டுக்குரிய பொருளை வினவலே செவிப்பயனும்.

பண்ணமை யாழ்குழல் கீதமென் றின்னவை
நண்ணி நயப்ப செவியல்ல—திண்ணிதின்
வெட்டெனச் சொன்னீக்கி விண்ணின்பம் வீட்டொடு
கட்டுரை கேட்ப செவி.

(ப-ரை.) பண் அமை யாழ் குழல் கீதம் என்றின்னவை நண்ணி நயப்ப செவியல்ல - இசையொடு பொருந்திய யாழ் குழல் இசைப்பாட்டு என்பவற்றை அவை நிகழுமிடங்களை யடைந்து விரும்பிக் கேட்பன செவிகளாகா, திண்ணிதின் - உறுதியோடு, வெட்டெனச் சொல் நீக்கி - பிறர் கூறுங் கடுஞ்சொற்களைக் கேளாது, விண்ணின்பம் வீட்டொடு கட்டுரை கேட்ப செவி - துறக்க இன்பத்தினையும் வீடுபேற்றையும் பயக்கும் உறுதி மொழி களைக் கேட்பனவே செவிகளாகும்.

(கு-பு.) இயற்கையிற் செவிக் கின்பஞ்செய்யும் பண் குழல் பாட்டு இவற்றால் மகிழ்வுறும் செவி; செவியல்ல என்றபடி. (கசுஎ)

அஞ்செவிக் கழகு அறவுரை கேட்டல்.

புண்ணுகப் போழ்ந்து புலால் பழிப்பத் தாம்வளர்ந்து
வண்ணப்பூண் பெய்வ செவியல்ல—நுண்ணூல்
அறவுரை கேட்டுணர்ந் தஞ்ஞான நீக்கி
மறவுரை விட்ட செவி.

(ப-ரை.) புண்ணுகப் போழ்ந்து - புண்ணாகுமாறு துளைக்கப் பட்டு, புலால் பழிப்பத் தாம் வளர்ந்து - புலால் நாற்றம் வீசுகிற

தென்று பிறர் பழிக்குமாறு வளர்ந்து, வண்ணப்பூண் பெய்வ செவியல்ல - அழகிய அணிகள் அணியப்படுவன செவிகளல்ல ; நுண் அறநூல் உரைகேட்டு உணர்ந்து - நுண்ணிய அறநூற் பொருள்களைக் கேட்டாராய்ந்து, அஞ்ஞானம் நீக்கி - அறியாமையைப் போக்கி, மறவுரை விட்ட செவி - பாவத்துக்குக் காரணமான சொற்களைக் கேளாதொழிவன செவிகளாகும்.

(கு-பு.) நுண்மை நூல் - நுண்ணூல்; போழ்தல் - பிளத்தல், குத்தல். அறம் X மறம் - எதிர்மொழிகள். அம் - அழகு. (கஙஅ)

அறநூலைக் கேட்டறிந்தனவே அழகிய செவிகளாம்.

கண்டவர் காமுறூஉங் காமருசீர் காதிற்
குண்டலம் பெய்வ செவியல்ல—கொண்டுலகில்
மூன்று முணர்ந்தவற்றின் முன்னது முட்டின்றிச்
சூன்று சுவைப்ப செவி.

(ப-ரை.) கண்டவர் காமுறூஉம் காமருசீர் காதில் குண்டலம் பெய்வ செவியல்ல - பார்த்தவர் விரும்பும் சீரிய அழகினையுடைய காதில் குண்டலங்க ளணியப்படுவன செவிகள் ஆகா ; உலகில் மூன்றும் உணர்ந்துகொண்டு - உலகின்கண் அறம் பொருள் இன்பங்களை யுணர்த்தும் நூல்களைக் கேட்டறிந்துகொண்டு ; அவற்றின் - அவற்றுள் ; முன்னது - தலைமையான அறநூலை, முட்டு இன்றி - ஒழிவின்றி, சூன்று சுவைப்ப செவி - கேட்டு ஆராய்ந்து இன்புறுதற்குக் காரணமாவன செவிகளாகும்.

(கு-பு ) சூன்று - சூல் என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையெச்சம். சூலல் - தோண்டுதல், ஈண்டு ஆராய்தல். "நுங்கு சூன்றிட்டன்ன," நாலடி. காமுறூஉம் - இன்னிசை யளபெடை. (கஙக)

கடவுட் காட்சிகளைக் கண்டனவே கண்களாம்.

பொருளெனப் போழ்ந்தகன்று பொன்மணிபோன் றெங்கும்
இருளறக் காண்பன கண்ணல்ல—மருளறப்

பொய்க்காட்சி நீக்கிப் பொருவறு முக்குடையான்
நற்காட்சி காண்பன கண்.

(ப-ரை.) பொருள் எனப் போழ்ந்தகன்று - பொருள் என்று சொன்னவளவில் மிகத் திறந்து, பொன்மணி போன்று - அழகிய நீலமணி போல, எங்கும் இருளறக் காண்பன கண் அல்ல - எல்லாப் பக்கங்களிலும் இருள் நீங்கக் காண்பன கண்களாகா; மருள் அற - காம வெகுளி மயக்கங்கள் நீங்குமாறு, பொய்க்காட்சி நீக்கி - அழியுந்தன்மையவாகிய மற்றைக் காட்சிகளை நீக்கி, பொரு அறு முக்குடையான் - ஒப்பற்ற மூன்று குடைகளையுடைய அருகனது, நற்காட்சி காண்பன கண் - நிலைபெற்ற திருவுருவைக் காண்பனவே கண்களாகும்.

(கு-பு.) பொரு - ஒப்பு. முக்குடை :—சந்திராதித்தியம்; நித்தியவிநோதம், சகலபாசனம். "முச்சக நிழற்று முழுமதி மூக்குடை அச்சுதன் அடிதொழுதறைகுவன் சொல்லே,"—பவணந்தி. (உ00)

திருவடி மலர்களைச் சேர்ந்து முகர்வதே மூக்காம்.

சாந்தும் புகையும் துருக்கமுங் குங்குமமும்
மோந்தின் புறுவன மூக்கல்ல—வேந்தின்
அலங்குசிங் காதனத் தண்ண லடிக்கீழ்
இலங்கிதழ் மோப்பதா மூக்கு.

(ப-ரை.) சாந்தும் புகையும் துருக்கமும் குங்குமமும் மோந்தின்புறுவன மூக்கல்ல - சந்தனம், அகிற்புகை, கஸ்தூரி, குங்குமப்பூ முதலியவற்றை முகர்ந்து மகிழ்வன மூக்கன்று; ஏந்து இன் அலங்கு சிங்காதனத்து - உயர்ந்து இனிது விளங்குகின்ற சிம்மாதனத்தில் எழுந்தருளியிருக்கும், அண்ணல் அடிக்கீழ்இலங்கு இதழ் மோப்பது மூக்கு ஆம் - அருகனது திருவடிகளிற் பெய்து விளங்குகின்ற மலர்களை முகந்து இன்புறுவதே மூக்காம்.

(கு-பு.) அலங்கு—விளங்கு. இதழ்-சினையாகு பெயர். (உ0க)

திருவடிப் புகழைச் செப்புவதே நாவாம்.

கைப்பன கார்ப்புத் துவர்ப்புப் புளிமதுரம்
உப்பிரதங் கொள்வன நாவல்ல—தப்பாமல்
வென்றவன் சேவடியை வேட்டுவந் தெப்பொழுதும்
நின்று துதிப்பதா நா.

(ப-ரை.) கைப்பன கார்ப்பு துவர்ப்பு புளி மதுரம் உப்பு இரதங் கொள்வன நா அல்ல - கைப்பு கார்ப்பு துவர்ப்பு புளிப்பு இனிப்பு உப்பு என்னும் அறுவகைச் சுவைகளையும் நுகர்ந்து இன்புறுவன நாஅல்ல; தப்பாமல் வென்றவன் சேவடியை வேட்டு உவந்து எப்பொழுதும் நின்று துதிப்பது நா ஆம் - தவறாமல் காம வெகுளி மயக்கங்களை வென்ற அருகனது செய்ய திருவடிகளை எக்காலத்தும் மிக்க விருப்பத்தோடு நின்று துதிப்பதுவே நாவாம்.

(கு-பு.) வேட்டு—வேள் என்னும் பகுதியடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம். செம்மை + அடி = சேவடி. (உ0உ)

நன்ஞான முயற்சியில் நடப்பனவே கால்களாம்.

கொல்வதூஉங் கள்வதூஉ மன்றிப் பிறர்மனையிற்
செல்வதூஉஞ் செய்வன காலல்ல—தொல்லைப்
பிறவி தணிக்கும் பெருந்தவர் பாற்சென்
றறவுரை கேட்பிப்ப கால்.

(ப-ரை.) கொள்வதூஉம் கள்வதூஉம் அன்றிப் பிறர்மனையிற் செல்வதூஉம் செய்வன கால் அல்ல - பிறவுயிரைக் கொல்லவும், பிறருடைமையைத் திருடவும் அல்லாமல் அயலான் மனைவியிடத்தே விழைந்து கூடவும் செல்வதற்கு உதவுவன கால்களாகா; தொல்லைப் பிறவி தணிக்கும் பெருந்தவர்பாற் சென்று அறவுரை கேட்பிப்ப கால் - துன்பத்தை விளைவிக்கும் பிறவிப்பிணியைப் போக்கியருளும் மிக்க தவத்தினையுடைய முனிவர்பா லடைந்து,

அவர் கூறும் அறவுரையைக் கேட்குமாறு செய்வனவே கால்களாகும்.

(கு-பு.) மனை—மனைவி; இடவாகுபெயர். கேட்பிப்ப - பலவின்பால் பிறவினை வினையாலணையும்பெயர். தொல்லைப்பிறவி- பழமையாக வரும் பிறப்பு. கொல்வதூஉம், கள்வதூஉம், செல்வதூஉம் - இன்னிசை யளபெடைகள். (உ0ரு)

திருவடிகளை வணங்கும் தலையே சிறப்புடைத்து.

குற்றம் குறைத்துக் குறைவின்றி மூவுலகின்
அற்ற மறைத்தாங் கருள்பரப்பி—முற்ற
உணர்ந்தானைப் பாடாத நாவல்ல; அல்ல
சிறந்தான்றாள் சேரா தலை.

(ப-ரை.) குற்றம் குறைத்து - காம வெகுளி மயக்கங்களைக் கெடுத்து, மூவுலகின் அற்றம் குறைவின்றி மறைத்து - மூவுலகத்திலும் உள்ளவர்களது அச்சமனைத்தும் துடைத்து, அருள் பரப்பி - அவர்கட் கருள்செய்து, முற்ற உணர்ந்தானை - இயல்பாகவே எல்லா முணர்ந்த இறைவனை, பாடாத நா அல்ல - பாடாதன நா அல்லவாம், சிறந்தான் தாள் சேரா தலை அல்ல - அவன் திருவடிகளை வணங்காதன தலைகளாகா.

(கு-பு.) பாடாத, சேரா - பலவின்பால் வினையாலணையும் பெயர்கள். குற்றம் - மறுதலைமொழி நற்றம். (உ0சு)

உயிருடன் தொடர்ந்து செல்லும் பிணி அறியாமையே.

உடன்பிறந்த மூவ ரொருவனைச் சேவித்
திடங்கொண்டு சின்னா ளிருப்பர்—இடங்கொண்ட
இல்லத் திருவ ரொழிய ஒருவனே
செல்லும் அவன்பின் சிறந்து.

(ப-ரை.) உடன் பிறந்த மூவர் - உயிர் பிறக்கும் பொழுது உடன் தோன்றிய காம வெகுளி மயக்கங்கள், ஒருவனைச் சேவித்திடங் கொண்டு சின்னாள் இருப்பர் - தம்மை வழிபடுமாறு அதனை அடிமைகொண்டு சிலகாலம் அதனோடு உடலிடை உறையா நிற்கும் இடங்கொண்ட இல்லத்து இருவர் ஒழிய - பின்னர் இடமாகக் கொண்ட உடலோடு காமவெகுளிகள் நீங்க, ஒருவனே அவன்பின் சிறந்து செல்லும் - மயக்கமானது அவ்வுயிரை விடாது தொடர்ந்து செல்லும்.

(கு-பு.) உயிர்களுக்கு அவிச்சை அநாதியே உள்ளதென்பதும், உடலோடு கூடி நின்றவழியே காம வெகுளிகள் தோன்றுமென்பதும் இதனாற் கூறினர். ஏ - பிரிநிலை. (உ0ரு)

சினத்தை வென்றவர் சிவபதம் பெறுவர்.

கட்டெனச் சொல்லியக்கால் கற்பிளப்பில் தீயேபோல்
பொட்டப் பொடிக்குங் குரோதத்தை—வெட்டெனக்
காய்த்துவரக் கண்டக்கால் காக்குந் திறலாரே
மோக்க முடிவெய்து வார்.

(ப-ரை.) காய்த்து கட்டெனச் சொல்லியக்கால் - தம்மை வெகுண்டு பிறர் வன்சொற்களைச் சொல்லுமிடத்தும், வெட்டென வரக் கண்டால் - கடுகடுத்துத் தம்மைத் தாக்க வருதலைக் காணுமிடத்தும், கல்பிளப்பில் தீயேபோல் - கல்லை உடைக்குங்கால் அதனிடைத் தோன்றுந் தீயேபோல், பொட்டப் பொடிக்கும் குரோதத்தை - விரைந்து தோன்றும் வெகுளியை, காக்கும் திறலாரே - மேலெழாவண்ணம் அடக்கவல்லவர் யாரோ அவரே, மோக்கமுடிவு எய்துவார் - முத்தி யின்பத்தினையடைபவராவர்.

(கு-பு.) மோக்கம் - மோட்சம்; வடமொழி. ஏ - முன்னது இசைநிறைப் பொருளது; பின்னது பிரிநிலைப் பொருளது. (உ0சு)

### வீட்டுநெறிகட் குரியன.

நல்வினை நாற்கால் விலங்கு நவைசெய்யுங்
கொல்வினை யஞ்சிக் குயக்கலம்—நல்ல
உறுதியு மல்லவும் நாட்பேர் மரப்பேர்
இறுதியி லின்ப நெறி.

(ப-ரை.) நல்வினை நாற்கால் விலங்கு -நல்வினைகளைச் செய்ய முயல்; நவைசெய்யும் கொல்வினை யஞ்சிக் குயக்கலம் -துன்பத்தைத் தரும் தீவினைகளை யஞ்சி அகல்; நல்ல உறுதி நாட்பேர் - சிறந்த ஆன்மலாபத்தைப் புல் (தழுவு); அல்ல மரப்பேர் - ஆன்ம லாபமல்லாதவற்றை முனி (வெறுத்துவிடு); இறுதியில் இன்ப நெறி - இவை வீடு பேற்றினுக்குரிய நெறிகளாகும்.

(கு-பு.) குயக்கலம்- குயவனுல் செய்யப்பட்ட மட்பாண்ட மாகிய அகற்சிட்டி; அகல் - விலகு. நாட்பேர் - புல்; அனுட நாள்.மரப்பேர் - முனி; அகத்திமரம்; அன்றி, பலாசமரமுமாம்.(உ0எ)

### மறுபிறப்பினை ஒழிக்க வழி.

பறவை யரும்பொருள் இன்சொல் முதிரை
உறுதிக்கண் ஊனுண் விலங்கு—சிறியன
நீர்ப்புட் குயக்கலம் புல்லவை யூர்வது
பேர்த்தீண்டு வாரா நெறி.

(ப-ரை.) அரும்பொருள் பறவை - இரப்போர்க்கு அரிய பொருள்களை ஈ; இன்சொல் முதிரை - இனிய சொற்களைக் கொள்; உறுதிக்கண் ஊனுண் விலங்கு - ஆன்மலாபத்துக்கு உரிய வற்றைச் செய்யுங்கால் மடங்கல் (நிலைதளராதே); சிறியன நீர்ப் புள் - அற்ப இன்பங்களை உள்ளல் (கருதாதே); புல்லவை குயக் கலம் - அற்பர்களது அவையை அகல் (சேராதே); ஊர்வது பேர்த்து ஈண்டு வாராநெறி - இவற்றை மேற்கொள்வதே மறு பிறவி வாராமல் தடுக்கும் உபாயமாகும்.

(கு-பு.) ஈ - பறக்கும் சிறிய பிராணிகளில் ஒன்று; கொடு. கொள் - காணம் என்னும் தானியம்; கொள்வாய். மடங்கல் - சிங்கமாகிய மாமிசமுண்ணும் விலங்கு (மிருகம்); பின்வாங்காதே. உள்ளல் - உள்ளான் என்னும் நீர்வாழ் பறவை; நினைக்காதே. (உ0அ)

அழியாப் பேற்றினை யடைவோர் கருதவேண்டியன.

உட்கப் படுமெழுத் தோரிரண் டாவதே
நட்கப் படுமெழுத்தும் அத்துணையே—ஒட்டி
இழுக்கா வெழுத்தொன் றிமிழ்கடற் றண்சேர்ப்ப!
விழுச்சார்வு வேண்டு பவர்க்கு.

(ப-ரை.) இமிழ்கடல் தண் சேர்ப்ப - ஒலிக்கின்ற குளிர்ந்த கடற்றுறையை யுடையவனே! விழுச்சார்வு வேண்டுபவர்க்கு - அழியா நிலையை யடைய விரும்புவோரால், உட்கப் படுமெழுத்து ஓரிரண்டாவதே - அஞ்சத் தகுவது இரண்டெழுத்துக்களாலாகிய வினையாம், நட்கப் படுமெழுத்தும் அத்துணையே- விரும்பத் தகுவது அவ்விரண்டெழுத்துக்களாலாகிய வீடு ஆகும், ஒட்டி இழுக்கா எழுத்து ஒன்று - நட்பாகக்கொண்டு அதனின் வழுவா திருக்கத் தகுவது ஓரெழுத்தாலாகிய ஆ (சிவஞானம்) ஆகும்.

(கு-பு.) வேண்டுபவர்க்கு - வேற்றுமை மயக்கம். வினை - நல்வினைகளும், தீவினைகளுமாம். வீடு - மோட்சம். ஆ - சிவஞானம்.

துறவியின் தூய்மையும் பெருமையும்.

முப்பெயர் மூன்றும் உடன்கூட்டி ஓரிடத்துத்
தப்பிய பின்றைத்தம் பேரொழித்—தப்பால்
பெறுபெயரைக் காயப் பெறுபவேல் வையத்
துறுமவனை யெல்லா மொருங்கு.

(ப-ரை.) முப்பெயர் - மூன்றாகப் பெயர் பெற்ற, மூன்றும் - உலகமூடம், பாசண்டிமூடம், தெய்வமூடம் என்ற மூன்றினையும்,

உடன்கூட்டி - ஒன்று சேர்த்து, ஓர் இடத்து - அமைதியான ஓரிடத்திலே அமர்ந்து ஆலோசித்து, தப்பிய பின்றை - அம் மூன்றையு மொழித்து விலக்கிய பிறகு, தம்பேர் ஒழித்து - தம் ஆணவமாகிய பெயரினையும் விலக்கி, அப்பால்-துறவுநிலைக்குப் பின், பெறு பெயரை - பெறக்கடவதாகிய தூயோன் என்ற புகழ்ச் சொல்லையும், காய - வெறுக்க, பெறுபவேல் - மக்கள் பெற வார்களேயாயின், வையத்து - இவ்வுலகத்திலே, அவனை எல்லாம் ஒருங்கு உறும் - அவ்விதம் பெற்ற அப் பெரியோனை எல்லாப் பொருளும் ஒன்றாக அடையும்.

(கு-பு.) துறவிகளுக்குத் தம் பெயர் கூறலும் கூடாவாகலின் பேரொழித்தல் கூறப்பட்டது. பேர் கூறல் 'நான்' எனு நினைவு தலைப்படுதலாமென்பது சான்றோர் கருத்தாதலின், 'ஆணவமாகிய பெயர்' எனக் கண்ணழிக்கப்பட்டதென்க. இங்ஙனம் உயர்ந்த துறவுநிலை பெறுதல் ஆயிரத்தொருவர்க்கே கூடுமாகலின் 'பெறுப வேல்' எனப் பலர்பாற் சொற்கொண்டு தொடங்கி 'அவனை' என ஆண்பாற் சொல்லான் முடிக்கலாயினர். இது சிறப்புக்கருதிவந்த வழுவமைதி யென்க. (உ௯௦)

உலகோரால் தூற்றப்படுவோன் ஒழிந்துவிடல் நலமாம்.

ஆற்றாமை யூர வறிவின்றி யாதொன்றும்
தேற்றா னெனப்பட்டு வாழ்தலின்—மாற்றி
மனையி னகன்றுபோய் மாபெருங் காட்டில்
நனையி லுடம்பிடுதல் நன்று.

(ப-ரை.) ஆற்றாமை ஊர அறிவின்றி யாதொன்றும் தேற்றான் எனப்பட்டு வாழ்தலின் - துன்பங்கள் மிக அறிவில்லாமல் தன்னுயிர்க்காவதோர் உறுதி ஒன்றும் தெரியாதவனெனப் பலரானும் இகழப்பட்டு வாழ்தலினும், மாற்றி மனையின் அகன்று - இல்வாழ்க்கையைவிட்டு மனையினகன்று, மாபெருங் காட்டில் போய் - மிருகங்கள் வழங்கும் பெரிய காட்டிடைச் சென்று, நனை

இல் உடம்பு இடுதல் நன்று - இனிமை பயவாத அவ்வுடலினை விடுதல் நல்லது.

(கு-பு.) இன் - ஐந்தனுருபு; எல்லைப் பொருளது. இடுதல் - போடுதல்; இறக்கவிடல். (உ.கக)

உண்மைச் சுற்றத்தார் இவரென்பது.

நல்லற மெந்தை நிறையெம்மை நன்குணரும்
கல்வியென் தோழன் துணிவெம்பி—அல்லாத
பொய்ச்சுற்றத் தாரும் பொருளோ பொருளாய
இச்சுற்றத் தாரி லெனக்கு.

(ப-ரை.) நல்லறம் எந்தை - நல்லறமே எனது தந்தை, நிறை எம்மை - அறிவே எனதுதாய்; நன்குணரும் கல்வி என் தோழன் - நன்மையை யுணர்தற்குக் காரணமாய கல்வியே என்னுடைய தோழன்; துணிவு எம்பி - மனத்தெளிவே என்னுடைய தம்பி; பொருளாய இச் சுற்றத்தாரில் எனக்கு - உறுதி பயக்கும் இச் சுற்றத்தார்போல எனக்கு, அல்லாதபொய்ச் சுற்றத்தாரும் பொருளோ-இவையல்லாத தந்தைதாய் தோழன் உடன்பிறந்தார்களாகிய பொய்ச் சுற்றத்தார் உறுதிபயப்பரோ? பயவார்.

(கு-பு.) எம்மை = என் + அம்மை. எம் + பின்னவன் = எம்பி. ஓ - எதிர்மறைவினாப் பொருளது. இல் - ஐந்தனுருபு; ஒப்புப் பொருள். நிறை - மனவடக்கமெனினுமாம். (உகஉ)

பொய்ச்சுற்றத்தார் இவரென்பதும், அவரால் வருந்துயரமும்.

மக்களே பெண்டிர் மருமக்கள் தாய்தந்தை
ஒக்க வுடன்பிறந்தா ரென்றிவர்கள்—மிக்க
கடும்பகை யாக உழலும் உயிர்தான்
நெடுந்தடு மாற்றத்துள் நின்று.

(ப-ரை.) மக்களே பெண்டிர் மருமக்கள் தாய் தந்தை ஒக்க உடன்பிறந்தார் என்ற இவர்கள் - மக்களும் மனைவியரும் மருமக்களும் தாய் தந்தையரும் தன்னுடன் பிறந்தாருமாகிய இவர்கள், மிக்க கடும்பகையாக - இன்பம் பயப்பார் போன்றே மிகக் கொடிய துன்பத்தைச் செய்வதால், உயிர் - உயிரானது, நெடுங் தடுமாற்றத்துள் நின்று உழலும் - மிக்க கலக்கத்துக்குக் காரணமாய உலக வாழ்க்கையிடைப்பட்டு வருந்தும்.

(கு-பு.) என்ற + இவர்கள் = என்றிவர்கள் - அகரந் தொகுத்தல். தான் - அசைநிலை. ஏ - எண்ணுப் பொருளது. பகையாக - காரணப் பொருளில் வந்த செயவென் வாய்பாட்டு வினையெச்சம்.

உடலின் இன்றியமையாமை.

அளற்றகத்துத் தாமரையாய் அம்மல ரீன்றாங்
களற்றுடம் பாமெனினு நன்றாம்—அளற்றுடம்பின்
நன்ஞானம் நற்காட்சி நல்லொழுக்கம் என்றவை
தன்னால் தலைப்படுத லான்.

(ப-ரை.) அளற்றகத்து ஆய் தாமரை அம மலர் ஈன்றாங்கு - சேற்றினிடத்து வளர்ந்தே தாமரை அழகிய மலர்களை ஈனுதல் போல, அளற்றுடம்பின் நன்ஞானம் நற்காட்சி நல்லொழுக்கம் என்றவை - தூயதல்லாத உடம்பொடு கூடிநின்ற வழியே நன்ஞானம் நல்லறிவு நல்லொழுக்கம் என்பன, தன்னால் தலைப்படுதலால் - ஒருவனால் அடையக்கூடுமாதலால், உடம்பு அளறு ஆம் எனினும் நன்றாம் - உடம்பு மலமயமானதே யெனினும் அதனோடு கூடி வாழ்தலே நல்லது.

(கு-பு.) ஆங்கு - உவம உருபு. எனினும் - உம்மை இழிவு சிறப்பு. அளறு - குழை சேறு. (உகஅ)

மயக்க வுணர்வால் வருந்துன்பங்கள்.

தேற்றமில் லாத ஒருவனைப் பின்னின்றுங்
காற்ற நலிவர் இருநால்வர்—ஆற்றவும்

நல்லார்போல் ஐவர் பகைவளர்ப்பர் மூவரால்
செல்லும் அவன்பின் சிறந்து.

(ப-ரை.) தேற்றம் இல்லாத ஒருவனை - உண்மைப் பொருளின் தன்மை இதுவெனத் தெளியாத ஒருவனை, இருநால்வர் பின்னின்று ஆற்ற நலிவர் - அப்பிரத்தியாக்கியானக் குரோதம் முதலிய வெட்டும் பின்பற்றி மிகமெலிவிக்கும்; ஐவர் நல்லார்போல் ஆற்றவும் பகை வளர்ப்பர் - மெய்முதலிய பொறிகளைந்தும் இன்பம் பயப்பன போன்று மிக்கதுன்பத்தையே வளர்க்கும்; மூவரால் அவன் பின் சிறந்துசெல்லும் - ஐ வளி பித்து என்னும் மூன்றன் மாறுபாட்டால் அவன் பின் மரணமடைவான்.

(கு-பு.) 'இருநால்வர்' என்றது எண்வினையை; அவை அப்பிரத்தியாக்கியானக் குரோதம், அப்பிரத்தியாக்கியானமானம், அப்பிரத்தியாக்கியானமாயை, அப்பிரத்தியாக்கியானலோபம், பிரத்தியாக்கியானக் குரோதம், பிரத்தியாக்கியானமானம், பிரத்தியாக்கியானமாயை, பிரத்தியாக்கியானலோபம் என்பன. 'பின் சிறந்து செல்லும்' என்பது மங்கலவழக்கு. இதனால் உண்மையுணர்வில வழி வருவதோரிழுக்குக் கூறப்பட்டது. ஆங்கு - அசைநிலை. (உ௩௬)

அறிவாளிகட்கே உம்மைப் பொருள் உணர்த்தலாகும்.

அருவினையும் ஆற்றுள் வருபயனும் ஆக்கும்
இருவினையும் நின்ற விளைவும்—திரிவின்றிக்
கண்டுணர்ந்தார்க் கல்லது காட்டதரும் நாட்டதரும்
கொண்டுரைப்பா னிற்றல் குதர்.

(ப-ரை.) அருவினையும் ஆற்றுள் வருபயனும் - துறவையும் அத்துறவின்கண் எய்தும் பயனையும், ஆக்கும் இருவினையும் நின்ற விளைவும் - உலகோர் செய்யும் நல்வினை தீவினைகளையும் அவற்றால் எய்தநின்ற இன்பதுன்பங்களையும், திரிவுஇன்றிக் கண்டு உணர்ந்தார்க்கல்லது - உள்ளவாறே ஆராய்ந்து அறிய விரும்புவோர்க்கன்றி காட்டதரும் நாட்டதரும் - உலக நெறியையும், வீட்டு நெறியையும்

கொண்டுரைப்பான் நிற்றல் குதர் - உட்கொண்டு சொல்லத் தொடங்குதல் வீணையாகும்.

(கு-பு.) அதர் - வழி, நெறி. உலகப்போக்கு, பலபெருந் துன்பங்கள் மலிந்து நிற்றலின், "காட்டதர்," எனப்பட்டது. வீட்டு நெறி; காரணகாரியங்களாற்கூறி நாட்டிச் செல்கின்றமையின், "நாட்டதர்," எனப்பட்டது. (உகசு)

அறநெறிச்சாரத்தால் அறிவு விளங்கும்.

ஆதியின் தொல்சீர் அறநெறிச் சாரத்தை
ஓதியுங் கேட்டும் உணர்ந்தவர்க்குச்—சோதி
பெருகிய உள்ளத்த ராய்வினைகள் தீர்ந்து
கருதியவை கூடல் எளிது.

(ப-ரை.) ஆதியின் தொல்சீர் அறநெறிச்சாரத்தை - முதற் கடவுளான அருகனது பழமையான புகழை விளக்கும் இவ் வறநெறிச்சாரத்தினை, ஓதியும் கேட்டும் உணர்ந்தவர்க்கு - கற்றும் கேட்டும் அறிந்தவர்கட்கு, கருதியவை கூடல் எளிது - கருதிய காரியங்கள் எளிதில் முடியும், சோதி பெருகிய உள்ளத்தராய் வினைகள் தீர்ந்து - அவர் ஞான வொளி பெருகிய மனத்தவராய் இருவகை வினைகளினின்றும் நீங்கப்பெறுவதால்.

(கு-பு.) உணர்ந்தவர், உள்ளத்தராய், தீர்ந்து, கூடல் எளிது என முடிக்கலுமாம். (உகஎ)

அறநெறிச்சாரம் வீட்டினை யடைவிக்கும்.

எந்நூல்க ளோதினும் கேட்பினும் என்செய்யும்?
பொய்ந்நூ லவற்றின் பொருடெரிந்து—மெய்ந்நூல்
அறநெறிச் சாரம் அறிந்தான்வீ டெய்தும்
திறநெறிச் சாரந் தெளிந்து.

(ப-ரை.) பொய்ந்நூல் எந்நூல்கள் ஓதினும் கேட்பினும் அவற்றின் பொருள் தெரிந்து என் செய்யும் - பொய்ந்நூல்களாகிய

மறறை நூல்களைக் கற்றும் கேட்டும் அவற்றின் பொருளை யறிவ தால் யாது பயன்? மெய்ந்நூல் அறநெறிச்சாரம் அறிந்தான் - உண்மை நூலாகிய இவ் வறநெறிச்சாரத்தினைக் கற்றும் கேட்டும் அறிந்தவன், திறநெறிச்சாரம் தெளிந்து - உறுதிபயக்கும் நெறி யின் பயனை அறிந்து அந்நெறியில் நின்று, வீடு எய்தும் - வீடு பேற்றினை அடைவான்.

(கு-பு.) அறிந்தான் - வினையாலணையும் பெயர். (உகச)

சிவனைச் சிந்திக்க அவமேதுமில்லை.

அவன்கொல் இவன்கொலென் றையப் படாதே
சிவன்கண்ணே செய்ம்மின்கள் சிந்தை—சிவன்றானும்
நின்றுகால் சீக்கும் நிழறிகழும் பிண்டிக்கீழ்
வென்றிச்சீர் முக்குடையான் வேந்து.

(ப-ரை.) அவன் கொல் இவன் கொல் என்று ஐயப்படாதே சிவன்கண்ணே சிந்தை செய்மின்கள் - இறைவனாவான் அவனோ இவனோ என்று ஐயமுறாமல் சிவன்பாலே சிந்தையை நிறுத்துங் கள், சிவன்றானும் - அச்சிவனும், நின்று கால் சீக்கும் - எப்பொழு தும் அடைந்தாரது இடரைத் துடைக்கும், நிழல் திகழும் - அருள் மிக்க, பிண்டிக்கீழ் - அசோகின் கீழ் எழுந்தருளியிருக்கும், வென்றி - வெற்றியையுடைய, சீர் - சிறந்த, முக்குடையான் - மூன்று குடைகளுடையவனாகிய, வேந்து - அருகனேயாவான்.

(கு-பு.) நின்று கால் சீக்கும் நிழல் திகழும் - என்பதைப் பிண்டிக்கு அடையாக்கி, எப்பொழுதும் அடைந்தாரது வெம்மையைத் துடைக்கும் குளிர்ச்சி மிக்க என்று பொருள் கூறினும் பொருந்தும். சிந்தையை நிறுத்துதலாவது இடைவிடாது சிந்தித்தல். கொல் ஐயப்பொருள். (உகரு)

இறைவனைப் பாடிப் பெற்ற பரிசில்.

முனைப்பாடி யானைச்சூர் முக்குடைச் செல்வன்
றனைப்பாடி வந்தேற்குத் தந்த பரிசில்

விளைப்பாடு கட்டழித்து வீட்டின்ப நல்கி
நினைப்பாடி வந்தோர்க்கு நீமீக வென்றான்
நிறைவிளக் குப்போ லிருந்து.

(ப-ரை.) முனைப்பாடியானை சூர்முக்குடைச் செல்வன்றனை - திருமுனைப்பாடியின்கண் எழுந்தருளியிருப்பவனும் தெய்வத் தன்மை வாய்ந்த மூன்று குடைகளையுடைய செல்வனுமாகிய அருகனை, பாடிவந்தேற்கு - பாடியடைந்த எனக்கு, தந்த பரிசில் - அவன் அருளிய பரிசிலாவது, விளைப்பாடு கட்டழித்து - மிக்க வினைத் தொடர்பை அழித்து, வீட்டின்பம் நல்கி - முத்தி யின்பத்தை யருளினதேயன்றி, நிறைவிளக்குப் போலிருந்து - நந்தாவிளக்கே போன்று விளங்கி, நினைப்பாடி வந்தோர்க்கும் - உன்னைப் பாடி யடைந்தவர்கட்கும், நீம் ஈக என்றான் - அறிவினை நல்குவாயாக என்று கூறியருளியதுமாகும்.

(கு-பு.) சூர் - தெய்வம், நீம் - நீமம் என்பதன் கடைக்குறை. நீமம் - ஒளி. நினைப்பாடி - நினைத்து எனலுமாம். இச் செய்யுள் ஐந்தடியால் வந்த பஃறொடை வெண்பா. (உஉம)

அறநெறிச்சாரம் மூலமும் விருத்தியுரையும்

முற்றிற்று

# அநுபந்தம்

அருள்வட்ட மாக வறிவு கதிராய்ப்
பொருள்வட்ட மெல்லாம் விளக்கி—இருள்வட்டம்
மாற்றும் அறிவான ஞான வளரொளியான்
வேற்றிலிங்கந் தோன்றும் வெளிறு. க

மாமாங்க மாடல் மணற்குவித்தல் கல்விடுதல்
தாமோங் குயர்வரைமேற் சாவீழ்தல்--காமங்கொண்
டாடோ டெருமை யறுத்தல் இவையுலக
மூடம் எனவுணரற் பாற்று. உ

சக்கரன் நான்முகன் சங்கரன் பூரணன்
புத்தன் கபிலன் கணாதரனென்—றெத்திறத்
தேகாந்த வாதிக ளெண்கேட்ட ஆதன்போல்
ஆகாதாம் ஆத்தன் றுணிவு. ௩

கடம்பன்றான் றன்னொடு காம்படுதோள் வள்ளி
உடம்பினுங் கூட்ட மதுவுவந்து கேட்பர்—அடங்கிக்
கொடுத்துண்மின் கொண்டொழுக்கங் காணுமி
[னென்பார்சொல்
அடுப்பேற்றி யாமைதீந் தற்று. ௪

நன்ஞான நற்காட்சி நல்லொழுக்க மென்றிவை
நன்ஞன் முடித்தரு னில்லையேற்-பொன்னேபோல்
ஆவட்டஞ் செய்த வணிகலந் தேயகிற்போ
லாய்வட்ட மில்லா துடம்பு. ௫

நாலிறகிற் கண்ணிலதே யெனினு நன்பொருளின்
பேரிறையா னுண்பெயரிற் பிற்சிறக்கு மோரிரண்
டிறகிற் கண்ணுளதே யெனினு மதனை
வெருண்டு விலங்காமற் கா. ௬

குறிப்பு :—இந்த ஆறு செய்யுள்களும் பொருள் விளக்கமின்மை
யால் அநுபந்தமாக வெளியிடப்பட்டன.

# அறநெறிச்சாரம்

## முதற்குறிப்பகராதி

# அறநெறிச்சாரம்

## அருஞ்சொற்பொருளகராதி

[எண் பக்கவெண்]

ஒ

ஒக்கும் - நிகர்க்கும் கூO
ஒட்டி - துணிந்து ருஅ
ஒண்பொருள் - சிறந்த செல்வம் கO
ஒப்புரவு - யாவர்க்கும் ஒருபடித்தாய் உதவி செய்தல் ரு
ஒருங்கு - முழுவதும் ருரு
ஒருதலை - உறுதி எச
ஒருவாது - நீங்காது ௩க
ஒல்கா - தளராத உஎ
ஒவ்வா - மாறுபட்ட உரு
ஒவ்வுதல் - ஒப்பாதல் சுக
ஒளி-நன்கு மதிக்கப்படுதல் ருச
ஒறு - அடக்கு சுஎ
ஒறுத்தல் - துன்புறுத்தல் சுஎ
ஒற்றி-அடைமானமாய்க் கொண்டபொருள் அக
ஒன்றல் - பொருந்தல் கஎ

ஓ

ஓச்சி - ஓங்கி கOக
ஓத்து - கல்வி சஎ
ஓம்புதல் - பாதுகாத்தல் அக; மேற்கொள்ளல் அஉ
ஓர்த்து - ஆராய்ந்து எஅ, அஉ
ஓர்ப்பு - துணிவு சுஎ
ஓவாதே - ஒழிவின்றி ருசு

க

கஞ்சத்துள் - அப்பவருக்கத்துள் சசு
கடி - போக்கு ௩௩
கடுவினை — தீவினை கO௩
கடைப்பிடித்து - உறுதியாகக் கொண்டு கக
கடையாய-பழிக்கப்படுவன சஎ
கடையாயர் - கயவர் ககஎ
கட்டளை - செங்கல் அறுக்குங் கருவி உ௩
கட்டு - பாசம் சு, தளை உஅ; உறுதி ருசு
கட்டுரை - உறுதிமொழி கஉஉ
கதி - பிறவி ௩எ
கதிப்பட்டநூல் - ஞானநூல் சசு
கதுப்பு - கூந்தல் ருகூ
கயக்கு - சோர்வு கO; கலக்கம் ௩க
கரகம் - கமண்டலம் ௩கூ
கரவு - தீய எண்ணம் சசு
கரி - சான்று அஎ, கூ௩
கலம் - பாண்டம் கூரு
கலாய் - கோபங்கொண்டு கOசு
கலுழ்தல் - அழுதல் கO
களி - கட்குடியன் ச, ரு௩; மயக்கம் ககஎ
களிறு - ஆண்யானை அஎ
களை - நீக்கு ககச
களைகட்டு - களைபிடுங்கி கக
களைகண் - ஆதரவு, பற்றுக்கோடு ருக
கள் - தேன் அஅ
கறுத்து - வெகுண்டு அரு
கனையிருள் - நள்ளிருள் ௩௩
கன்றி - வருந்தி ருசு

கா

கா - காவடி ௩கூ
காட்சி - அறிவு அ
காட்டதர் - உலகநெறி க௩௩
காணல் - ஆராய்தல் க
காமர் - அழகு கஉ௩

திறம் - செயல் ௬௬
திறம்பா - மாறுபடாத ௯
திறவுரை - உறுதிமொழி ௨0

தீ

தீக்கருமம் - தீவினை ௧௧௭
தீர்வில் - நீங்குதலில்லாத ௯௧

து

துஞ்சா - அழிவில்லாத ௧௬
துஞ்சினாய் - இறந்தாய் ௪௯
துணித்தல் - துண்டாக்கல் ௧௪
துப்பு - நுகர்பொருள் ௧௫
துப்புரவு - அனுபவித்தல் ௭௧
துய்த்தல்-அனுபவித்தல் ௯௩; நுகர்தல் ௯௬
துருக்கம் - கஸ்தூரி ௧௨௪
துறவுடைமை - பற்றுவிடுதல் ௮
துன்னல் - தைத்தல் ௨௨

தெ

தெண்ணீர் - தெளிந்தநீர் ௧௧௭
தெருள் - அறிவு ௧௨௨
தெற்ற - மாறுபட ௬௨
தெற்றிற்று - செலுத்தப் படாமல் தடைப்பட்டு ௧0௧
தெற்றென - கடுக ௪௬

தே

தேம் - இனிமை ௧௧௭
தேம்பிவிடுதல் - அழிந்துவிடுதல் ௮௨
தேய்த்து - அழித்து ௬
தேர்ந்து - ஆராய்ந்து ௯0
தேறாதவன் - தெளியாதவன் ௩௯
தேறி - தெளிந்து ௧௧௬
தேற்றம் - தெளிவு ௧௩௩

தொ

தொக்க - கூடிய ௧0௪
தொண்டு - அடிமை ௪0
தொலைவின் துணிவு - அழிவின் நிச்சயம் ௨௪

தோ

தோல்காவி - கல்லாடை ௩௯
தோற்றம் - பிறப்பு ௭௧

ந

நட்டாஅய் - நடத்தி ௯௯
நண்பு - நட்பு ௯
நயந்து - விரும்பி ௧௧௫
நயன் - நீதி ௬௩
நலன் - இன்பம் ௮௭
நற்காட்சி - மன அமைதியாலுண்டாம் அரிய கடவுட் டோற்றம் ௪௩
நனைஇல - இனிமை பயவாத ௧௩0, ௧௩௧
நன்மை - உறுதி ௮௬

நா

நாட்டல் - நிலைநிறுத்தல் ௬
நாப்பண் - இடை ௧௧௫
நாள்உலப்ப - நாள் வீணே அழியுமாறு ௧௧

நி

நிச்சலும் - எக்காலத்தும் ௧0௨
நிரயம் - நரகம் ௧௬
நிறை - மனதை நல்வழியில் நிறுத்தலாகிய நற்பழக்க வழக்கங்கள் ௪௯, அறிவு, ௧௩௧
நிறைவிளக்கு - நந்தா விளக்கு ௧௩௬
நின்றுழி - நின்றவிடம் ௬௮

நீ

நீத்தல் - நீங்குதல் ௪௮

மே

மேதை - அறிவுடையவன் ௫௪
மேவரிய - அடைதற்கரிய ௧௧௩
மேவாது - பொருந்தாது ௮௩
மேலைப்பிறப்பு - வரும் பிறப்பு ௧௭
மேன்மை - பெருமை ௮

மை

மை ஆ - மலட்டுப்பசு ௩௪

யா

யாத்தல் - கட்டுதல் ௬௯

வ

வடு - குற்றம் ௬௩
வண்ணம் - வடிவம் எடு; அழகு ௧௨௩
வரைத்து - எல்லையினை யுடைத்து ௪௪
வறை - வறுத்த வறுவல் ௬௩
வனப்பு - அழகு ௧௧௦

வா

வாயில் - வழி ௩
வாய்த்து - பொருந்தி ௭௮
வான் சகடம் - உயர்ந்த வண்டி ௧௦௧
வான்மை - உயர்வு ௩

வி

விடக்கு ஊர்தி - இறைச்சியாலாகிய வாகனம் ௧௭
விடுமாற்றம் - போக்கும் உபாயம் ௯௦
விண் - ஆகாயம் ௬௯
வித்தி - விதைத்து ௫௨, ௧௧௯
விநயம் - ஒழுக்கமுடைமை ௩௭
விம்மாது - மகிழாமல் ௯௩
விழுத்து - விழுந்து ௮௨
விழைதல் - விரும்பல் ௬௪
விழையாமை - விரும்பாமை ௯௮

வீ

வீடு - மோக்ஷம் ௧௨௯
வீட்டதர் - வீட்டு நெறி ௧௩௩
வீட்டுதற்கு - அழிப்பதற்கு ௧௩
வீறு - பெருமை ௧௦௬

வெ

வெஃகாமை - விரும்பாமை ௯௮
வென்றி - வெற்றி ௧௩௫

வே

வேட்டு - விரும்பி ௬௯, ௧௨௫
வேய்ந்த - மூடின ௭௬

வை

வைகலும் - நாள்தோறும் ௨௦
வைப்பு - சேமநிதி ௧௧௧

---

The Jupiter Press, Madras

கழக வெளியீடு—௨௨௫

# குமர குருபர அடிகள்

அருளிய

# நீதிநெறி விளக்கம்





[redacted] மாணாக்கரும், கழகத் தமிழ்ப் புலவராயிருந்தவருமாகிய

திருவாளர் தி. சு. பாலசுந்தரம் பிள்ளை

(இளவழகனார்)

எழுதிய விளக்கவுரையுடன்



திருநெல்வேலி, தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்

திருநெல்வேலி :: சென்னை

வெகுதானிய—மாசி

# பதிப்புரை

நீதிநெறி விளக்கம் என்ற இந்நூல் "உலகிலாது யாருந் தீதெலா மொருவி நீதியே புரிய"ப் பயன்படுமாறு, சித்தாந்த சைவமதத்தைச் சார்ந்த குமரகுருபர அடிகளாற் பதினேழாம் நூற்றாண்டி லியற்றப்பட்டதாகும். மிகவும் அருமைவாய்ந்த திருக்குறள் என்னுந் தீந்தமிழ் மறையை யொட்டி, மதுரையரசர் திருமலைநாயக்கர்தம் விருப்பத்திற் கிணங்கச், சுருக்கமாகவும் தெளிவாகவும் இயற்றப்பட்ட இச் சிறு நீதிநூல் ௧0௨ வெண்பாக்களைக் கொண்டிலகுவதாகும்.

சங்கச் செய்யுட்களோடு ஒருங்குவைத் தெண்ணத்தக்க பெருமைவாய்ந்த இந்நூல் சொற்செறிவும் பொருட்செறிவு முடையது; பத்தழகும் பண்புற அமைந்தது; சீரிய செந்தமிழ்நடையா னியல்வது; வடசொற்கள் பெரிதும் கலக்கப் பெறாதது; அணிநலம் பலவுஞ் சிறந்து மிளிர்வது அறிவிற் சிறந்த தமிழாசிரியர்கள் பலரால் இதற்கு உரைகள் பல இயற்றப்பட்டிருப்பதும், ஆங்கிலேயரை யுள்ளிட்ட அறிஞர் பலரால் இதற்கு ஆங்கில மொழிபெயர்ப்புக்கள் பல செய்யப்பட்டிருப்பதும் இதன் அருமை பெருமைகளுக்குச் சான்றாகும்.

இத்தகைய சிறந்த நூல், ஆசிரியர் மறைமலையடிகளாரின் மாணவரும், நங் கழகத் தமிழ்ப் புலவருமா யிருந்துவந்த இளவழகனார் என்ற திருவாளர் தி. சு. பாலசுந்தரம் பிள்ளை யவர்கள் அரிதின் முயன்றெழுதிய தெளிபொருள் விளக்க வுரையுடன் இப்பொழுது நங் கழக வெளியீடாகச் செவ்விய முறையில் வெளிவருகின்றது. அச்சிடுமுன் இதனைப்

பார்த்துக் குறிப்புக்கள் பல எழுதியுதவிய பாளையங்கோட்டை அர்ச் சவேரியார் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் திருவாளர் பு. சி. புன்னைவனநாத முதலியார் அவர்கட்கு எம் நன்றி உரியதாகுக. தமிழ்மக்களும் சைவ நன்மக்களும், மாணவர்களும் இதனை விரைந்தேற்று எம்மை ஊக்குவார்களென்று நம்புகிறோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

திருச்சிற்றம்பலம்

---

# குமரகுருபர அடிகள் வரலாற்றுச் சுருக்கம்

பாண்டிநாட்டிலேயுள்ள ஸ்ரீவைகுண்டத்திலே சைவ வேளாளர் குலத்திலே சண்முக சிகாமணிக் கவிராயரும் அவர் மனைவியார் சிவகாமி யம்மையாரும் செய்த தவப்பயனாக நன் மகனாரொருவர் பிறந்தனர். அம்மகனார் ஐந்தாண்டளவும் பேசா திருந்தமை கண்ட பெற்றோர் திருச்செந்தூர் சென்று முருகக் கடவுளை வழிபட, அப்பெருமான் அருளால் அம்மகனார் ஊமை நீங்கிச், சைவசித்தாந்த சாத்திரசாரமாய் விளங்கும் ' கந்தர்கலி வெண்பா ' என்னும் பாடலை அப் பெருமான்மீது தோத்திர மாக அருளிச் செய்தனர். முருகக்கடவுள் அவர் கனவிலே குமரவடிவங்கொண்டு தோன்றி, ' நீ குருபரனாகுக ' என்றருளிய தால், அன்றுமுதலாக அவர் குமரகுருபரரென அழைக்கப்பட்டார்.

முருகக் கடவுள் ஆணைப்படி குமரகுருபரர் ஒரு சமயம் வடதிசை செல்லும்போது ' மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் ' பாட, அக்காலத் தரசராகிய திருமலை நாயகர் மீனாட்சி யம்மை யருளால் அதனைத் தெரிந்து அப் பிள்ளைத்தமிழை அம்பிகை சந்நிதியில் அரங்கேற்றுவித்தனர். அப் பிள்ளைத் தமிழின் வருகைப்பருவத்து ஒன்பதாவது செய்யுளாகிய, ' தொடுக்குங் கடவுட் பழம்பாடற் றொடையின் பயனே ' என்று தொடங்குஞ் செய்யுளுக்குக் குமரகுருபரர் பொருளுரைக்கும் போது மீனாட்சியம்மையார் அருச்சகரின் பெண் போன்று திருக்கோலங் கொண்டு அரசர் கழுத்திலணிந்திருந்த மணி வடத்தைக் கழற்றிக் குமரகுருபரர் கழுத்திலிட்டு மறைந்தருளி னர். குமரகுருபரர் பின்னர் ' மீனாட்சியம்மை குறம் ', ' மீனாட்சி யம்மை யிரட்டைமணிமாலை, ' ' மதுரைக்கலம்பகம் ', நீதிநெறி விளக்கம் ' என்பனவற்றை இயற்றியருளினர்.

பின்பு திருவாரூர் சென்று தியாகராசப் பெருமானை வணங்கித் 'திருவாரூர் நான்மணிமாலை' என்னும் பிரபந்தத்தைக் குமாரகுருபரர் பாடினார்; அப்பால் தருமபுரஞ் சென்று அங்கே நான்காவது குருமூர்த்தியா யெழுந்தருளியிருந்த மாசிலாமணி தேசிகரிடம் ஞானோபதேசம் பெற விரும்பி அவராணைப்படி சிதம்பரஞ் செல்லப் புறப்பட்டு வைத்தீசுரன் கோவில் அடைந்து குமரக்கடவுண்மீது 'முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்' என்னும் பிரபந்தம் பாடினார். பின் சிதம்பரஞ் சென்று நடராசப் பெருமான்மீது 'சிதம்பரமும்மணிக்கோவை', 'சிதம்பரச்செய்யுட்கோவை' என்னுமிரண்டு பிரபந்தங்களையும், அம்பிகைமீது 'சிவகாமியம்மையிரட்டைமணிமாலை' என்னும் நூலையும் பாடினார். பின் தருமபுரஞ் சாரவும், மாசிலாமணி தேசிகர் அவருக்கு ஞானோபதேசஞ் செய்தார். அக் கருணையை வியந்து தம்மாசிரியர்மீது 'பண்டாரமும்மணிக்கோவை' யென்னும் பிரபந்தம் பாடி அதனை அவ்வாசிரியர்க்குச் சமர்ப்பித்தனர்.

பின்னர் அம் மாசிலாமணி தேசிக ராணைப்படி தமக்குத் திருமலை நாயகராற் கொடுக்கப்பட்ட பொருளைக்கொண்டு காசிக்குப்போய், விசுவநாதப் பெருமான்மீது 'காசிக்கலம்பகம்' என்னும் பிரபந்தம் பாடினார். அந் நாட்டு மகம்மதிய அரசனிடம் மடங்கட்ட இடம்பெற விரும்பிச், சாசுவதி யம்மையார் மீது 'சகலகலாவல்லிமாலை'ப் பிரபந்தம் பாடி, இந்துஸ்தான் பாஷையை யறிந்து, அரசனிடம் சென்று பல அற்புதங்கள் செய்து அவ்வரசனால் இடம் தரப் பெற்றுப் பல சைவ மடங்களும் கேதாரநாதராலயமும் அமைத்தனர்.

பின்னர் மூன்றுமுறை தருமபுரம் வந்து தம் ஆசிரியரை வழிபட்டுக் காசிக்குப் போய்ச் சைவசமய வளர்ச்சி கருதி அநேக காரியங்கள் செய்து காசியில் ஓர் வைகாசி மாதத்துக் கிருஷ்ணபக்கத் திருதியையில் வீடுபெற்றனர்.

திருச்சிற்றம்பலம்

ஓம்

# நீதிநெறி விளக்கம்

## மூலமும் உரையும்

---

### கடவுள் வாழ்த்து

*நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்*
*நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரில்*
*எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே*
*வழுத்தாத தெம்பிரான் மன்று.*

(இதன் பொருள்.) இளமை நீரில் குமிழி - இளமைப் பருவம் நீரிலுண்டாகும் குமிழியாகும், நிறை செல்வம் நீரில் சுருட்டும் நெடும் திரைகள் - நிறைந்த செல்வம் நீரிலே காற்றினாற் சுருட்டப் படும் உயர்ந்த அலைகளாகும், யாக்கை நீரில் எழுத்து ஆகும் - உடம்பு நீரிலெழுதிய எழுத்தாகும். (இங்ஙனமிருக்க,) நமரங்காள் - நம்மவர்களே! எம்பிரான் மன்று வழுத்தாதது என்னே - நம் கடவுளுடைய மன்றினை (அம்பலத்தை) வாழ்த்தி வணங்காதது ஏனோ?

ஆகும் கடைநிலைத் தீவகம், இதைக் குமிழி, திரைகள் என்பவற்றிற்குங் கூட்டுக. நிலையாமையைக் காட்டுதற்குக் குமிழி, திரை, எழுத்து என்பன உவமிக்கப்பட்டன. அங்ஙனம் உவமிக்கப்பட்டவைகள் மூன்றும் நீரில் நிகழும் நிகழ்ச்சிகளாயிருத்தலின், அந் நீரோட்டத்தை இளமையும் செல்வமும் யாக்கையும் பொருந்திய வாழ்க்கைக்கு உள்ளுறையுவமமாகக் கண்டு கொள்க. உவமைகள் உருவகமாக வந்தமையால் உவமேயக் கருத்துக்கள் உறுதியாயின. இளமை எய்திப் பொருள் தொகுத்து உடம்பை விடுதலால் அவைதம்மை அம்முறையே வைத்தார். இளமை

உருத்திரண்டு அழகு கெழுமி இருப்பதுபோல் இருந்து சிறிது காலத்தில் மாறுதற்கும், செல்வம், மிகுந்துங் குறைந்தும் மறைந்தும் எழுந்தும் நீளத் தொடர்ந்துங் குறுகியமர்ந்தும் மாறுபடுதற்கும், நன்றாயிருக்கும் உடம்பு சட்டென்று இறத்தற்கும் முறையே குமிழி முதலான திரைகள் உவமையாக வந்தனவென்க. முகிழ் என்பது சிவிறி விசிறி, சதை தசை என்றாற்போல, எழுத்து நிலைமாறிக் குமிழ் என்றாயிற்று. அதற்கு வினைமுதற் பொருண்மையதாகிய இகர விகுதி ஏற்றுக. குமிழி - தொழிற்பெயர். செல்வம் - தொழிலாகு பெயர். நெடுந்திரை உயர்ந்த அலை. (நெட்டை என்பது உயரங் குறிப்பது காண்க). என், எவன் என்பதன் மரூஉ. என்னே எம்பிரான் மன்று வழுத்தாதது என்பதற்கு என்னே கடவுளை வணங்காதது என்னும் பொதுப்பொருள் கொள்க. யாக்கை - தோலிரத்த முதலிய தாதுக்களாற் கட்டப்படுவது. நமரங்காள் - நமர்கள் என்னு முறைப் பெயர் விளியேற்று, ஈற்றகரம் ஆகாரமாகி, இடையே அம்சாரியை பெற்றது. வழுத்தாதது - எதிர்மறைத் தொழிற்பெயர். இளமையும் செல்வமும் யாக்கையும் என இம்மூன்றும் உள்ளபோதே இறைவனை வழுத்துதல் வேண்டும் என்பதும் குறிப்பானுணர்த்திற்று.

இஃது அறிவுரையோடு கூடிய கடவுள் வாழ்த்துச் செய்யுளென்க. இவ்வாறுங் கொள்ளுமொரு முறையைத் திருக்குறட் கடவுள் வாழ்த்து அதிகாரத்தா னறிக.

(கருத்துரை.) இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையாமையால், அவை நிலைத்துள்ள பொழுதே கடவுளை வணங்க வேண்டு மென்பது. (க)

## கல்விச் சிறப்பு

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையு நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

(இ - ள்.) அறம் பொருள் இன்பமும் வீடும் பயக்கும்-ஒழுக்கமும் செல்வமும் இன்பம் என்னும் மூன்றையும், வீடுபேற்றையும் கொடுக்கும், புறங்கடை நல்இசையும் நாட்டும் - உலகத்திலே நல்ல புகழையும் நிலை நிறுத்தும், உறும் கவல் ஒன்று உற்றுழியும் கை கொடுக்கும் - நேரக்கூடிய வருத்தமொன்று நேர்ந்தபொழுதும் கை கொடுத்து உதவி செய்யும். சிறு உயிர்க்கு உற்றதுணை கல்வியின் ஊங்கு இல்லை - (ஆதலால்) சிறிய உயிர்களாகிய நமக்குத் தக்க துணை கல்வியைவிடச் சிறந்தது வேறில்லை.

வீடு, மறு உலகத்திலன்றி இவ்வுலகத்தில் எய்தலாகாமையின் அதனைமட்டும் இடையே உம்மை கொடுத்து வேறு பிரித்தார். புறங்கடை-இலக்கணப் போலி. புறத்தில்; கடை - ஏழாம் வேற்றுமை யுருபு. புறம் என்றது கற்றறிந்த புலவன் இருக்கும் ஊர்க்குப் புறனுய இடம் என்னும் பொருண்மேல் நின்றது. நல் இசை - குற்றமற்ற புகழ். இதனை "நன்று பெரிதாகும்" என்னும் தொல்காப்பிய நூற்பாவால் முடிக்க. உறு கவல் - முன்வினைப் பயனுகக் கட்டாயம் வந்தே தீருங் கவலைக்கிடமான செய்கை. உறுங்கவல் - மிக்க கவலையுமாம், உரிச்சொற்றொடர். கவல் - முதனிலைத் தொழிற்பெயர். உழி - பொழுது, இடமுமாம். ஊங்கு - மிகுதிப் பொருள் தருவதோ ரிடைச்சொல். சிற்றுயிர் - அறிவிலும் ஆற்றலிலும் சிறுமையுடைய உயிர், அது மலத்தாற்றொடக்குற்று எங்குஞ் சிறுமையையுங் குறித்து நின்றது. துணையாயிருப்பதென்பது உற்றுழியுதவல் ஒன்றேயாகலின், அவ் உற்றுழியுதவலுக்கு வேறுக அதனினும் மேம்பட்ட நல்லிசையையும் அற முதலா நான்கினையும் தரவல்லதாதலால், கல்வி உற்ற துணையாயிற்று. இச் செய்யுளில் உள்ள பயக்கும், நாட்டும், கைகொடுக்கும் என்னுஞ் சொற்கள் மிக்க ஆற்றலுடையவை. பயக்கும் நாட்டும் கொடுக்கும் என்பவற்றைப் பெயரெச்சமாக்கிக் கல்விக்கு அடைமொழி யாக்கலுமாம். கை கொடுக்கும் - கைகொடு - பகுதி, கை கொடுத்தலாவது இடையே வந்த இடுக்கணைக் கெடுத்துச் செய்யத்தக்கது இதுவென அறிந்து உள்ளம் ஓங்குதற்கு ஏதுவான

அறிவினை உண்டாக்குதல். இசையும், உற்றுழியும் - உம்மைகள் இறந்தது தழீஇய எச்சப்பொருள. அறமுதல் நான்கையும் இசையையும் உற்றுழி உதவியையும் செய்யவல்லது கல்வி என்பதை நாயனார், முறையே *"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையும் ஏமாப் புடைத்து" †"யாதானு நாடாமா லூராமா லென்னொருவன், சாந்துணையுங் கல்லாத வாறு" ‡ "கேடில் விழுச் செல்வங் கல்வி யொருவற்கு, மாடல்ல மற்றை யவை." என்று அருளினார்.

(க - து.) மக்களாய்ப் பிறந்தார் கல்வியையே தக்க துணையென்று கற்றற்பாலார். (உ)

## கல்வி இன்பச் சிறப்பு

தொடங்குங்காற் றுன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி—நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர வின்பத்தின் முற்றிழாய்
பிற்பயக்கும் பீழை பெரிது.

(இ - ள்.) முற்றிழாய் - முடிந்த தொழில்களையுடைய நகைகளை யணிந்த பெண்ணே! கல்வி - படிப்பு, தொடங்குங்கால் துன்பம் ஆய் இன்பம் பயக்கும் - படிப்பதற்குத் துவக்குங்காலத்தில் துன்பம் தருவதாகிப் பின்பு இன்பங்கொடுக்கும்; மடம் கொன்று அறிவு அகற்றும் - (அதுவல்லாமலும்) அறியாமையை நீக்கி அறிவைப் பெருகச் செய்யும். (ஆனால்) நெடுங்காமம் - மிகுதியான காம ஆசையோ வென்றால், முன் பயக்கும் சில நீர இன்பத்தின் - தொடக்கத்தில் தரக்கூடிய சிறுபொழுது இருக்கும் தன்மையதான இன்பத்தைப் பார்க்கிலும், பின் பயக்கும் பீழை பெரிது - காம நுகர்ச்சியின் பின் உண்டாகும் துன்பம் மிகுதியாகும்.

காமத்தினால் இன்பம் ஊறிவரும் மக்களில் கற்றலென்பது துன்பமாயிருக்கிறதே என்று எண்ணுவார்க்கு விடைமொழி

* திருக்குறள் - கல்வி-அ. † திருக் - கல்வி - எ. ‡ திருக் - கல் - ய.

யாகும் இச்செய்யுள். காமம் துவக்கத்தில் தரும் இன்பத்தை விடக் கடைசியில் தரும் துன்பம் பெரிது என்னுங் குறிப்பினாலே, கல்வியும் முதலில் தரும் துன்பத்தைவிடப் பிறகு தரும் இன்பமே பெரிதாயிருக்கும் என்றொன்றுங் கொள்க. மடம் - அறியாமை. அது மீண்டும் உண்டாகாதவாறு கல்வி கெடுத்துவிடும் என்பார் 'கொன்று' என்றார்; 'கற்பக் கழிமடமஃகும்' என்ற நான்மணிக் கடிகைச் செய்யுளும் இக் கருத்தது. மடம் நீங்கவே அதனுண் மறைந்து கிடந்த அறிவு எழுந்தது. அங்ஙனம் எழுப்புவித்ததே யன்றிக் கல்வி அதனைப் பெரிதாக்கும் என்பார் 'அகற்றும்' என்றார். அகற்றும்-அகலும் என்பதன் பிறவினை. அகற்றும் என்பதைப் பெயரெச்சமாக்கிக் கல்விக்கு அடைமொழி யாக்கலுமாம். நெடுங் காமம் = நெடுமை + காமம்; நெடுமை - இங்கு மிகுதிப்பொருளது. சிறுமை சின்மை யாயிற்று. இது வழக்கும் மரபுவழுவமைதியு மாம். சீர - சீர்மை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைப்பெயரெச்சம். முற்றிழாய் - தொழில் முற்றிய இழையை யுடையாய்; முற்றிழை என்பதன் விளி.

(க - து.) கலவியின்பத்தினுங் கல்வியின்பமே சிறந்ததென் பது. (ரு)

அவையை அழகுபடுத்துங் கல்வி

கல்வியே கற்புடைப் பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே தீங்கவியாச்—சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமு முண்டு சிலர்க்கு.

(இ - ள்.) கல்வியே கற்பு உடைப் பெண்டிர்ஆ - கற்கின்ற வர்க்குத் தாம் கற்ற கல்வியே கற்புடைய மனைவியராகவும், அப் பெண்டிர்க்கு தீங்கவியே செல்வம் புதல்வன்ஆ-அம் மனைவியர்க்கு இனிய பாடலே அருமையான புதல்வனாகவும், சொல்வளம் மல்லல் வெறுக்கைஆ-சொல்லும் சொற்களின் வளப்பமே நிறைந்த செல்வ

மாகவும் கொண்டு, மாண்அவை மண்ணுறுத்தும் செல்வமும் சிலர்க்கு உண்டு - மாட்சிமைப்பட்ட அறிஞர் அவையினை அழகு படுத்தும் செல்வமும் சிலரிடத்தில் உள்ளதாம்.

இச் செய்யுளால், கல்வியோடு கூடிய ஒருவன் வாழ்க்கை நல்ல மனைவியோடு கூடி இல்லறம் நிகழ்த்தும் ஒருவன் வாழ்க்கையை ஒக்கும். பெண்டிர், புதல்வன், செல்வம், என்பன ஒன்றற் கொன்றுதொடர்புபட்டு நிற்றல் காண்க. "மங்கல மென்ப மனைமாட்சி மற்றதன், நன்கலம் நன்மக்கட் பேறு" (வாழ்க்கைத் துணை நலம்,) என்னுந் திருக்குறளிற்போல, கல்வி கற்றுரெருருவன் எவையேனும் இனிய கருத்துடை நூல்களை இயற்றியிடுதல் வேண்டும்; மகப்பெருப் பெண்டிரோடு கூடுதலிற் பயனில்லை யாதல்போல, நூல்களியற்றுக் கல்விப் புலமையும் பயனில்லையாம் என்றபடி. 'ஈர்ங்கவியாம்' என்றும் பாடமாம். செல்வம் இருந்தாலல் லாமல் குழந்தைகள் பார்வை யழகு பெருவாகலின், அத்தீங்கவிக் குச் சொல்வளமாகிய மல்லல் வெறுக்கை வேண்டுமென்றூர், 'மாணவை மண்ணுறுத்துதல்' என்பது பிறர்க்குக் கூறுதலை உணர்த்திற்று. செல்வமுடையாரிலும் சிலர்க்கே ஈகைச் செல்வம் இருப்பது போலக் கற்றூரிலும் சிலர்க்கே, எடுத்துக் கூறும் ஆற்ற லுள்ளது. இச் செயல் அரிதாதல் பற்றிச் சிலர்க்கே என்றதுடன் செல்வமும் என்று உம்மை கொடுத்தார். இனிச் சொல்வளம் என் பதற்கே சொல்வன்மை என்று பொருள் கூறுவாருமுளர். தீங் கவியா - கடைக்குறை. ஆக என்பதைப் பெண்டிர்க்குங் கொள்க, இருக்க என்றொரு சொல் வருவிக்க. மண்ணுறுத்தல் - கழுவுதல். இஃது எதிரிருக்கும் அவையினரின் அறியாமையாகிய மாசைத் தன் விரிவுரை நீராற் கழுவுதலைக் குறித்து நின்றது. இச்செய்யுள் இயைபு உருவகம்.

(க - து.) பிறர்க்காக நூலியற்றற்கும் அறிவுறுத்தற்கும் ஆற்றல் பெருமலும், பெற்று அவை செய்யமாட்டாமலும் இருப்ப ரேல், அவர் கல்வியால் ஏதும் பயனில்லையாம் என்பது. (ச)

## கல்வியும் உய்த்துணர்வும்.

எத்துணைய வாயினுங் கல்வி யிடமறிந்
துய்த்துணர் வில்லெனி னில்லாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனி னென்னா மஃதுண்டேல்
பொன்மலர் நாற்ற முடைத்து.

(இ - ள்.) கல்வி எத்துணைய ஆயினும் - கற்ற கல்வி எவ்வளவு பெரிதேயானாலும், இடம் அறிந்து - நூலின் இடந்தெரிந்து உய்த்து உணர்வு இல் எனின் - ஆராய்ந்து உணரும் உணர்ச்சி இல்லையானால், இல்லாகும் - அக் கல்வி பயனில்லையாகும். உய்த்துணர்ந்தும் - அங்ஙனம் உய்த்துணர்ந்தாலும், சொல்வன்மை இன்று எனின் என் ஆம் - பிறர்க்கு எடுத்துச்சொல்லும் வல்லமை இல்லையென்றால் அக் கல்வியால் என்ன பயனாகும் ? அஃதுண்டேல்- மற்று அச் சொல்வன்மை இருக்குமானால், பொன்மலர் நாற்றம் உடைத்து - அது பொன்னாற் செய்யப்பட்ட மலர் மணம் வீசுவது போலாம்.

உய்த்துணர்வு என்பதற்கு நல்லாசிரியனைத் தெரிந்து ஆராய்ந்தறிதலென்று பொருளுரைத்து அதற்கேற்ப எத்துணைய என்பதற்குச் சிறுமைப் பொருளுரைப்பாரு முளர். இஃது இல்பொருளுவமை. இல்லாகும், என்னும் என்பவை படித்தும் பயனில்லை என்பதைக் காட்டின. உவமை சிறப்பிக்க வந்தது. அதற்கு உவம உருபு ஏற்றிக்கொள்க. கல்விக்கும் அதனைக் கற்பானுக்கும் அங்ஙனங் கற்றதை எடுத்துரைப்பானுக்கும் உள்ள இயைபினை உவமை செவ்விதின் விளக்குகின்றது. 'எத்துணையதாயினும்' என்றும் பாடம்.

(க - து.) இடமறிந்து உய்த்துணர்தலும் சொல்வன்மையும் இல்லையானால் அவர் கற்றாராகார், கல்லாதவரே யாவாரென்பது.

## அவையஞ்சுவார் கல்வி.

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா வாகுலச் சொல்லும்—நவையஞ்சி

ஈத்துண்ணார் செல்வமு நல்கூர்ந்தா ரின்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

(இ - ள்.) அவை அஞ்சி மெய் விதிர்ப்பார் கல்வியும் - கற்றோர் அவைக்கு அஞ்சி உடம்பு நடுங்குவோருடைய கல்வியறிவும், கல்லார் அவை அஞ்சா ஆகுலச் சொல்லும் - படிக்காதவர்களுடைய அவைக்கு அஞ்சாத ஆரவாரச் சொல்லும், நவை அஞ்சி ஈத்து உண்ணார் செல்வமும் - குற்றத்துக்கஞ்சிக் கொடுத்துண்ணாதவர்கள் செல்வமும், நல்கூர்ந்தார் இன்நலமும் - வறியவர்களுடைய ஈகை முதலிய இனிமையான தன்மைகளும், பூத்தலின் பூவாமை நன்று-'ஆக இந்த நான்கு தன்மைகளும்' உண்டாவதைவிட உண்டாகாமலிருப்பதே நல்லது.

இஃது அவைக்குச் சென்றும் அதற்கு அஞ்சுவாரைக் குறித்தது. அவையையஞ்சி என்று இரண்டாம் வேற்றுமையுருபு விரித்தலுமாம். விதிர்த்தல் - உதறல். "மெய்தானரும்பி விதிர் விதிர்த்து" * என்பது திருவாசகம். ஆகுலம் - ஆரவாரம்! 'ஆகுல நீரபிற' † என்பதன் உரையை நோக்குக. செல்வமும் இன்னலமும் என்பன உள்ளுறையுவமமாக வந்தன. பூத்தலின் பூவாமை நன்று என்றது, வெளிப்படுத்திக் கொள்வதினும் வெளிப்படுத்தாமலிருப்பதே நன்றென்பதற்கு. ஆகுலச் சொல்லும் விதிர்ப்பார் கல்வியும் பயனில்லை என்பது. கல்லார் அவை என்றமையின் முன்னது கற்றார் அவை ஆயிற்று. கற்றவர்களிலும் அவைக்கு அஞ்சாதவரே உண்மையிற் கற்றவர். மற்றவர் கற்றுங் கல்லாரே யாவர். இதனைத் திருவள்ளுவனார்,

‡"கற்றாருட் கற்றார்" என்றும், "கல்லாதவரிற் கடை"!§ யென்றுங் கூறுவார்.

---

* திருச்சதகம், க. † திருக்குறள், அறன்வலியுறுத்தல், ௪.

‡ திருக்குறள், அவையஞ்சாமை, உ.

§ திருக்குறள், அவையஞ்சாமை, ௯.

(க - து.) கல்வியின் உண்மையும் இன்மையும் ஒருசேரக் கூறி னமையால் இது பழிப்பொப்புமைக் கூட்ட அணி. கற்றூரவைக்கு அஞ்சுங் கல்வி பயன்படாதென்பது. (சு)

## புலவர் புகழ் உடம்பு.

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு.

(இ - ள்.) கலைமகள் வாழ்க்கை முகத்தது எனினும் - கலைமகளினுடைய வாழ்க்கை இருவர்க்கும் தத்தம் முகத்தினிடத்தே யானாலும், மலரவன் வண் தமிழோர்க்கு ஒவ்வான் - மலர்மேலிருக்கும் நான்முகன் வளப்பம் பொருந்திய தமிழ்ப் புலவர்களுக்கு ஒப்பாகான், (ஏனென்றால்) மலரவன் செய் வெறு உடம்பு மாய்வன போல் - மலரவன் செய்கின்ற புகழில்லாத ஊன் உடம்பு அழிந்து போவனபோல, மற்று இவர் செய்யும் உடம்பு புகழ்கொண்டு மாயா - மற்று இப்புலவர்கள் செய்கின்ற நூலுடம்புகள் புகழைப் பெற்று அழியமாட்டா (ஆதலின் என்க.)

கலை - கற்றலாற் பெறப்படுவது. கலைமகள் நான்முகன் நாவிலும் புலவர்கள் நாவிலும் உறைகின்றாளென்பதை 'முகத்தது' என்றார். முகத்தது - குறிப்பு முற்று. வெறுமை இலை-வெற்றிலை என்றாற்போல வெறுமை உடம்பு வெற்றுடம்பாயிற்று. பெருமையில்லாத வெறும் உடம்பு என்பது பொருள். மண் நீர் - முதலிய பூதங்களானியன்றமையின் வெற்றுடம்புமாய்வன, பின்னும், பின்னும் புலவர்கள் செய்யும் நூல் புகழப்படுதலின், புகழை, உடம்பென்று கூறினார்; மாயா என்றார். ஐயாயிரம் ஆண்டுகளுக்குமுன்னேயிருந்த தொல்காப்பியனாரும், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னேயிருந்த திருவள்ளுவனாரும் அருளிச்செய்த தொல்காப்பியம், திருக்குறள் என்னும் இலக்கண இலக்கிய நூல்களின் வாயிலாகத்

தாங்கள் செய்து கொண்ட புகழுடம்புகள் இன்றும் புகழ்கொண்டு அழியாமல் நின்று நிலவுதலும், ஆனால், மலரவன் செய்த அவ ருனுடம்புகள் புகழோடு இக் காலத்திற் காணமுடியாதபடி அக் காலங்களிலேயே மறைந்து போனமையுங் கண்டுகொள்க. இவ் வுண்மையை நாயனர், "கேடில் விழுச் செல்வம்" (திருக்குறள், கல்வி, க0) என்று உளமாரக் கூறுவர். இவ்வெற்றுடம்பும் புக ழுடம்பும் மேல் சர்ய-ஆஞ் செய்யுளிலும் வருதல் காண்க. மற்று, பிறிதின்கண் வந்தது. இச் செய்யுள், தொழில் வேற்றுமை யணி.

(க - து.) கல்வியே என்றும் அழியாதது என்பது. (எ)

## அவையத்துதவாதார் கல்வி.

நெடும்பகற் கற்ற வவையத் துதவா
துடைந்துளா ருட்குவருங் கல்வி—கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட வில்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

(இ - ள்.) நெடும்பகல் - பல நாளாக, கற்ற - தம்மாற் படிக்கப்பட்ட நூல்கள், அவையத்து - சபையிலே, உதவாது - எடுத்துரைப்பதற்குக் கூடாமல், உடைந்து உளார் - தோல்வி யுற்றவருடைய, உட்குவரும் - அச்சத்தைக் காட்டும், கல்வி - படிப்பானது, கடும்பகலில் - நண்பகலில், ஏதிலான்பால் - அயல வன் இடம், கண்ட - வசப்பட்டிருக்கப் பார்த்த, இல்லினும் - மனையாளைப் பார்க்கிலும், பொல்லாது - தீயதாகும். (ஏனெனில்) தீது என்று - (அவளைத் தீயவள் என்று நீக்குமாறு போல) தன்னைத் தீயதென்று, நீப்பு அரிது-நீத்தற்கு அரியது.

பகல் - நாள், நெடுமை - நீட்சி, கற்ற - வினையாலணையும் பெயர். கற்ற கல்வி, உட்குவரும் கல்வி என்றும் இயைக்கலாம். கடும்பகல் - பெரிதும் விளக்கமுடைய உச்சிக்காலம். இல்லாள் தற்கொண்டாற்பேணி யறுசுவை யுண்டியமர்ந்து ஊட்டவேண்டிய வளாதலின் அதனைச் செய்யாது, கொண்ட கணவன், காலையில்

தொழிற்பொருட்டு வெளியே வயல் முதலிய இடங்கட்குச் சென்று வியர்த்திளைத்துத் திரும்பியவன் மேலும் துயருறும்படி அயலவன் அகம் அடைந்திருப்பதுணரின், அத்தகைய மனைமாட்சியற்றாள் தனக்கு நலம் பயவாதவள் என்று விலக்கப்படுதல் கூடும். ஆனால், கற்ற கல்வி அங்ஙனமும் நீக்கப்பட முடியாத தென்பார், 'இல்லினும் பொல்லாதே' என்றார். பால் - ஏழனுருபு. இல் - மனையாள், இடவாகு பெயர். உடைந்துளார் - வினையாலணையும் பெயர், உடைதல் - பின் வாங்கல், கெடுதல். நீப்பு - தொழிற் பெயர் - நீ ; பகுதி. உட்கு - நாணமுமாம்.

(க - து,) வைத்ததொரு கல்வி மனப்பழக்கமாதலின், கற்ற நூல்களைப் பல முறையும் நினைந்து உள்ளத்து அமைத்துக் கொளல் வேண்டும் என்பது. (அ)

## கற்றன ஓம்புதல்.

வருநதித்தாங் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.

(இ - ள்.) தாம் வருந்திக் கற்றன ஓம்பாது - மக்களாவார் தாங்கள் வருத்தப்பட்டுக் கற்ற நூற்பொருள்களை மறந்து போகாதவாறு அடிக்கடி நினைத்துப் பாதுகாக்க மாட்டாமல், மற்றும் சில பரிந்து கற்பான் தொடங்கல் - இன்னும் சில நூல்களை வருந்திக் கற்கத் தொடங்குதல், கைத்தலத்த கருந்தனம் உய்த்து சொரிந்திட்டு - ஒருவன் தன் கையில் இருப்பதான மிகுந்த பணத்தை வீசி எறிந்து, ஆங்கு அரிப்பு அரித்து எய்த்துப் பொருள் செய்திடல் - எறிந்த அவ்விடத்தில் அரிப்பரித்து இளைத்துப் பொருள் சேர்ப்பதுபோலாகும்.

உவம உருபு சேர்த்துக்கொள்க. 'வருந்தித் தாங்கற்றன என்றமையால், கற்றலின் அருமை பெறப்பட்டது. தொடங்கும்

கால் துன்பமாய் என்று முன்னுங் (௯) கூறினார். ஓம்புதல் - பாது காத்தல் "குடியோம்பி" என்பர் பின்னும் (உ௯). கற்றன - வினையாலணையும் பெயர். மற்றும் - பிறிதுணர்த்தி நின்றது. கற்பான் - பானீற்று வினையெச்சம். கற்பதற்கு என்க. கருந்தனம் - பெரியதனம். கருமைக்கு இப்பொருளுண்மை "கருங்கறிமூடையொடு" * என்பதிற் காண்க. உய்த்து - செலுத்தி; இங்கு வீசுதல். அரிப்பரித்தல் - வெயிலில் நின்று மண்ணை அரித்தெடுத்தல். இவ்வரித்த மண் வீடு கட்டுதற்கும் பாண்டம் வனைதற்கும் பயன்படும். இனி, அரிப்பு என்பதற்கு மண்ணோடு கலந்து கிடக்கும் பொற்றூள்; அரித்தெடுக்கப்படுதல் பற்றி அரிப்பெனப்பட்டது எனினுமாம். பொருள் செய்திடல் - பொருள் சேகரித்தல். தொடங்கல் செய்திடல் போலாம் என்று முடிக்க.

(க - து.) கற்றவைகளை மறந்து மேலுங் கற்பது பேதைமை.

## வறிஞர் கல்வி.

எனைத்துணைய வேனு மிலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம்—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமக னல்லறம்
பூண்ட புலப்படா போல்.

(இ - ள்.) மனைத்தக்காள் - மனைவி, மாண்பு இலளாயின் - மனைக்குத்தக்க மாட்சிமை இல்லாதவளானால், மணமகன் பூண்ட நல் அறம் - கணவன் மேற்கொண்ட இல்லறம், புலப்படாபோல் - விளங்காதனபோல, இலம்பாட்டார் கல்வி - வறுமைத் துன்பமுடையவர்கள் கல்வி, எனைதுணையவேனும் தினைதுணையும் சீர்ப்பாடு இலவாம் - எவ்வளவு திட்பநுட்பங்கள் உடையவானாலும் தினையளவும் சிறப்புண்டாதல் இல்லையாம்.

---

* சிலப், ஊர்காண்காதை, உ௧0.

எத்துணைய என்பதைத் திட்பநுட்பங்களுக்குக் கொள்க. இலம்பாடு வறுமைப்பொருள் தருதலை *"இலம்பாடு அகற்றென்று" என்னுந் திருவிளையாடற் புராணத்தாலறிக. சீர்ப்பாடு - சிறத்தல்; சீர் - சிறப்பு, பாடு உண்டாதல். †"மனைத்தக்க மாண்புடையள்" என்பது இங்கு 'மனைத்தக்காள் மாண்பு' எனப்பட்டது.

"நற்குண நிறைந்த கற்புடை மனைவியோ
டன்பு மருளுந் தாங்கி யின்சொலின்
விருந்து புறந்தந் தருந்தவர்ப் பேணி
ஐவகை வேள்வியு மாற்றி" என்ற இவ் வாசிரியர் இயற்

றிய சிதம்பர மும்மணிக்கோவை யடிகள் 'மனைத்தக்காள் . . . நல்லறம்' என்பதன் கருத்து. 'இல்லறமல்லது நல்லறமன்று' ‡ என்று ஔவைச் செல்வி கூறினமையால், இங்கு நல்லறம் எனப் பட்டது இல்லறமாயிற்று.

(க - து.) கல்வி சிறப்பதற்குச் செல்வப் பொருளும் வேண்டு மென்பது. (௧௦)

## செல்வரைச் சேர்தல்.

இன்சொல்லன் றாழ்நடைய னாயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா-என்சொலினும்
கைத்துடையான் காற்கீ ழொதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய வல்ல பிற.

(இ - ள்.) இன்சொல்லன் - இனிய சொற்களையுடையவனும், தாழ் நடையன் - அடங்கிய ஒழுக்கமுடையவனும், ஆயினும் - ஆனாலும், ஒன்று இல்லானேல் - அவன் சிறு பொருளும் இல்லாத வனானால், கடல் ஞாலம் - கடலாற் சூழப்பட்ட உலகம், வன் சொல் லின் அல்லது - கடுஞ் சொற்கொண்டு பேசுவாரன்றி, வாய்திறவா-

* உலவாக்கிழியருளிய படலம், கஉ. † திருக்குறள், வாழ்க்கைத் துணை நலம், க. ‡ கொன்றை வேந்தன், உ.

இன்சொற்கொண்டு பேசார், என் சொல்லினும் - யாதுதான் சொன்னாலும், கைத்து உடையான் கால்கீழ்ஒதுங்கும் - செல்வமுடையவன் காலின் கீழே அடங்கும், (ஆதலால் இவ்வுலகம்;) பித்து உடைய - பைத்தியமே உடையன, அல்ல பிற - நல்லறிவு உடையன அல்ல.

பிறர் மகிழும்படி தீங்கு பயவாத வகையில் பேசும் பேச்சு இன்சொல், அதை யுடையவன் இன்சொல்லன். தாழ்நடை - அடங்கிய ஒழுக்கம். ஒன்று - சிறிதும் என்னும் பொருளில் வந்தது. இழிவு சிறப்பும்மை விரித்துக் கொள்க. வன்சொல்லினல்லது வாய்திறவா என்றது உலகம் வன்சொல் சொல்லுதற்கு வாய் திறக்குமேயன்றி வேறு இன்சொல் சொல்லுதற்கு வாய்திறவா. கைத்து - கையிலிருப்பது; தன்மைத்து என்பதுபோல; அது பொருளை உணர்த்திற்று. என் - இங்குத் தாழ்ந்ததைக் குறித்தது. ஞாலம், அதன்கண் உள்ள மக்களையுணர்த்தி ஆகுபெயராய் நின்றது. ஞாலம் என்னுஞ் சொல்லின் அஃறிணைபற்றித் திறவா, ஒதுங்கும், உடைய, அல்லபிற என்பனவெல்லாம் பலவின்பாலாகவே வந்தன. உரை காணும்பொழுது அவற்றைப் பலர்பாலாக்கிக் கொள்க. பித்து - நல்லதன் நன்மையும் தீயதன் தீமையும் பிரித்துணராமை.

(க - து.)

"கல்லானே யானாலும் கைப்பொருளொன்று உண்டாயின்
எல்லாருஞ் சென்றுஅங்கு எதிர்கொள்வர்—இல்லானை
இல்லாளும் வேண்டாள்மற்று ஈன்றெடுத்த தாய்வேண்டாள்
செல்லா திவன்வாயின் சொல்." என்பதற் கிணங்க,

உலகத்தார் நற்செய்கை யில்லாச் செல்வர்க்கு நடப்பர். (கக)

நோற்றார் பெருமை.

இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப—பெரிதுந்தாம்

முற்பக லோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

(இ - ள்.) இவறன்மை கண்டும் - ஈயாத்தன்மையைத் தெரிந்துகொண்டிருந்தும், உடையாரை - செல்வமுடையவர்களை, யாரும் - எல்லாரும், குறையிரந்து குற்றேவலும் செய்ப - பொருள் வேண்டி அதன் பொருட்டுக் கைவேலைகளும் செய்வார்கள், முன் பகல் பெரிதும் தாம் நோலாதார் - முன்பிறப்பில் தாங்கள் மிகவும் தவம் செய்யாதவர்கள், நோற்றாரைப் பின் செல்லல் - அங்ஙனம் மிகவும் தவம் செய்தவர்களைப் பின் சென்று வேண்டுதல், கற்பு அன்றே - கல்வியறிவாமல்லவா, கல்லாமை அன்று - அது அறியாமையன்று.

தவமுடையாரை வேண்டுதல் கல்விக்கு அழகு என்றமையாற் பொருளுடையாரை வேண்டுதல் அழகன்று என்பது பெறப்படும். இஃது இசையெச்சம். இவறன்மை - கேட்டபொழுது பொருள் கொடாமை. இது, * "இவறலும் மாண் பிறந்தமானமும்" என்றவிடத்து ஆசிரியர் பரிமேலழகியார் இவறலும் என்பதற்கு வேண்டியவழிப் பொருள் கொடாமையும் என்று உரை கூறுதலின் வைத்து அறியப்படும். குறையிரத்தல் இஃது ஒரு சொன்னீர்மைத் தாய் நின்று வேண்டுதல் என்னும் பொருள் தந்து நின்றது. குற்றேவல் - எடுபிடிவேலை. இதன் உம்மையைக் குற்றேவலுக்குக் கூட்டுக. பகல்-பிறப்புணர்த்திற்று. கல் என்னும் பகுதி விவ்விகுதி பெற்றுக் கல்வியென்றாயதுபோல் புவ்விகுதி பெற்றுக் கற்பு என்றாயிற்று. கல்வி, கற்பு என்பன ஒரு பொருட் கிளவிகள். கற்பன்றே என்பதனோடமையாமற் கல்லாமையன்று என்று பின்னுங் கூறியது தெளிவின்பொருட்டு. கற்பன்றே என்றது ஈதல்லவா கற்பு என்றபடி. முற்பகலில் தவம் மிகுதியுஞ் செய்து செல்வராயுள்ளாரை, அங்ஙனம் தவம் செய்து செல்வம் பெறாத இலம்பாட்டார் பின் செல்வது கல்வியறிவின் பயனல்லவா, அஃது அறியாமை

* திருக்குறள், குற்றங்கடிதல், உ

யன்று என்று உரை கூறுவாருமுளர். சோற்றுரைப் பின்செல்லல் கற்பன்றே கல்லாமையன்று என்றமையின், இவறன்மை கண்டுமுடையாரை யாருங் குறையிரந்துங் குற்றேவல் செய்தல் கல்லாமையன்றே கற்பன்று என்று பெறவைத்தா ரென்க.

(க - து.) பொருளுடையாரினும் கல்வியுடையார் உலகத் தவராற் பின்பற்றத் தக்கவர் என்பது. (கஉ)

## கல்வியழகே யழகு.

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோ ரணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார்.

(இ - ள்.) முற்ற - ஒரு காலத்திலும், முழுமணிப் பூணுக்குப் பூண் வேண்டா - முழுமுழு மணிகளாற் செய்யப்பட்ட நகைக்கு நகை வேண்டா, யாரே அழகுக்கு அழகு செய்வார் - எவர் தாம் அழகுக்கு அழகு செய்வார்கள், (அதுபோல) கற்றோர்க்குக் கல்வி நலனே கலன் அல்லால் - படித்தவர்களுக்கு அப் படிப்பினழகே அழகாவதல்லாமல், மற்றோர் அணிகலம் வேண்டா ஆம் - அவர்க்கு வேறொரு நகையழகு வேண்டுதல் இல்லையாம்.

முற்ற என்றது எக்காலத்திலும் என்பதுணர்த்திற்று. உடைத்துச் சாணை தீற்றப்பட்ட பொடி மணிகளாலல்லாமல் முழு மணிகளாலேயே செய்யப்பட்ட நகையாம் என்றற்கு முழுமணிப் பூண் என்றார். பூண் - முதனிலைத் தொழிலாகு பெயர். கல்வி நலன் என்பது நல்ல கல்வியைக் குறித்தது. நலன் கலன் - நலம், கலம் என்பவற்றின் போலி. முழு மணி - மாணிக்கம். அஃது அறிவு நூற் கல்வி. மற்று - பிறிது.* "ஒரு மொழி யொழிதன் னினங்கொளற் குரித்தே" என்பதனால் நகை என்னும் உவமை

* நன்னூல், பொதுவியல், எ

யோடு, உடை முதலான அழகுகளையுங் கொள்க. இவையெல்லாம் தரும் அழகுகளைவிடக் கல்வியாலாம் அழகு பெரிதென்று,

"குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு"

என்னும் நாலடியார் கூற்றுலுங் காண்க. ஆம்-அசை.

(க - து.) செல்வ வாழ்க்கையினுங் கல்வி வாழ்க்கையே சிறந்த தென்பது. (கரு)

கல்விப்பெருக்காற் செருக்காதே யெனல்

முற்று முணர்ந்தவ ரில்லை முழுவதூஉங்
கற்றன மென்று களியற்க—சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னல்.

(இ - ள்.) கனம் குழாய் - பளுவான காதணியை உடைய பெண்ணே! முற்றும் உணர்ந்தவர் இல்லை - எல்லாம் தெரிந்தவர் நன் உலகத்தில் ஒருவரும் இல்லை; முழுவதூஉம் கற்றனம் என்று களியற்க - ஆதலால் எல்லாவற்றையும் கற்றுவிட்டோம் என்று செருக்காதே, ஏனென்றால் சிறு உளியால் - மிகச் சிறிய உளியினால், கல்லும் தகரும் - மலைகளும் உடையும், கொல் உலைக் கூடத்தினல் தகரா - ஆனல் கொல்லனுடைய உலைக்களத்தில் உள்ள சம்மட்டியினல் அம்மலைகளும் உடையா.

உணர்ந்தவர் இல்லை என்று உயர்திணைப் பெயருக்கு இல்லை யென்னும் பயனிலை கொடுத்து முடிதலை,

"வேறு இல்லை உண்டு ஐம்பால் மூவிடத்தன" * என்பதனுற் கொள்க. கற்றனம் - தன்மை யொருமையை உட்கொண்

* நன்னூல் வினையியல், உ0.

டது; சிறப்பின் பொருட்டுப் பன்மையின் வந்தது. கல் - மலை; இஃதிப் பொருட்டாதலைக் "கல் இயங்கு கருங்குற மங்கையர்" *. என்னுங் கம்பர் மொழியிற்காண்க. தகரா எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று. கொல்-கொல்லன், விகுதிகெட்டுப் பகுதியளவாய் நின்றது. இங்ஙனம் வருதலைக் "கொல் உலை வேற்கண் நல்லார்"† என்னும் நைடதப்பாட்டானும் அறிக. உலை, உலைக்களத்துக்கு வருதலும் அதன்கண் உள்ளது. கூடம் என்பது சம்மட்டியை உணர்த்துதலும் "கூடம் எடுத்து அங்கைத்தலத்தால் அறைநீர்" ‡ என்பதன்கண் அறியப்படும். முதலிரண்டடிகளுக்குப் பின்னிரண்டடியின் உவமையால் ஏதுக்கூறினர். அவ் உவமை சிறிது கற்றாரும் பெரிது கற்றாரை வென்றுவிடுவர் என்னும் வேறோருவமேயக் கருத்தை உட்கொண்டு நின்றது. முதலிரண்டடிகள் உவமையின் கருத்தன்றாம்.

(க - து.) படித்துவிட்டோம் என்றுஞ் செருக்கடையலாகா தென்பது. (கசு)

வறியரினும் வாழ்வுற்றேம் எனமகிழ்க

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றதெல்லா
மெற்றே யிவர்க்குநா மென்று.

(இ - ள்.) தம்மின் மெலியாரை நோக்கி - தம்மைவிடக் கல்வியிற் குறைந்திருப்பாரைப் பார்த்து, தமது உடைமை அம்மா பெரிது என்று அகம் மகிழ்க - தாம் கற்ற கல்விப்பொருள் அம்மா! மிகுதியாகும் என்று உள்ளம் மகிழ்ந்து கொள்க. (ஆனால்) தம்மினும் கற்றாரை நோக்கி - தம்மைவிட மிகுதியாகப் படித்திருப்பவர்களைப் பார்த்து, நாம் கற்றதெல்லாம் எற்றே இவர்க்கு என்று

* இராமா, வரைக், சுசு. † நைடதம், நாட்டுப். உஎ.

‡ நைடதம்-சந்திரோபாலம்பனப்படலம், கஉ

கருத்து அழிக - நாம் படித்த படிப்பெல்லாம் இவர் படிப்புக்கு எந்த அளவின் தன்மையது என்று செருக்குக்கருத்தை வருந்தி விட்டுவிடுக.

செல்வத்துக்குப் பெயரால் வரும் உடைமை என்பதைக் கூறினர். செல்வ நிலையிலும் இங்ஙனமே தம்மின் மெலியாரைக் கண்டு அகம் மகிழ்தற்கும், பெரியாரைக்கண்டு கருத்தழிதற்கும்; 'அகம்மகிழ்க' என்றார். அம்மகிழ்ச்சியைப் புறத்திற் காட்டலாகா தென்றற்கு, 'அழிக' என்றார்; படித்துவிட்டோம் என்னும் செருக்கின்பால் உள்ள வெறுப்பைத் தேற்றுதற்கு. உடைமை - செல்வம். "இவறன்மை கண்டும் உடையாரை", (௧உ) என்று முன்னும் வந்தது. இச்செய்யுள் உள்ளக் கருத்தை நோக்கியதாதலால், உடைமை என்பதைப் பண்புப் பெயராகக் கொண்டு உடையாரந் தன்மை என்று பொருள் செய்க. இது, "எம்மையுடையார் எமையிகழார்"* என்னும் சிவஞான முனிவரவர்கள் திருமொழியிலும், "உடைமையுள் இன்மை" † என்னுந் திருவள்ளுவர் திருமொழியிலும் விளங்கும். அத்திருவள்ளுவர் திருமொழியில் உள்ள உடைமை என்பதற்கு ஆசிரியர் பரிமேலழகியார் உடையனுந் தன்மை என்று பொருளுரைத்தார். அம்மா - வியப்புணர்த்து மோரிடைச்சொல்.

கற்றது—வினையாலணையும் பெயர். எல்லாம்—முழுமைத் தன்மையையும் எற்று அளவின் தன்மையையுங் குறித்தன. இவர்—பொருளாகு பெயர்.

(௧ - து.) செருக்கும் வருத்தமும் இல்லாமல் மேன்மேலும் கற்றலிலேயே ஊன்றிநிற்றல் வேண்டுமென்பது. (௧௫)

தாழ்ந்தாரிடந் தாழ்தல்

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வ மெனப்படு—மில்லார்

* சிவஞான மாபாடியம், அவையடக்கம். † விருந்தோம்பல், ௯

குறையிரந்து தம்முன்னர் நிற்பபோற் றாமுந்
தலைவணங்கித் தாழப் பெறின்.

(இ - ள்.) இல்லார் - கல்வியும் செல்வமும் இல்லாதவர்கள், குறையிரந்து தம்முன்னர் நிற்ப - அவ்விரண்டையும் வேண்டி அவ்விரண்டுமுடைய தமக்கு முன்னால் நிற்பார்கள், போல் - அவர் போல, தாமும் தலைவணங்கித் தாழப்பெறின் - தாங்களும் தலையால் வணங்கித் தாழ்ந்து நிற்கப் பெற்றால், கல்வியுடைமை பொருளுடைமை என்று இரண்டு செல்வமும் செல்வம் எனப் படும் - தாங்கள் பெற்ற கல்விச்செல்வம் பொருட் செல்வம் என்னும் இரண்டு செல்வங்களும் உண்மைச் செல்வங்களென்று உயர்ந்தோரால் பாராட்டப்படும்.

உடைமை என்பதைத் தொழிலாகு பெயராகக் கொண்டு செல்வமென்று உரைகூறி அவ்வாற்றால் கல்வியாகிய உடைமை என்று பொருளாகுமாறு கல்வியுடைமை என்று மத்தொடரைப் பண்புத் தொகைநிலைத்தொடராகக் கொள்க. ஈதுரைக்க அறியாதார் உடைமை யிரண்டுங் குறிப்புத் தொழிற் பெயரெனக் கொண்டு பொருண் மயக்குக்கு இடஞ் செய்வாருமுளர். செல்வத்தாற் கல்வியும் கல்வியாற் செல்வமும் ஒன்றுக்கொன்று துணையாய் நின்று அவ்விரண்டும் ஓங்கிப் பொலியுமாதலின் அவ்விரண்டும் ஒருவற்கு வேண்டற்பாலவாம் என்பது இந் நூலாசிரியர் கருத்து. இது இதற்கு முன்வந்த ௧௦, ௧௧-ம் செய்யுட் களாலும் விளங்கும். பொருளுடைமையால் விளையுஞ் செருக் கெழுச்சியைக் கல்வியுடைமை தாழச்செய்யுமாதலின், 'தாழப் பெறின்' என்றார். பொருட் செல்வத்தை உண்மைப் பொருட் செல்வமாக்குவது கல்வி யுடைமையாதலால் அதனை முற்கூறினர். அன்றியும், இல்லையென்று வருவாரை இன்சொன் மொழிந்து தாழ்ந் தெதிர் அழைப்பது முன்னும், பொருள் தருவது பின்னுமாயே நிகழ்வதால், அம்முறையே தாழ்மை பயக்கும் கல்வியுடைமையை ஈகை பயக்கும் செல்வமுடைமைக்கு முன்னிறுத்தினர் என்றலு

மாம். இங்ஙனம் தாழ்மையும் ஈகையுமான பயன்களைப் பெற்ற பொழுதே கல்வி யுடைமையும் செல்வமுடைமையும் உண்மைச் செல்வங்களெனப்படும் என்றற்குச் 'செல்வமுஞ் செல்வமெனப் படும்' என்றார்.

> " அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
> பூரியார் கண்ணும் உள "*

என்னுந் திருவள்ளுவர் கருத்தும் இது.

தாழ்தலையுடையவர் கொடையையுடையரா யிருப்பராதலால், தாழப்பெறின் என்பதனோடு நிறுத்தினர். தலைவணங்கித் தாழப் பெறின் என்றார், கல்வியுடைமை செல்வமுடைமை என்னும் இரண்டாலும் விளைவதாம் செருக்கை அவ்வப்போதும் அடக்கிக் கொண்டே வரல் வேண்டு மென்பதற்கு. 'பெறின்' என்றார், அங்ஙனந் தாழ்தலின் அருமையும் பெருமையும் தோன்ற. " கீழோ ராயினுந் தாழவுரை "† என்னும் முதுமொழி இங்குக் கருதத் கூடியது. இனித் தனித்தனிக் கல்வியுஞ் செல்வமு முடையார்க் கும் இச்செய்யுட் கருத்தை ஆக்கிக்கொள்ளினுங் கொள்க. நிற்ப- நிற்பது என்ற தொழிற்பெயர் கடை குறைந்ததாகவுங் கொள்வர்.

(க - து.) கல்வியும் செல்வமும் உடையார்க்கு அழகு, அவை யில்லாதாரிடத்தும் தாழ்மையோடிருத்தலென்பது. (கரு)

## தாழாதாரிடத்துந் தாழ்தல்

> ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
> மீச்செலவு காணி னனிதாழ்ப—தூக்கின்
> மெலியது மேன்மே லெழச்செல்லச் செல்ல
> வலிதன்றே தாழுந் துலைக்கு.

(இ - ள்.) தூக்கின் - உயர்த்திப் பிடித்தால், துலைக்கு - தரா சுக்கு, மெலியது மேன்மேல் எழச் செல்லச்செல்ல - இலேசான

---

*அருளுடைமை, க. †கொன்றை வேந்தன், கஎ

பொருளுள்ள தட்டு மேல் மேலே எழுவதற்கு உயரும்பொழு தெல்லாம், (வீறு அன்றே தாழும் - பளுவான பொருளுள்ள தட்டல்லவா தாழ்ந்துபோகும். (அதுபோலவே) ஆக்கம் பெரியார் - கல்வியிலும் செல்வத்திலும் அல்லது இவ்விரண்டிலும் மிகுந்த பெரியராயிருப்பவர்கள், சிறியாரிடைப்பட்ட மீச்செலவு காணின் நனிதாழ்ப - அவ்விரண்டிலும் குறைந்து சிறியவர்களாயிருப்பவர்க ளிடத்தில் உண்டான வரம்புகடந்த நடக்கையைக் கண்டால் அவர்களுக்கு மிகவும் தாழ்ந்து நடப்பார்கள்.

ஆக்கம் - ஆக்குதல், அது தன்னைச் சேர்த்துக்கொண்ட ஒரு வனை மேன்மேலும் உயர்வாக்குதல் என்னும் பொருளிற் காரிய வாகுபெயராய்க் கல்வியையும் செல்வத்தையம் உணர்த்திற்று. ஆக்கத்திற் பெரியார் சிறியார் என்று கண்டு கொள்க. ஆக்கம் பெரியார் - இணைவழுவமைதி. இடை இடம் என்பன ஒரு பொருட் பன்மொழி. பட்ட - உண்டான. மீச் செலவு - அள வுக்கு மீறி நடப்பது. செலவு - நடக்கை; இது தொழிற் பெயர் இஃதிப் பொருட்டாதலைச்

"சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி, கொள்கைப் புலம்பிரிந்து உறையும், செலவு"*

என்றவிடத்துக் காண்க. மீச் செலவு - ஒரு சொன்னீர்மைத்து. எழ செல்ல என்னும் இரண்டிற்கும் வினைமுதல் இலேசான பொரு ளேற்ற தட்டு. மெலியது வலிது என்பன இடத்துக்கேற்றபடி துலைத் தட்டுகளை உணர்த்தின. முன் செய்யுள் தாழ்ந்தாரிடந் தாழ்தலைக் குறித்தது. துலைக்கு - உருபு மயக்கம். இச்செய்யுள் தாழாதாரிடத்துந் தாழ்தலைக் குறித்தது. இது வேற்றுப் பொருள்வைப்பு என்னும் அணி.

(க - து.) தமக்குத் தாழ்ந்து நடவாதாரிடத்தும் தாம் தாழ்ந்து நடத்தலே நன்றென்பது. (கஎ)

---

* திருமுருகாற்றுப்படை சுஉ

## நலத்தகையார் தற்புகழ்ச்சி

விலக்கிய வோம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே—புலப்பகையை
வென்றனம் நல்லொழுக்கி னின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின்.

(இ - ள்.) புலப்பகையை - ஐந்து விடயமாகிய பகையை, வென்றனம் - வென்று விட்டோம், நல் ஒழுக்கில் - நல்லொழுக்கத்தில், நின்றேம் என்று - தவறாமல் நின்றோமென்று, தம்பாடு - தம் பெருமையை, தம்மில் கொளின் - தமக்குள் கருதிக்கொள்வாராயின், விலக்கிய - செய்யத்தகாத வென்று விலக்கப்பட்ட செயல்களை, ஓம்பி - செய்யாமற்காத்து, விதித்தனவே - செய்யத் தக்கவையென்று வரையறுக்கப் பட்டவற்றையே, செய்யும் - செய்தற்குரிய, நலத்தகையார் - நன்மையாகிய தன்மையுடையாரது, நல்வினையும் - நல்ல செயலும், தீதே - பயனற்றதேயாகும்.

ஓம்பி - பேணி. விலக்கிய, விதித்தன - பலவின்பால் வினையாலணையும் பெயர்கள். ஐம்புலன் - சுவையொளி யூறோசை நாற்றம் என்பன. இவை மனதை முத்திவழியிற் போக விடாது தடுத்தலின், புலப்பகை என்றார். ஏ இரண்டில் முன்னது பிரிநிலை, பின்னது தேற்றம். ஒழுக்கு-முதனிலைதிரிந்த தொழிற் பெயர். பிற - அசை. நல்வினையும் - உம் உயர்வு சிறப்பு. வென்றனம் நின்றேம் - தன்மைப் பன்மை வினைமுற்றுக்கள்; அம், ஏம் என்பன விகுதி.

(க - து.) ஐம்புலன்களையும் வென்ற நல்லொழுக்கத்தவரும் தற்புகழ்ச்சி கொள்ளல் தீதே. (௧௮)

## தற்புகழ்ச்சியி னிகழ்ச்சி

தன்னை வியப்பிப்பான் றற்புகழ்த றீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றாற்—றன்னை

வியவாமை யன்றே வியப்பாவ தின்ப
நயவாமை யன்றே நலம்.

(இ - ள்.) தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் - தன்னைப் பிறர் மதிக்கும்படி செய்வதற்காகத் தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுதல், தீச்சுடர் நல்நீர் சொரிந்து வளர்த்தற்று - குளிர்ந்த நீர் விட்டுத் தீவிளக்கை வளர்த்தது போலாம். (தீவளரும் என்று நீர்விட்டால் முன்னிருந்த தீயும் எப்படி வளராது அவிந்தே போகுமோ அதுபோலவே தனக்கு மதிப்பு மிகுமென்று தன்னைத் தானே புகழ்ந்துகொண்டால், இதற்கு முன்னிருந்த மதிப்பும் மிகாது அழிந்தே போகும் என்பது.) (ஆதலால்) தன்னை வியவாமை அன்றே வியப்பாவது - தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளாமை யல்லவா நன்மதிப்பாகும்; இன்பம் நயவாமை அன்றே நலம் - இன்பத்தை விரும்பாமையல்லவா இன்பமாகும்.

வியப்பிப்பான்; பான் ஈற்று வினையெச்சம். இதனை வினையாலணையும் பெயராகக்கொள்வதுமுண்டு; ஆற்றற் சிறப்பின்று. மணிச்சுடர் முதலாயின இருத்தலின் இதனைத் தீச்சுடர் என்றார். தீச்சுடர் என்ற குறிப்பால் நல் நீர் என்பது தண்ணீராயிற்று. சொரிந்து என்னுங் குறிப்பினால் எரியும்போது நெய் சொரிந்து தீ வளர்த்தல் போல, வளருமென்று எரியும்போது தண்ணீர் சொரிந்து அதன் வளர்ச்சியை எதிர் நோக்கினானென்று பெறப்படும். இங்ஙனங் கூறவறியாது எண்ணெய் விடுதற்கு ஈடாக அகலில் தண்ணீர் நிரப்பித் தீ வளர்த்தான் என்று சிறவாப் பொருளுரைத்திட்டாருமுளர். இன்பம் நயவாமையன்றே நலம் என்பதை வியவாமையன்றே வியப்பு என்பதற்கு உவமையாகக் கொள்ளலுமாம். நலம் - ஈண்டு இன்பம். நயவாமையே இன்பமாவதென்பது,

"இன்பம் இடையறா தீண்டும் அவாஎன்னுந்
துன்பத்துள் துன்பம் கெடின்" *

* திருக்குறள், அவாவறுத்தல், கூ.

எனனும வாய்மொழியினுல் இனிது விளங்கும். ஆவது என்பதை நலத்திற்குங் கொள்க.

(க - து.) தற்புகழ்ச்சி இகழ்ச்சியைத் தரும் என்பது. (கக)

பிறர் நன்மதிப்புறல்

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டு
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்தி
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

(இ - ள்.) பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் - மற்றவர்களால் மதிப்பதற்கான பெருமதிப்பை விரும்புமொருவன், யாண்டும் மறவாமே நோற்பது ஒன்று உண்டு - எப்பொழுதும் மறவாமற் செய்யத்தக்கது ஒன்றிருக்கிறது. (அது) பிறர் பிறர் சீர் எல்லாம் தூற்றிச் சிறுமை புறம்காத்து - மற்றவருடைய பெருமைகளை யெல்லாம் மறைக்காமல் வெளியே பரப்பி, அவர்கள் தீய வொழுக்கத்தை மட்டும் அங்ஙனம் வெளியே பரப்பாமற் காத்து, யார் யார்க்கும் தாழ்ச்சி சொலல் - எல்லாரிடத்திலும் வணக்கமான மொழிகளையே பேசுதலாம்.

பிறராற் சுட்டப்படும் சுட்டென்று கொள்க. சுட்டு - இங்கு ஒருவன் நலங்களைச் சுட்டி எண்ணுதலாலான மதிப்புக்கு வந்தது. வேண்டுவான் - விரும்புவான். "வேண்டுவார் வேண்டுவதே ஈவான் கண்டாய்"* என்பதிற் காண்க. யாண்டும் - ஏழாலதன் இடப் பொருண்மை. நோற்பது என்றூர் நோன்புபோல எண்ணிச் செய்க என்பதற்கு. பிறரைப் பற்றிய நல்ல செய்திகளை யெல்லாம் மறைக்காமல் வெளியே பரப்பிக் கெட்ட செய்திகளை அங்ஙனம் பரப்பாமற் காத்துக்கொள்ளும் உயர்ந்த செயல், கடவுளுக்கு நோன்பெடுக்கும் வணக்கச் செயலோடு ஒராற்ருல் ஒத்ததாம் என்பது அதன் குறிப்பு. பிறர்பிறர், யார்யார் என்னும்

* தேவாரம்.

அடுக்கு பன்மைப் பொருளன. தூற்றுதல் என்பது பெரும் பாலும் கெட்ட செய்திகளை வெளியிற் பரப்புதற்கே வருவது வழக்கு. ஆனல் அச்சொல்லை இங்கு நல்ல செய்தியை வெளிப் படுத்துதற்குக் கூறினர்; அக்கெட்ட செய்திகளைப் பரப்புவது போல் அவ்வளவு விரைவோடும் அவாவோடும் எங்கும் இந் நல்ல செய்திகளைப் பரப்புதல் வேண்டுமென்றற்கு. புறங்காத்து - புறத்தே போகவொட்டாதபடி காத்து. தாழ்ச்சி - தாழ்மையான மொழியின்மேல் நின்றது.

மேற்செய்யுளாலும் இச் செய்யுளாலும் பெறப்படுவது, தன்னைப் பிறர் மதிக்கவேண்டுமெஃறு எண்ணுபவன், தன்னைத் தான் புகழ்ந்து கொள்ளாமல் தன்னைத் தாழ்மையாகவே உரைத் துக் கொண்டு, பிறரை மட்டும் அவர்பாற் காணப்படும் உயர்ந்த செயல்களால் அவரைப் புகழவைத்து, அவர் தாழ்ந்த செயல்களை வெளிப்படுத்தாமல் மறைக்கக் கடவன் என்பது.

(க - து.) பிறரைப் பற்றிக் கோளுரைக்காமல் நன்மையே உரைத்தால் நன்மதிப்பு வருமென்பது. (௯௰)

## கற்றபடி யொழுகல்

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாநில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை-சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்
சொல்லாமே சூழ்ந்து சொலல். [தொருவன்

(இ - ள்.) கற்றுப் பிறர்க்கு உரைத்துத் தாம் நில்லார் வாய்ப்படூஉம் வெறு உரைக்கு ஓர் வலிவு உடைமை உண்டு - நூல் களைப்படித்து, படித்ததன்படி ஒழுகவேண்டுமென்று அக்கருத் துக்களைப் பிறர்க்கு மட்டும் எடுத்துக்கூறி, கூறியபடி தாங்களே அவ் ஒழுக்கத்தில் நில்லாமல் இருக்கிறவர்கள் வாயில் உண்டாகும் பயனில்லாத அச்சொல்லுக்கு ஒரு வலிவுடைமை இருப்பதுண்டு. (அது) சொற்ற நீர் நில்லாதது என் என்று நாண் உறைப்ப

சேர்ந்து ஒருவன் சொல்லாமே சூழ்ந்து சொலல் - நாங்கள் கற்ற தன்படி ஒழுகவேண்டுமென்று சொல்லிய நீங்கள் அங்ஙனமே அவ் ஒழுக்கத்தில் நில்லாதது ஏனோ என்று வெட்கம் உறைக்கும்படி எதிர்த்தொருவன் இகழ்ந்து சொல்லாதபடி, அறிவுறுத்தும்போது பிறர்க்கு நினைந்துபார்த்து அறிவுறுத்தலாம்.

சூழ்ந்து சொலல் ஒரு வலியுடைமை யென்க. சூழ்ந்து சொல்ல லாவது நீங்கள் அவ்வாறு நடத்தல் வேண்டுமென்று எதிரிருப் பாரைமட்டுஞ் சுட்டிச் சொல்லாமல் தன்னையும் அவர்களோடு சேர்த்துக்கொண்டு நாமெல்லாம் அவ்வாறு நடத்தல் வேண்டு மென்று தன்மைப்பன்மையாற் கூறுவது போல்வன. இங்ஙனங் கூறுவது முண்டென்று அப் படிற்றொழுக்கத்தை இழித்தபடி யாம். உறைத்தல் என்பது வருந்தும்படி நன்றாகத் தாக்குதல். "உறைப்பின் வீழ ஒதுங்குஇடம் இன்மையின்" * என்பது கந்த புராணம். 'நான் சொல்வது உன் உடம்பில் உறைக்கவில்லையா' என்பது வழக்கு.

(க - து.) 'கற்றபின் நிற்க அதற்குத் தக' என்பது. (உக)

## நரகஞ்செல் புலவர்

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார்—திறப்படூஉந்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்.

(இ - ள்.) பிறர்க்குப் பயன்படத் தாம் கற்ற விற்பார் - உரியரல்லாத பிறருக்குப் பயனாகும்படி தாம் வருந்திக் கற்ற கல்வியறிவுகளைப் பணத்துக்காகக் கொடுக்கும் புலவர்கள், தமக்குப் பயன்வேறு உடையார் - தங்களுக்கு வேறொரு பயனை உடைய ராவார்கள். அது திறம்படூஉம் தீவினை அஞ்சா விறல் கொண்டு தென்புலத்தார் கோவினை - பலவகைப்பட்ட தீய செயல்களையும்

* நகரழி படலம், எ௰.

செய்தற்கு அஞ்சாத ஆற்றல் படைத்த தென்புலத்தார்க்குத் தலைவனான கூற்றுவனை, வேலை கொளல் - தங்களை நரகத்திலிட்டு ஒறுக்கும்படி வேலை வாங்குதலாம். (அஃதாவது அப்புலவர் நரகத்துக்குச் சென்று வருந்துவர் என்பது.)

நல்லறிவு, நல்லொழுக்கம் முதலியவற்றிற்குப் புறம்பானவர்களைக் குறித்திடுவார் பிறர்க்கென்றார். கற்ற - வினையாலணையும் பெயர். விற்பார் என்றார், அங்ஙனம் செய்வதன் இழிவு நோக்கி. இது நல்ல தன்மையில் இல்லாத செல்வர்களை அவர்களிடம் பொருள் பெறுவதற்காகப் பாட்டுப் பாடும் புலவர்களைக் குறித்தது. தம்மைப் படைத்துப் புலவராக்கி எப்போதும் புறம்புறந் திரிந்து பாதுகாக்கும் எல்லாம்வல்ல கடவுளைத் தாம் வருந்திக் கற்றதன் பயனாக வாயாரப் பாடாமல், அருகே அணுகுதற்கும் தகுதியற்ற பொல்லாச் செல்வந்தரைப் பரிந்து பாடுதல் ஒரு தீவினை; அதுவுமன்றி, அவரை அளவுக்குமேற் புகழ்ந்து பாடுதலோடு ஒப்பும் உயர்வும் அற்ற இறைவனோடு அவ் ஒப்பும் உயர்வும் பொருந்த உரைத்துப் பணம் பறித்தல் மற்றுமொரு தீவினை. ஆதலின் நமனால் ஒறுக்கப்படுவாரென்க.

> "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅ ரெனின்."

என்னுந் திருவள்ளுவர் திருமொழியும். அல்லது இதனைத் தகுதியில்லாத மாணாக்கர்க்கு அவர் கொடுக்கும் பணமொன்றே கருதித் தாங்கற்ற அறிவு நூல்களை அறிவுறுத்துவார்க்குங் கொள்வதுண்டு. கொண்ட என்பது கொண்டு எனத் திரிந்தது. இது வானின்றுலகம்* என்பதிற்போல நின்றது. தென்புலத்தார் - இறந்த உயிர்கள். இவைகள் தெற்கிடத்தில் இருக்கின்றன என்னும் வழக்குப் பற்றித் தென்புலத்தாரென்றார். இதனை நாயனாருங் கூறுவார்.† என்னு நம்பியாநரர் அருள்மொழியும் இக்கருத்தினது.

---

* திருக்குறள், வான்சிறப்பு. † திருக்குறள், இல்வாழ்க்கை, ங.

(க - து.) பொருட்பற்றில்லாது தகுதியுள்ளார்க்குத் தாங் கற்றன கூறி இறைவனைப் பாடுதலே கற்றதன் பயனுமென்பது. ()

## கல்லாதா ரவையடக்கம்

கற்பன வூழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றூத்தைவா யங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு வஞ்சன்மி னென்பவே மாபறவை
புல்லுரு வஞ்சுவ போல்.

(இ - ள்.) கற்பன ஊழ் அற்றார் - கற்கப்படுவனவற்றிற்கான நல்வினை இல்லாதவர்கள், கல்விக் கழகத்து - கல்வி பயிலும் இடத்தில் (அதாவது புலவர்களின் அவையில்,) ஒற்கம் இன்று - அடக்கம் இல்லாமல், ஊத்தைவாய் அங்காத்தல் - அழுக்குப் பிடித்த வாயைத் திறந்து பேசுதல் முதலியன, மாபறவை புல் உரு அஞ்சுவபோல் - விலங்குகளும் பறவைகளும் புல்லினாற் செய்யப்பட்ட பொய் உருவத்துக்கு அஞ்சுவது போல, தம் வல் உரு அஞ்சன்மின் - தம்முடைய வலிமையான உருவத்துக்கு அஞ்சாதிருங்கள், என்பவே - என்று சொல்வனவேயாம்.

கற்பன - கற்கப்படுவன; அவை நூற்கருத்துக்கள். இந்நூலாசிரியர் குமரகுருபர அடிகள் இந்நூல் முழுதும் கல்வியைப் பன்மையாகவே கூறுகின்றார்.

'தாங்கற்ற விற்பார்' 'கற்றதெல்லாம்' 'எத்துணையவேனும் இலம்பாட்டார் கல்வி' 'வருந்தித் தாங்கற்றன' 'நெடும்பகற்கற்ற அவையத்து உதவாதுடைந்து' 'எத்துணையவாயினுங் கல்வி' என்று இச்செய்யுட்கு முன்னும், 'கல்வி...சேரா' 'கற்றன கல்லார் செவிமாட்டி' என்று பின்னும் வருதல் காண்க. கற்பன ஊழ் - நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன் றொக்க தொகை. ஒற்கம் - அடக்கம். ஊத்தைவாய் அங்காத்தல், வல்உரு என்றார், கல்லாதார் பேசுதலின் இழிவைத் தோற்ற. அங்

காத்தல் என்பதன் குறிப்புக் கொண்டு அதற்குக் கற்றாரொருவர் பேசும்பொழுது அவைக்கண் இடைஇடையே வாய்திறந்து பேசுதல் என்றும் பொருள் கூறுப. மாவும் பறவையும் என்று உம்மைத் தொகை விரிக்க. புல்லுரு என்பது, கம்பு தினை முதலியன விளைந்து கதிர் முற்றிய கொல்லைகளில், விலங்குகளும் பறவைகளும் 'யாரோ ஒரு காவற்காரன் கையிற் கொம்பு வைத்திருக்கிறான்' என்று நினைத்து அஞ்சும்படியாக, அக் கொல்லைக்காரர்கள் புல்லினாற் செய்துவைக்கும் உருவம். விலங்குகளும் பறவைகளும் அவ் வுருவத்தின் உண்மையை அறிந்து கொண்டால், எப்படி அவைகள் அஞ்சாது செல்லுமோ அதைப் போலக் கல்லாதவர்கள் தங்கள் வாய்திறந்து பேசுவதனால் தங்கள்பாற் கல்வி நலமில்லையென்பதைக் காட்டிக் கொள்கின்றார்களாதலின், மற்றவர்கள், 'இவர்கள் எவரோ கற்றவர்கள் போலிருக்கிறது' என்று நினைத்து அச்சப்படாமல் நடப்பார்கள் என்க. ஆகவே கல்லாதவர்கள் பேசுவது, தம்மிடத்திற் கல்வியில்லை யென்பதைக் காட்டி எதிரிருப்பவர்களை அச்சப்படாதிருங்கள் என்று கூறுவது போலிருக்கிறது என்றார். என்ப என்று பன்மையாற் கூறினமையின் அங்காத்தல் முதலியன என்று பல வினைமுதல்கள் வருவிக்கப்பட்டன. முதலியன எனப்பட்டவை கற்றார்போற் காட்டிக் கொள்ளும் உடற்புனைவு முதலியவைகளை. அஞ்சுவ—து கடைக் குறை. இது தொழிற் பெயர்.

(க - து.) தெரிந்தவர்கள் முன்பு தாமும் தெரிந்தவர்கள் போலப் பேசலாகாதென்பது. (உரு)

## கல்விசேரியல்பினர்

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொணகையினர் வாய்ச்சேரா—தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்.

(இ - ள்.) தாக்கு அணங்கும் - தாக்கி வருத்துகின்ற, ஆண் அவாம் பெண்மை - ஆண்மக்கள் அவாவக்கூடிய பெண்மைத் தன்மை, உடைத்து எனினும் - உடையது என்றாலும், பெண் நலம் - அப்பெண்ணின் இன்பம், பேடு கொள்ளப்படுவது இல் - பேடிகளாற் கொள்ளப்படுவதில்லை. (அதுபோல) போக்கு அறு கல்வி - குற்றமற்ற கல்வி, புலம் மிக்கார் பால் அன்றி - அறிவுமிக்கவரிடத்தில் அல்லாமல், மீக்கொள் நகையினர் வாய் - விளையாட்டுத் தன்மையையே மிகுதியும் மேற்கொண்டிருப்பவர்களிடத்தில், சேரா - சேரமாட்டாவாம்.

போக்கு - ஒழியத்தக்கது, அது குற்றம். புலம் - அறிவு. ஆராய்ந்து குற்றத்தை நீக்குவார் புலமிக்காராதலினால் புலம் மிக்கார்க்குப் போக்கறு கல்வி கூறினார். நகையினர் என்றனர் விளையாட்டுத் தன்மையுடையவரை. ஆன்ற அறிவும் அருளும் உடைய பெரியாரெல்லாரும் மிக ஆழ்ந்து ஆராய்ந்து காட்டிய கல்விப்பொருளை அவரைப் போலவே மிக அமைந்த நோக்கமும் ஆழ்ந்த கருத்தும் உடையாராய் மற்றவரின் நெஞ்சம் செல்லுத லன்றிப் பெருந்தன்மை பொருந்திக் கற்பாராதலினால் அப் பெருந் தன்மை வாயாது விளையாட்டிற் பொழுதுகழிக்கும் வீணர்களிடம் அக் கல்விப் பொருள்கள் சேரா என்றார். தாக்கு அணங்கும் பெண்மை என்று சேர்த்து வினைத்தொகையாகக் கொண்டு தாக்கி வருத்துகின்ற பெண்மைத் தன்மை என்று உரை கூறுக. ஆண் அவாம் என்பதை அப் பெண்மைக்குக் கூட்டி வினைத் தொகையாக்குக. பெண்ணலம் ஆணவாம் தாக்கணங்கும் பெண்மையுடைத்தெனினும் அது பேடு கொளப்படுவதில் என்று வினைமுடிவு செய்க. பேடு - இங்கு ஆண் தன்மை இழந்தது. ஆண் தன்மையை யிழந்த ஆண்பால் பெண்பாலாகக் கொள்ளப் படும் 'ஆண்மைவிட் டல்லதவாவுவ பெண்பால்'* என்பது நன்னூல். ஆதலால், பெண்பாலெனக் கொள்ளப்படுவது பெண்

* பெயரியல், எ.

ணின்பத்தை நுகர வொட்டாதது காண்க. பெண் மக்களின் இயற்கை யழகு ஆண்மக்களின் அறிவு ஆற்றல் முதலியவைகளைத் தாக்கி அவர் நெஞ்சத்தைத் தன் கீழ்ப்படுத்தி வருத்துதலால், 'தாக்கி வருத்துவ தோரணங்கு'* என்று பொருளுரைப்பர் ஆசிரியர் பரிமேலழகியார். அணங்குதல் - வருத்துதல். இஃதிப்பொருட்டாதலை "பெண் அணங்கு பூந்தார்"† என்ற விடத்துங் காண்க. இதனை இவர் 'தாக்கணங் கனையார்' ‡ என்று மதுரைக் கலம்பகத்தில் இவ்வாசிரியர் வழங்குதலுங் காண்க.

(க - து.) விளையாட்டுத் தன்மையுடையவர்கட்குப் படிப்பு வாராது என்பது. (உ௪)

## கற்றவர் கல்லாதவ ரியல்பறிதல்

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉங்
குற்றந் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்துந்
தாமவர் தன்மை யுணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன்.

(இ - ள்.) தாம் கற்றன - (படித்தவர்கள்) தாம் படித்த நூற்பொருள்களை, கல்லார் செவிமாட்டி - படிக்காத மூடர்களுடைய காதில் நுழைப்பதனால், கையுறூஉம்-தமக்குப் பொருந்தும், குற்றம் - அவமானக் குற்றம், தமதே - தம்முடையதே, பிறிது அன்று - வேறொருவருடையது அன்று. முற்றும் உணர்ந்தும் - எல்லாந் தெரிந்திருந்தும், அவர் தன்மை உணராதார் - அம்மூடர்களுடைய மூடத்தன்மையை உணராதவர்கள், தம் உணரா ஏதிலரை - தம்மைக் கற்றவர்களென்று உணர்ந்து கொள்ளாத அம்மூடர்களை, நோவது எவன் - நொந்து கொள்வது என்?

'தாம் அவர்' என்பதில் உள்ள தாம் என்பதை எடுத்துத் 'தாம் கற்றன' என்று இணைத்துக் கொள்க. செவிமாட்டி -

* சிந்தாமணி, முத்தி, ௩௭௯

†, திருக்குறள், தகையணங்குறுத்தல் உ-ன் உரை. ‡ மது, உக.

செவிமாட்டுதலால்; மாட்டி என்பதன் சொல்லாற்றல் தம்முடைய அறிவு நூற்பொருளை அம்மூடர்கள் விரும்பாராகவும், அவர்கள் விரும்பவில்லை என்பதைத் தாமுந் தெரிந்திருந்தும், வேண்டு மென்றே வலிந்து அறிவுறுத்துதலை விளக்கிற்று. அங்ஙனம் அறிவுறுத்துதலினால் அவமானமே அகப்படும் என்பார் 'கையுறூஉங் குற்றம்' என்றார். கையுறல் - அகப்படல், "காணிற் குடிப்பழி யாங் கையுறிற் கால் குறையும்" † என்பது நாலடியார். அளபெடை இன்னிசை நிறைக்கவந்தது. தமது - குறிப்புமுற்று - ஒகாரம் - தேற்றம். பிறிதன்று - வேறன்று, அக்குற்றம் அம்மூடர்களுடையது அன்று என்னும் பொருளில் வந்தது. நன்றாய்ப் படித்து எல்லாம் தெரிந்திருந்துங்கூட, 'தம் அறிவுரைகளை அம் மூடர்கள் ஏற்றுக்கொள்வார்கள் அல்லது ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்' என்று அறிந்துகொள்ளாமற் போனால், அம்மூடர்கள் எவ்வாறு இவர்கள் படித்தவர்கள் ஆதலால் இவர்களுக்கு மதிப்புக் கொடுத்து இவர்கள் கூறும் அறிவுரைகளை ஏற்றுக்கொள்ளல் வேண்டும் என்று தெரிந்துகொள்வார்கள் என்பது; இதன் உட்கோள். ஏதிலர் - தம்மோடு தொடர்புறுதற்கு ஏதொரு ஏதுவும் இல்லாதவர். அவர், பிறர். கொ - நீண்டு கோவதென்றாயிற்று.

(க - து.) ஏற்றுக்கொள்ளுந் தகுதியுடையவர்களுக்கே தாம் அறிந்த அறிவுநூற்பொருள்களைக் கூறுதல்வேண்டும் என்பது. (உரு)

## இறை மாட்சி

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குவப்பெய்தார்—மாத்தகைய
அந்தப் புரத்தது பூனை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு.

(இ - ள்.) மாத்தகைய அந்தப் புரத்தது பூனை - பெருமையை யுடைய வீட்டினுள் இருப்பது பூனை. புறங்கடையது

† பிறர்மனை நயவாமை, ச.

கந்துகொல் பூட்கைக்களிறு - அப்பெருமையில்லாத தலைவாயிலில் இருப்பது கட்டுத்தறியை முறித்துவிடக்கூடிய வலிமையுடைய யானை (என்றாலும், வீட்டினுள் இருப்பதனால் பூனைக்கும், வெளியில் இருப்பதனால் யானைக்கும் யாதொரு பெருமையும் சிறுமையும் இல்லை, ஆகவே, மிகல் மக்கள் வேத்து அவை காவார் - மேன்மக்கள், அரசனுடைய அவையில் இருந்தால்தான் பெருமை வருமென்று நினைத்து அந்த அரச அவையைக் காத்துக்கொண்டிருக்க மாட்டார். (அதனால் அவர்க்கு வருத்தமென்பதும் ஒன்றில்லை); வேறு சிலர் காத்ததுகொண்டு ஆங்கு உவப்பு எய்தார் - அம் மேன்மக்களுக்கு வேறான வேறு சிலர் அதாவது கீழ்மக்கள் அவ் வரசவையைக் காத்துக்கொண்டிருந்ததனால் ஏதும் மகிழ்ந்து விடவும் மாட்டார்.

வேந்து அவை எனப்படுவது எதுகை நோக்கி வலித்து வேத்தவை எனப்பட்டது. காவார், காத்தது என்பன அரசனிடத்தில் அலுவல் பெறுகிருத்தலையும் குறித்தன. அலுவலைக் காவார் காத்தது என்னுஞ் சொற்களாற் கூறினர். அவ்வலுவல் அரசனிடத் ததேயாதலும் காத்துக் கிடப்பதாகிய இழிவையுடையதேயாம் என்றற்கு மாத்தகைய—பெருந்தன்மையையுடைய, அந்தப்புரம் என்பது, பிறரெல்லாம் கிட்டுதற்கு அரிதான வீட்டின் உள் அறை. ஆவது பெண்மக்கள் இருப்பிடம். அஃது எல்லாரும் கிட்டுதற்கு அருமையான அரசவைக்கு உவமையாக வந்தது. பூட்கை-வலிமை. இஃதிப் பொருட்டாதலை "ஓடாபூட்கை" * என்ற விடத்துக் காண்க.

(க - ரு.) அறிஞர்கள் எங்கிருந்தாலும் அவர்கட்கு மதிப் புண்டு. (உ௬)

## தெய்வம் இவரெனல்

குலமகட்குத் தெய்வங் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயு—மறவோர்க்

கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வ
மிலைமுகப் பைம்பூ ணிறை.

(இ - ள்.) குலமகட்குக் கொழுநனே தெய்வம் - நல்லொழுக்கமுடைய பெண்ணுக்கு அவள் கணவனே தெய்வமாவான்; புதல்வர்க்குத் தந்தையுந் தாயும் - புதல்வர்களுக்கு அவர்கள் தாய் தந்தையர்களே தெய்வமாவர்கள், அறவோர்க்கு அடிகளே தெய்வம் - நல்லொழுக்கமுடைய மாணவர்களுக்கு அவர்கள் அவர்கள் ஆசிரியன்மாரே தெய்வமாவர், அனைவோர்க்கும் இலைமுகப்பைம்பூண் இறைதெய்வம் - இவரொழிய மற்றெல்லோருக்கும் இலை நுனி போன்ற பசும்பொன் நகைகளணிந்த அரசனே தெய்வமாவான்.

கற்புடைய மனைவி இங்குக் குலமகளெனப்பட்டாள். தெய்வம் என்றது 'தெய்வம்போலப் பார்க்கத்தக்கவர்கள்' என்பதற்கு. தெய்வம் என்பதை இரண்டாமடியிலுள் கொள்க. கொழுநனே என்பதில் உள்ள பிரிநிலை யேகாரத்தை மற்றவற்றிற்குங் கூட்டுக. அறவோர் என்றார், மாணவர்கள் மற்றவற்றிற் பற்றுவையாது கல்வியிலே கருத் தூன்றித் துறவிகள்போல் நிற்றலின். அடிகள் ஆசிரியர்க்கு வருதலை "அன்னை தன்னைத் தாதையை அடிகடன்னை" * என்னுங் கந்த புராணத் திருமொழியிற் காண்க. குலமகள், புதல்வர், அறவோர் என்பவர்கட்கு இன்னின்னார் தெய்வமென்று கூறிவிட்டமையின், அவரொழித்து மற்றையோரையே அனைவோர்க்கும் என்றார். அவ்வனைவோரென்பர் இல்வாழ்வாரென்க. இலைமுகப்பைம்பூண் என்பதை வெற்றிலை மூக்குப்போல செய்யப்பட்ட நகை என்று கூறுப. பைம்பொற் பூண் என்று வரற்பாலது பைம்பூண் என்று வந்தது இஃது ஒரு மரபு வழுவமைதியென்பர். கணவன், தாய்தந்தையர், ஆசிரியர், அரசன் என்பார்; இறைவன் உயிர்கட்கு எவ்வகையான உதவி செய்கின்றானோ அதுபோன்ற உதவியையே உடனிருந்து அன்போடு அவ்வப்போதும் தன் மனைவி மக்கள் மாணவர் குடி

* வீர. சப. உக.

மக்கள் என்பார்க்குச்செய்தலின், அவரெல்லாம் அவர்கட்குத் தெய்வ மாவாரெனப்பட்டார். மன்ற - அசை.

(க - து.) மனைவி கணவனையும், மக்கள் பெற்றோரையும், மாணவர் ஆசிரியரையும், குடிமக்கள் அரசனையும் தெய்வமெனப் போற்றக் கடவர் என்பது. (௭௭)

## குடியோம்பல்

கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே யாயினுந்-தண்ணளியான்
மன்பதை யோம்பாதார்க் கென்னும் வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு.

(இ - ள்.) கண்ணின் சொலிச் செவியின் நோக்கும் இறைமாட்சி - கட்பார்வையால் கருத்து அறிவித்து நேரிற் பார்த்தது போலக் காதினால் செய்திகளை யறியும் அரசனுடைய பெருமையான செய்கை, புண்ணியத்தின் பாலதே ஆயினும் - நல்வினையோடு சேர்க்கத்தக்கதே ஆனாலும், தண் அளியால் மன்பதை ஓம்பாதார்க்கு - குளிர்ந்த அருள் நெஞ்சத்தால் குடிமக்களை ஆளாத அரசர்க்கு, என்னும் - கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் அரசாட்சி முறை என்னபயனுயிற்று? ஆணல்லவர்க்கு வயப்படை என் பயக்கும் - பேடிகளுக்கு வெற்றிதரத்தக்க வில், வாள், வேல் முதலிய போர்க்கருவிகள் என்னபயனைத் தரும். (எ - று.)

தன் கீழ்வேலை செய்வோரையும் குடிமக்களையும் 'அடங்கி யிருங்கள்' என்று வாயாற் சொல்லாமல் தனக்குள்ள அக்கருத்தை அவர்கள் தன் பார்வையினாலேயே அறிந்துகொண்டு அடங்கிக் கிடக்குமாறு பார்த்தலைக் 'கண்ணிற் சொலி' என்றார்; வாயின் வேலையைக் கண் செய்தலால் கண்ணுக்குச் சொல்லுந் தொழிலை யேற்றினார். நேரிற்போய் ஒரு செய்தியை அறிந்ததுபோலவே தக்க ஒற்றர்கள் வாயிலாக அதைக்கேட்டு அறிந்து கொள்ளுதலால், 'செவியின் நோக்கி' என்றார். இவ்வகையான திறமை எல்லா

யாலும் இயல்வதன்றாதலால் அதனை 'மாட்சி' என்று கூறினார். அரசாட்சி செய்யவேண்டுவோர் இவ்வாறு செய்யவேண்டுமாதலால், இங்ஙனம் செய்யும் ஆட்சித் திறமையில்லாதவர்கள் அரசராய்ப் பிறந்து விடுவதனால்மட்டும் ஏதும் பயனில்லை யென்பதாம். அது போர் செய்யும் ஆற்றலில்லாதவன் கையில் வாளிருந்தும் பயனில்லையாதல் போலவென்றார். "பேடிகை ஒள்வாள்." * என்று நாயனார் இவ்வுவமையைக் கொண்டிருத்தல் காண்க. ஆணல்லவர்க்கு, ஒரு சொல் வீர்மைத்தாய் ஆண்மைத் தன்மையில்லாத பேடிகளை உணர்த்திற்று.

(க - து.) ஆளுந்திறனும் அன்பும் இல்லாத அரசாட்சி பயனின்றென்பது. (உ அ)

## வரிவாங்கு முறை

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலு மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

(இ - ள்.) குடி கொன்று இறைகொள்ளும் கோமகற்கு - குடிமக்களை வருத்தி வரி வாங்கும் அரசனுக்கு, கன்று ஆ மடி கொன்று பால் கொளலும் மாண்பே - கன்றையுடைய ஆவின் மடியினை வருத்திப் பால் கறப்பதும் நல்ல செயலாகும், இவ்வாறு வருத்தி வரிவாங்கும் அரசனிடத்தில் செல்வம் சேர்ந்திருக்கிறதோ வெனில் அதுவுமில்லை. (ஆனால்) குடி ஓம்பிக் கொள்ளுமா கொள்வோர்க்கு - குடிமக்களை அவர்கள் நலத்தில் கருத்து வைத்துப் பாதுகாத்து நல்ல முறையில் வாங்கும் வகையாக வரியினை வாங்கும் அரசர்க்கு, மாநிதியம் வெள்ளத்தின் மேலும் பல காண்டும் - பெருமையுடைய பணம் வெள்ளத்தினும் மேலும் பலவாகக் காண்கின்றோம். (எ - று.)

கொன்று என்றது இங்கு வருத்துதலுக்கு வந்தது. அது கொலை செய்ததுபோன்ற அத்துணை மிகுதியான வருத்தத்தைச் செய்தலாம். மடிகொன்று என்றதற்கும் அதுவே கருத்து. மடியைக் கொல்லுதலாவது அதனைக் கசக்கி உயிரோடு தோலுரிப்பதே போல அதன் முலைக்காம்புகளை நோவநோவ மிக அழுத்தி நீட்டி இழுத்தல். 'பால் கொளல்' என்னுங் குறிப்பினாலேயே அவ்வாறுக்குக் கன்றிருப்பது பெறப்படுமாயினும், பாலருந்தக் கன்றொன்றிருக்கிறதே என்பதையும் நோக்காமல், அது செய்வன் என்பதைக் குறிக்கக் கற்று என்றார். கன்று ஆ என்பன வலித்துக் கற்று வாயிற்று. "கற்றாவின் மனம்போல" என்பது திருவாசகம். வருத்தி வரிவாங்கும் அரசனுக்கு வருத்திப் பால் கறக்கும் செய்கையும் நல்லதாய்த் தோன்றும் என்று கூறினார், எத்துணைத் தீய செய்கையைச் செய்தற்கும் அவன் நெஞ்சம் ஒருப்படுமென்று அவன் கொடுமையை உணர்த்துதற்கும் பால்கொளல் இறைகொள்ளுதற்கும் உவமையாகக் கருத்தில் வந்தது. இறை - வரி. இதனை "அரசனுக்கு இறைப்பொருள் ஆறிலொன்றாயிற்று" என்னும் பரிமேலழகருரையிற் (திருக்குறள், இல்வாழ்க்கை, ௩ - உரை) காண்க. கொள்ளுமாறு, கடைக்குறை. 'குடியோம்பிக் கொள்ளுமா கொள்வோர்க்கு மாநிதியங் காண்டும்' என்பதனால் குடிகொன்றிறை கொள்ளுங் கோமகற்கு அச்செல்வம் இல்லை என்பது குறிப்பெச்சமாகப் பெறுதும், மாநிதியம், பெரும்பணமன்று, பெருமையுடைய பணம். என்னை? மிகுதியைக் குறித்தற்கு 'வெள்ளத்தின் மேலும் பல' வென்று பின் வருதலாலும், வருத்தாது வாங்குவான் பணம் மிகுதியாதலோடு பெருமையுமுடைய தென்பதை இங்குக் குறித்திடல் இன்றியமையாததாலாலும் என்க. கொள்ளுமா கொள்வார் பணம்பெருமையுடையதாம் எனவே அங்ஙனங்கொள்ளாதார்பணம் குறைந்து போனதோடு பெருமையும் இலதாம் என்று கொள்க. வெள்ளம் ஒரு எண்ணென்றுங் கூறுப. வெள்ளத்தின்மேலும் பல. என்னும் மூன்றுசொற்களையும் மேலும்மேலும் மிகும் என்பதற்குக் கொள்க. எகாரம் இரண்டினுள் முன்னது தேற்றம்; பின்னது அசை.

(க - து.) குடிகளை வருத்தாது வரி வாங்குதல் அரசன் கடன். (உ௧)

அரசனுகான் இயல்பு

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறு
னின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவ
னுவன கூறி னெயிறலைப்பா னாறலைக்கும்
வேடலன் வேந்து மலன்.

(இ - ள்.) இன்று கொளற்பால நாளை கொளப்பொறான் - இன்று கொள்ளத்தக்க பொருள்களை நாளைக்கு வாங்கிக்கொள்ள ஒருநாள் பொறுக்கமாட்டான். நின்று குறை இரப்ப நேர்படான் - சற்றுநேரம் எதிரே நின்று குடிகள் தங்கள் குறைகளைச் சொல்லி வேண்டிக்கொள்ள அகப்படமாட்டான். ஒருவன் சென்று ஆவன கூறின் எயிறு அலைப்பான் - அதாமீறிச் ஒருவன் எதிரே போய்த் தனக்கு வேண்டியவைகளைக் கூறினுல் பல்லைக்கடித்து அச்சுறுத்து வான். ஆறு அலைக்கும் வேடு அலன் வேந்தும் அலன் - இப்படிப் பட்டவன் வேடனும் அல்லன் அரசனும் அல்லன். (எ - று.)

இன்று கொளற்பால - இன்று கொள்ளும் பான்மையை யுடையவை. நின்று குறையிரப்ப என்றதற்கு எதிரே நின்று நிறைப் பித்தல் பொறுமையாய்க் குறையிரத்தல் என்னும் இரண்டுங் கொள்க. இஃது இரட்டுறமொழிதல்.

நாளை கொளப்பொறுனாயினும், அங்ஙனம் ஒருநாள் பொறுக்கு மாறு குடிமக்கள் தமக்குள்ள குறைகளைச் சொல்லிக்கொள்ளலா மென்றாலும் அதற்கும் நேர்படான். ஏதோ நல்லகாலமாக நேர் பட்டானாயினும் அவர்கள் தமக்கு ஆவன கூறும்பொழுது அதனை ஏற்றுக்கொள்ளாமல் எயிறலைப்பான்; இவன் எதற்கும் பயனில்லை. என்றிவ்வாறு பொருட்டொடர்பு செய்க. குறையிரப்ப, ஒரு சொன்னீரது, இரப்பாரைப்போல நின்று தங்குறை கூறுந் தொழிலுணர்த்திற்று. இதனை இரண்டாகப் பிரித்து இடர்ப்படு

வாருமுளர். இங்ஙனமே எயிறலைத்தல் ஆறலைத்தல் என்பன பண்டு தொட்டே பற்கடித்தல், வழிபறித்தல் என்னும் பொருள் மேலவாவே வருதலின் சொன்னீர்மையவென்று கொள்க. நேர் படல் - ஒத்து நிற்றல் - இங்குக் குறையிரத்தல் வேண்டுமென்று வந்த குடிமக்களின் கருத்தோடு ஒத்து அதனை முடிக்க வேண்டு மென்று நிற்கும் அரசன் தொழிலை உணர்த்திற்று. அரசு அமைச் சுப்போல வேடு வேந்து பண்பாகு பெயர்கள், காட்டில் நின்று பறியாமையாலும் வெளிப்படையாய்ப் பறியாமையாலும் வேட னல்லன் என்றும், குடிகளிடத்தில் தண்ணளியில்லாமையாலும் முறையாகப் பாதுகாவாமையாலும் வேந்தனல்லன் என்றுங் கூறினர்.

(க - து.) அரசனுக்குக் குடிகளின் நலத்திற் கருத்திருத்தல் வேண்டும். (ஙo)

அரசபோக மயக்கம்

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப வுண்ணு—இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிகொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

(இ - ள்.) முடிப்ப முடித்து - முடிக்கத்தக்க மலர் முதலி யவைகளை முடித்துக்கொண்டு, பின்பூசுவ பூசி - அதன்பின்பு பூசத் தக்க கலவை முதலியவைகளைப் பூசிக்கொண்டு, உடுப்ப உடுத்து - உடுக்கததக்க பட்டாடை முதலியவைகளை உடுத்துக்கொண்டு, உண்ப உண்ணு - உண்ணத்தக்க நறுநெய்யுணுக்களை உண்டு (உயிர்த்தன்மை காட்டி), இடித்து இடித்துக் கட்டுரை கூறின் - பலமுறை நெருக்கி நெருக்கி அறிவுரை கூறினும், செவிகொளா கண்விழியா - காதிற் கொள்ளாதனவாயும் கண் திறந்து பாராதன வாயும் பிணத்தன்மையுங் காட்டி நிற்கும் அரசர்கள், நெட்டுயிர்ப் போடு உற்ற பிணம் - அத்தகையோர் பெருமூச்சோடு கூடிய பிணங்களேயாம். (எ-று.)

முடிப்பதும் பூசுவதும் உடுப்பதும் உண்பதுமான செயல்க ளெல்லாம் உயிரிருப்பதுபோற் காட்டுகின்றன. ஆனால் கேளாமை யும் பாராமையும் உயிரில்லாததுபோற் காட்டுகின்றன. உயிருக்கு முதன்மையான தன்மை அறிவே யாமாதலின் அதன் செய்கைக ளான கேட்பதும் பார்ப்பதும் இல்லாத அரசர்களைப் 'பிணம்' என்றே கூறல் வேண்டினர். ஆனால் அவ்விறந்த பிணத்தினின் றுஞ் சிறிது வேற்றுமை காட்டுதற் பொருட்டு செட்டுயிர்ப்போ டுற்ற பிணமென்று சொன்க. முடிப்ப, பூசுவ, உடுப்ப, உண்ப, செவிகொளா, கண்விழியா வினையாலணையும் பெயர்கள். கடைசி இரண்டினை முற்றாகக் கொள்ளலுமாம். உண்ணுநின்று என்பது கடைகுறைந்து உண்ணு என்று நின்றது. இடித்திடித்துக் கூறல் - வெட்கம் வருமாறு நெருக்கிக் கூறல். மிகுதிக்கண் மேற்சென் றிடித்தல்* என்பது திருக்குறள். கட்டுரை - பொருள் பொதிந்த சொல், உறுதியையுடைய சொல்லுமாம் † என்பது ஆசிரியர் அடி யார்க்கு நல்லாருரை. கூறின் என்ற விடத்து இழிவு சிறப்பும்மை தொக்குநின்றது.

(க - து.) அறிவும் இரக்கமும் இல்லாதவர்கள் பிணங்களுக்கு ஒப்பாவா ரென்பது. (ருக)

செங்கோன்மை

ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோ டுணையாத் தெரிதந்தும்—குற்ற
மறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

(இ - ள்.) ஒற்றின் தெரியா - வேவுகாரராற் றெரியப்படாத உண்மைகளை, சிறைப்புறத்து ஓர்தும் என - ஒதுக்கிடங்களி லிருந்து தெரிந்துகொள்வோம் என்று, பொன்தோள் துணையா தெரிதந்தும் - தனது அழகான தோளை தனக்குத் துணையாக

* கட்பு, சு. † சிலப், பதிகம், ருசு-ன் உரை.

நினைத்துக்கொண்டு போய் ஆங்கிருந்து அவைகளைத் தெரிந்து கொண்டும், குற்றம் அறிவரிது என்று அஞ்சுவதே செங்கோன்மை குடிமக்களின் செய்கைகளில் குற்றமாவன இவைதாம் என்று துணிதல் அருமையானதென்று நினைத்து அக்குற்றங் காண்டலுக்கு அஞ்சுவதே நல்ல அரசாட்சி முறையாகும். (அதுவே முறையாமன்றிச்) சென்று முறையிடினுங் கேளாமையன்று - குடிமக்களை போய்த் தங்குறைகளைச் சொல்லிக்கொண்டாலும் அதனைக் கேளாமலிருப்பது முறைமையன்று.

இச்செய்யுள் அரசனுவான் குடிமக்களின் நலங்களை அவர்களிருக்குமிடத்தில் வேவுகாரர்களை அனுப்பிவரச் செய்து அவர்கள் வாயிலாகத் தெரிந்து கொள்வதுமன்றி, அவர்களாலும் தெரிந்து கொள்ளப்படாத உண்மைகளைத் தன் தோளே துணையாகத் தானே சேர்ந்து சென்று அறிவதும், அங்ஙனம் அறிந்த விடத்தும் அவர்பாலுள்ள குற்றங்களை அறியாதொழிவதுமே நல்ல அரசாட்சி முறையாமன்றி, அவ்வாறு தன் ஒற்றர்களாதல் அல்லது தானுதல் போய் அவர் நலங்களை அறியா தொழிந்தாலும், அக் குடிமக்களாகவாவது தன்னிடம் வந்து முறையிட்டுக் குறையிரக்கும்போது கூட அதனைக் கேளாமலிருப்பது முறையன்றாம் என்பதுணர்த்திற்று. இவ்வாறு இச்செய்யுளின் ஒவ்வோரடியும் ஒன்றுக்கொன்று இயைந்து நின்று பொருளுணர்த்துமாற்றை உணரமாட்டாதார் தமக்குத் தோன்றியவாறெல்லாம் இதற்குப் பொருந்தாவகையாய் உரைகூறிச் செய்யுளினியைபைக் கெடுத்திடுவர். ஒற்று என்பது இங்கு நட்பினர் பகைவர் அயலவர் ஆகிய மூவகையாரிடத்தும் வேற்றுமையின்றி அவர்க்கு ஆவார்போல அவரோடு கலந்து அவ்வவரின் உண்மைச் செய்தியை அறிபவரை உணர்த்தும். தெரியா - வினையாலணையும் பெயர். போமிடத்துத் தனக்கு ஏதேனுந் தீங்குவரினும் போரிட்டுக் கண்டு வருவன் என்பதற்குப் 'பொற்றோன் துணையா' என்றார். உரை தருதல் என்றாற்போலத் தெரிதருதலென்பது இங்கு இறந்த காலத்தின்

கண், தெரிதந்து என்று வந்தது. தெரிந்து என்பது பொருள். தெரிதா - பகுதி.

(க - து.) அரசனுக்குக் குடிமக்களிடத்தில் நன்மை காண்டலிலேயே கருத்திருக்க வேண்டுமென்பது. (௩௨)

அரசன் பேரறிவு

ஏதிலார் யாதும் புகல விறைமகன்
கோதோரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பா ரென்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரு முண்டு.

(இ - ள்.) நேர்நின்று - காக்கையின் எதிரிலேயே நின்று கொண்டு, காக்கைவெளிது என்பார் - அக்காக்கை வெண்மையானது என்று உண்மைக்கு மாறாகப் பிடிவாதம் பேசுபவர், என் சொலார் - வேறு எதைத்தான் சொல்லமாட்டார்கள், தாய்க்கொலை சால்புடைத்து என்பாரும் உண்டு - தாயைக் கொலை செய்தல் கூடப் பொருத்தமானதே என்று சொல்பவர்களும் உலகத்தில் இருக்கிறார்கள். ஆதலால், ஏதிலார் யாதும் புகல - பிறர் தமக்குத் தோன்றியவாறெல்லாம் சொல்ல, இறைமகன் கோது ஓரீஇக் கொள்கை முதுக்குறைவு - அரசனானவன் அவர்கள் கூறுவதிற் குற்றமாவனவற்றையெல்லாம் நீக்கி நல்லனவற்றைமட்டுங் கொள்ளுதல் பேரறிவாகும். (எ - று.)

குடிமக்கள் வழக்கிட்டுக்கொண்டு ஒருவர்மேலொருவர் அழுக்காறு முதலியவற்றாற் பொருந்தாதனவுங் கூறுவராதலால், அரசனானவன் அவர் கூற்றுக்களை அப்படியே எடுத்துக்கொள்ளாமல் அவற்றிற் பொருந்துவனவே எடுத்துக்கொள்ளுமாறு கூறிற்று. முதுக்குறைவு ஒரு சொன்னீர்மைத்தாய்ப் பெரிய அறிவினை உணர்த்திற்று. "முதுக்குறைவி" * என்பதற்கு ஆசிரியர் அடியார்க்கு நல்லார் 'பெரிய அறிவையுடையாள்' என்றது காண்க.

* சிலப், கொலைக்கள, ௬அ.

(க - து.) எதனையும் ஆராய்ந்து பார்த்துப் பொருந்துவன கொள்வது அரசன் கடன் என்பது. (ருரு)

## மூடர்கேடறியாமை

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகு—மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

(இ - ள்.) மண்டு எரி - மிகுந்த நெருப்பு, வாய் மடுப்பினும் - சூழ்ந்து எரிந்தாலும், மாசுணம - பெரிய பாம்புகள், பெருமூச்செறிந்து - பெருமூச்சு விட்டுக்கொண்டு, கண் துயில்வ - தூங்கிக்கொண்டிருக்கும், பேரா - அவ்விடத்தினின்றும் அசையா. (அது போலக்) கேடு கண் கூடாப்பட்டது எனினும் - தமக்கு வருங் கெடுதிகளை நேராகவே பார்த்தார்களானாலும், கீழ்மக்கட்கு உண்டோ உணர்ச்சி - கீழ்மக்களுக்கு அவைகளினின்றுந் தப்பிப் பிழைக்கும் உணர்ச்சி உண்டோ, இல்லாகும் - இல்லையாகும். (எ - று.)

கண்கூடு ஒரு சொன்னீரதாய்க் கண்ணுக்குக் கூடுவதான கட்பார்வை யுணர்த்திற்று, கண்கூடாப்பட்டது - நேரே கண்ணாற் பார்க்கப்பட்டது. மற்று - தான், அசை, மண்டெரி - பெருந்தீ. என்பது நாலடிவெண்பா. வாய்மடுத்தல் - உண்ணுதல். மூச்செறிதல் - ஒரு சொல் தன்மைத்து.

(கு - து.) எத்துணைக் கெடுதி வருவதாயினுங் கீழ்மக்கள் மீண்டும் மீண்டுந் தீய செயல்களையே செய்வரென்பது. (ருசு)

## கேட்டின்குறி

நட்புப் பிரித்தல் பகைநட்ட லொற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுத—றக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

(இ - ள்.) நட்புப் பிரித்தல் - நண்பர்களைப் பகையாக்கிக் கொள்ளலும், பகைநட்டல் - பகைவர்களை நட்பாக்கிக் கொள்ளலும், ஒற்று இகழ்தல் - வேவுகாரர்களை இழித்துரைத்தலும், பக்கத்தார் யாரையும் ஐயுறுதல் - பக்கத்திலுள்ள எல்லாரிடத்திலும் ஐயுறவு கொள்ளலும், தக்கார் நெடுமொழி கோறல் - பெரியோர்களுடைய அறிவுரைகளை மீறலும், குணம் பிறிது ஆதல் - இயல்பான தன்மைக்கு மாறுதலும் (ஆக இந்த ஆறு பொருந்தாத செயல்களும்) கெடுவது காட்டும் குறி - பின்னால் வரும் கெடுதிகளைக் காட்டும் அடையாளங்களாம். (எ - று.)

நட்பு, பகை என்பன பண்பாகு பெயர்களாய் அவையுடையாரை உணர்த்தின; ஒற்று தொழிலாகு பெயராய் எல்லாரிடத்தும் ஒன்றியிருப்பாரை உணர்த்திற்று. நெடுமொழி - பெருமையுடைய மொழி அது அறிவுரை. நட்புப் பிரித்தல் முதலிய ஆறையும் உடையார்க்குக் கேடுவரும் என்க. அன்றிக் கெட்ட காலம் வருமானால் அவனை இவ்வாறெல்லாம் பிரித்தல் முதலியன செய்யுமாறு அஃது ஏவுமென்றுங் கொள்க.

(க-து.) நட்புப் பிரித்தல் முதலியன செய்யலாகாதென்பது.

## பெரியோரைப் பிழைத்தல்

பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினாற் றாழ்வார்க்—கணிய
திளையாள் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
தொலையாத * போகங் கொளல்.

(இ - ள்.) பணியப்படுவார் புறங்கடையராக - தம்மால் வணங்கி எதிர்கொள்ளத்தக்க பெரியார் தம்முடைய தலைவாயிற் படியில் வந்து நின்றனராகத், தணிவு இல் களிப்பினால் தாழ்

* 'தொலையாத' என்னும் இச்சொல் இதற்குமுன் வெளிப்பட்ட நூல்களிலெல்லாங் காணப்படாதிருந்தது. திருவருளால் இஃதோர் ஏட்டுப் படியிற் கண்டெடுக்கப்பட்டது.

வார்க்கு - அடங்குதலில்லாத செல்வக் களிப்பினால் அவரை எதிர் கொள்ளக் காலந்தாழ்வார்க்கு, அணியது இளையாள் முயக்கு எனி னும் - திருமகளின் சேர்க்கை தமக்கு நெருக்கமானதேயாமாயி னும், சேய்த்து அன்றே மூத்தாள் தொலையாத போகம் கொளல் - மூதேவியின் ஒழியாத சேர்க்கையை மேற்கொள்ளுதலும் அவர் களுக்குத் தொலைவில் இல்லையே என்பதாம். (எ - று.)

ஆகவே, பெரியாரை மதியாது செல்வக் களிப்பினாற் செருக்கு வார்க்குத் திருமகள் நீங்கி யொழிய மூதேவி விரைவிலே வரும் என்க. எனவே அவர்கட்கு அச்செல்வம் அழிந்துபோம் என்பது- அணியது சேய்த்து என்பவற்றைக் கால அளவுக்குக் கொள்க. "புணர்முலைப்" என்றும் பாடம்.

(க - து.) செல்வத்தைவிடப் பெரியாரைப் பெருஞ் செல்வி பார்க்கவேண்டும் என்பது. (ருசு)

சான்றாண்மை

கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு.

(இ - ள்.) கண்ணோக்கு அரும்பு ஆ - அன்பான கண்ணின் பார்வையே மொக்காகவும், நகைமுகமே நாள்மலரா - மகிழ்ச்சி யான முகமே புதுப்பூவாகவும், வாய்மையின் இன்மொழியே தீம் காயா - மெய்ம்மையினாலான இன்சொல்லே தித்திப்பான காயாக வும், வண்மைபலம் ஆ - ஈகையே பழமாகவும், நலம் கனிந்த பண்பு உடையார் அன்றே சலியாத கற்பதரு - ஆக இவ்வகைப்பட்ட நன்மைகள் மிகுந்த பெருந்தன்மையுடைய செல்வர்களல்லவா சலித்தலில்லாத கற்பக மரமாவார். பலம் - வடசொல்.

கண்ணோக்கு - அருட்பார்வைக்கே சிறப்பாக வழங்குதலை 'என்மேல் கண்ணோக்கம் வை' என்பதிற் காண்க. நாள்மலர் -

நாள்தோறும் பூக்கும் புதுப்பூ, இன்மொழியின் வாய்மையே என்பதை மற்றவற்றோடு ஒத்துநிற்றற்பொருட்டு முன்பின்னாக மாறுக. இங்கு வாய்மை யென்றது உள்ளும் புறம்பும் ஒத்து நிற்றலை உண்மை என்பதை 'சொல்லின் முடிவின் அப்பொருண் முடித்தல்' என்னும் உத்திபற்றி ஈற்றில் நிறுத்தினர். இச்செய்யுளின் முதன்மையான கருத்து அதுவாதலின் கண்ணோக்கு நகைமுகம் இன்மொழி எனவரும் ஏனைய மூன்றும் இவ்வுண்மையைச் சிறப்பிக்க வந்தனவென்று கொள்க. இங்ஙனம் எருத்திருத்திச் செய்யுளியற்று முறைமை மணிவாசகப்பெருமான் இயற்றிய திருச்சிற்றம்பலக் கோவையாரின் முதற்பாட்டிலும், அதற்குப் பேராசிரியர் கூறும் உரையிலுங் கண்டுகொள்க.

(க - து.) விரும்பிப் பார்த்தல் முகமலர்ச்சி முதலிய குணங்களையுடைய அரசன் கற்பகதருப் போலப் பயன்படுவன் என்பது.

## செல்வர் ஈகைப்பயன்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பிற்
றூங்குங் களிறோ துயருறா—ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி யுய்யுமா
லாருங் கிளையோ டயின்று.

(இ - ள்.) வாங்கும் - (கால்) வாங்கியட் கொள்ளும், கவளத்து - உணவு உருண்டையினின்று, ஒரு சிறிது - ஒரு சிறிய பங்கு, வாய்தப்பின் - வாய் தவறிக் கீழ்விழுந்தால், (அதனால்) தூங்கும் - அசையாநிற்கும், களிறோ - யானைகளோ, துயர்உறா - வருத்தமடையா, அதுகொண்டு - (தவறிய) அவ்வுணவைக் கொண்டு, இங்கு - இவ்வுலகில், ஊரும் எறும்பு ஒருகோடி - ஊருகின்ற எறும்புகள் ஒருகோடி, ஆரும் கிளையோடு - (தங்கள்) நிறைந்த சுற்றத்தோடு, அயின்று - உண்டு, உய்யும் - பிழைக்கும்.

யானை வாயினின்றுந் தவறிய சிற்றுணவால் ஒரு கோடி எறும்புகள் உயிர் வாழும் என்பதனால் ஒட்டணியாகக் கூறப்பட்டது. 'கருதிய பொருள் தொகுத்துப் புலப்படுத்தற்—கொத்த

தென் றுரைப்பினஃ தொட்டெனை மொழிய'—என்பது தண்டியலங்கார விதி. சிறிது - சிறுமை எனும் பண்புப்பெயர் ஈறு போய், இடையுகரம் ய் ஆகிச் சிறி என நிற்க, 'து' ஒன்றன்பாற் படர்க்கை விகுதியுடன் சிறிது ஆயிற்று. களிறு - பால் பகா அஃறிணைப் பெயர், ஆல் - அசை. அயின்று - இறந்தகால வினையெச்சம். 'அயில்' பகுதி 'ல்' ஆகத் திரிந்த சந்தி. ற்—இடைநிலை, உ—விகுதி. கிளை—கிளைத்தல்—முதனிலைத் தொழிலாகுபெயர்.

ஒப்புநோக்க "சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்" —(திருக்குறள்)

கவளம் எனில் உணவுருண்டை. அவ்வுருண்டை அதை உண்பார் ஒரு தடவை விழுங்கும் அளவுக்குப் போதியதாய் உருட்டப்பட்டதாகும். பொதுவாகக் கவளம் என்பது சமைத்த அரிசியால் (சோற்றால்) உருட்டிய அல்லது சமையாத அரிசியோடு சர்க்கரை, பழம், தேன் முதலிய ஒட்டுப் பொருள்கள் சேர்த்துப் பிசைந்து உருட்டிய, அல்லது மாவில் மேற்சொல்லிய ஒட்டுப் பொருள்கள் சேர்த்துருட்டிய ஓர் உணவு உருண்டையைக் குறிக்கும். ஒரு தடவை ஓர் உயிர்ப்பிராணி விழுங்கும் எந்த வுணவையுங் கவளம் எனச் சொல்வாருமுண்டு.

வாங்கும் கவளம் என்றவிடத்து, பாகன் கொடுக்க யானை உணவுருண்டையை வாங்கி யுண்ணும் எனப் பொருள்பட நிற்கும்.

(க - ரை.) பெருஞ் செல்வமுடையவர் அதனில் ஓர் அற்பப் பகுதியைத் தானமாக விடுவாராயின் அதனால் எத்தனையோ உயிர்கள் பிழைக்கும். (ருஅ)

அரசன் நன்மதிப்பு

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
யீகையி னெக்கழுத்த மிக்குடைய—மாகொல்
பகைமுகத்த வெள்வேலான் பார்வையிற் றீட்டு
நகைமுகத்த நன்கு மதிப்பு.

(இ - ள்.) பகைமுகத்த - பகைப்புலத்துள்ள, மா - (தன் பகைவராகிய) மிருகங்களையெலாம், கொல்-கொல்லுந் திறனுடைய, வெள் வேலான் - ஊன் படிந்த வேலேந்திய அரசன், நகை முகத்த - (தன்) மலர்ந்த முகத்திற் காணும்; பார்வையில் - பார்வையினால், நீட்டும் - தோற்றுவிக்கும், நன்குமதிப்பு - நன்மதிப்பானது, மாகம் - வானும், சிறுக - குறையும்படி, நிதிக்குவை குவித்து - (அவ்வளவு பெரிய) பொருட்குவியலைக் குவித்து, ஈகையின் - (அவைகள் யாவையும் அவரவர் தகுதிக்கேற்ப அவ்வரசன்) அள்ளிக் கொடுத்தலைப் பார்க்கினும், எக்கழுத்தம் - இறுமாப்பு, மிக்குடைய - பெரிதுமுடையதாகும்.

(க - து.) அரசனிடத்திலே அளவற்ற பெரும்பொருளைப் பரிசாகப் பெறுவதிலும் அவனாலே நன்கு மதிக்கப்படும் பேறு பெறுதல் ஒருவர்க்கு மிக்க இறுமாப்பினைக் கொடுக்கும்.

'மாகஞ் சிறுக' என்றவிடத்து நிதிக்குவை நெடுங்குன்று போல் பரந்து உயர்ந்து வெளியிடமெலாம் பிடித்தால் வானும் சிறுகும்படி செய்தது எனவாகும்.

அவரவர் தகுதிக்கேற்ப அளவு செய்து அள்ளிக் கொடுத்தலால் பார்வையிற் நீட்டும் என்றுங் கூறினர். எக்கழுத்தம் - எழும் கழுத்தம் என்பதன் மரூஉ. எக்கழுத்தமுடைமையாவது அரசன் கண்ணோட்டமிருப்பதால் இனி நமக்கு யாதுங் குறைவில்லை, எவர்க்கும் அச்சம் இல்லை என்று தோன்றும் உள்ளக் கிளர்ச்சியும் அக் கிளர்ச்சியாலேற்படும் இறுமாப்பும். சிறுக - செய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் 'சிறுமை' என்னும் பண்புப் பகுதி ஈறு கெட்டு 'கு' என்னும் தொழிற் பெயர் விகுதியேற்று ஓர் பகுதியாக நின்றது. 'மிக்கு' 'மிக' என்னுஞ் செயவெனெச்சத்திரிபு. ஈகை - தொழிற் பெயர். முகத்த - குறிப்புப் பெயரெச்சம்.

அரசன் பால் குறையிரந்து நிற்கும் ஒருவனுக்கு அவ்வரசன் அளவற்ற பொருட்குவியலை அளிக்கிறான் என வைத்துக்கொள்வோம். அவ்விதம் பொருட்குவை பெற்று அகன்றபின் அரசன்

4

தனனிடம் வந்து அவனைப்போற் குறையிரந்த பல்லாயிரக் கணக்கான வறியரில் ஒருவனாய் எண்ணி அக்கணமே அவனை மறந்து விடுவன். ஆனால், அங்ஙனமின்றி எப்பொழுதும் அரசன்றயவு அவனுக்கிருப்பின் அவன் யாருக்கும் அஞ்சவேண்டியதில்லை. அவனை நாடி வருவோர் அநேகர் இருப்பர். அதனால் அவனுக்கு எப்பொழுதும் மனமகிழ்ச்சி இருந்துவரும். (௫௧)

## அடைக்கலங்காத்தல்

களைகணாத் தம்மடைந்தார்க் குற்றுழியு மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார்—தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்க டாம்.

(இ - ள்.) ஊன் உடம்பு - இறைச்சியாலாகிய இவ்வுடல், தளர்நடையது என்று - (பிணி, மூப்பு, சாக்காடு முதலியவைகளால்) நிலைதளரும் தன்மையுடையது என்று கருதி (அதனால் அதை வெறுத்து), புகழுடம்பு ஓம்புதற்கே - (நிலை தளராத) புகழ் உடம்பினை வளர்க்கவே, உடம்பட்டார்கள் - தீர்மானித்தவர்கள், தம் களைகண் ஆக - தம்மை ஆதாரமாக, அடைந்தவர்க்கு - அடைந்தவர்க்கு, உற்ற உழி உம் — (சிறிது துன்பம்) வந்தவிடத்தும், பற்று ஓர் விளைவு உன்னி - வேறொரு பயனைக் கருதி, வெற்றுடம்பு தாங்கார் - பயனில்லாத (தமது) ஊன் உடம்பினைப் பாதுகாக்க நினையார்.

(க - து.) புகழை விரும்புகிறவர்கள் தம் உயிரைக் கொடுத்தேனும் தம்மை யடைந்தோர்க் குற்ற துயர் ஒழிப்பார் என்பது.

அரசர்க் கரசன் சிபி, புறாவின் பொருட்டுத் தன்னுயிர் கொடுத்ததும், தேவர் துன்ப நீங்கத் ததீசிமுனிவர் தம் முதுகெலும் பீந்ததும், பேபர் தம் மகன் பிழைக்கவேண்டி அவனுக்கு வந்த காய்ச்சலை ஒரு பெரியோர் கூறியபடி தாம் ஏற்று, தமது மகனுயிர்

காப்பாற்றியதும்; புகழுடம்பு விரும்புவார் தம் ஊனுடம்பைப் பொருட்படுத்தார் என்பதற்குத் தக்க சான்றாகும். "எவரெனினும் இடருற்றனராகி - யோவில் குறையொன் றுளரேல் அதுமுடித்தற் - காவிவிடினும் அறனே" என்பது கந்தபுராணம்.

களைகண் நீக்குமிடம் - துன்பத்தை நீக்கும் இடம எனப் பொருள்மேல் நிற்றலின் உவமையாகு பெயர். விளைவு காரண ஆகுபெயர். உன்னி இறந்த காலவினையெச்சம். ஊனுடம்பு - மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் றொக்க வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். புகழுடம்பு - இருபெய ரொட்டுப் பண்புத் தொகை.

ஒப்பு நோக்க "அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு."—(திருக்குறள்) (௬0)

## மானம் வலியின் உயர்வு

தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்த
மின்னுயி ரோம்பினு மோம்புக—பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

(இ - ள்.) பின்னர் - இனிமேல், சிறுவரை ஆயினும் - கணப்பொழுதாவது, மன்ற - நிச்சயமாக, தமக்கு இறுவரை இல்லை எனின் - தமக்குச் சாங்காலம் இல்லையானல், தம்முடை - தம்முடைய, ஆற்றலும் மானமும் தோற்று - வலிமையையும் மானத்தையும் இழந்து, தம் இன்னுயிர், - தமது இனிய உயிரை, ஓம்பினும் ஓம்புக - காக்கினுங் காக்க.

(க - து.) தமக்கு இனிமேல் இறத்தல் இல்லை என்று நிச்சயமாக உணர்ந்தவர்கள் தம் வலிமையையும் மானத்தையும் இழந்தேனும் தம்முயிரைப் பாதுகாக்க.

பிறந்தபோதே இறப்பு உண்மையாகலின் வலியும் மானமும் இழக்காது வாழவேண்டும் என்று கொள்ளற்பாலது. போர்முகத்துப் பகைவர்க்குப் புறங்காட்டல் வலியிழத்தல்; இழிதொழில் செய்து பிறரால் அவமதிக்கப்படலும் தண்டிக்கப்படலும் மானம் இழத்தல்.

ஓம்புக - வியங்கோள் வினைமுற்று. ஓம்பினும் - உம் இழிவு சிறப்பு. ஆங்கு - அசைநிலை. இறுவரை - ஈறு என்னும் பண்புப் பெயர்ச்சொல் முதல் குறுகிக் காலங் கரந்த பெயரெச்சமாயிற்று.

ஒப்புநோக்க "மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை,பெருந்தகைமை பீடழிய வந்த விடத்து. (திருக்குறள்)

பிறந்த உயிரெல்லாம் என்றேனும் ஒருநாள் இறந்தே தீரும். இறவாத உயிர் எதுவும் மண்ணிலில்லை. ஆசிரியர் குமரகுருபர அடிகள் தம் முதற் செய்யுளிலேயே இவ்வுண்மையை விளம்பி மண்ணிற் பிறந்தார்க்கெல்லாம் மரணம் உண்டாகையால் 'எம்பிரான் மன்று வழுத்தாதலென்னே நமரங்காள்' என வருந்தினர்

## மானங் காப்பவர்

கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்யொழிந் தாரும்—கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரு மஞ்சார் முரண் மறலி
தும்பை முடிசூ டினும்.

(இ - ள்.) கலன் அழிந்த - மங்கல நாண் இழந்த, கற்புடைப் பெண்டிரும் - கற்புடைய பெண்களும், ஐந்து புலன் ஒருங்க— (மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும்) ஐம்புலன்களுந் தம் வசப்பட, பொய் ஒழிந்தாரும்—பொய்ம்மையினின்று நீங்கினோரும், கொலைஞாட்பின் - யுத்தகளத்தின் கண்ணே, மொய்ம்பு உடைவீரரும் - வலிமையுடைய வீரர்களும், முரண்மறலி - வலிமைமிக்க இயமன், தும்பை முடிசூடினும் - தும்பைப் பூமாலை

யைத் தன் முடியில் தரித்து எதிர்ப்பினும், அஞ்சார் - (தமது) நிலை கலங்கார்.

(கு - து.) கற்புடைய கைம்பெண்களும், ஐம்புலன் வென்ற துறவிகளும், அஞ்சா நெஞ்சு படைத்த போர் வீரர்களும் மரித்தற்கு மஞ்சாது தம் மானத்தினைக் காப்பர்.

பெண்டிர்—'பெண்டு' என்னும் குறிப்பு வினைமுற்று 'இர்' என்னும் பலர்பால் விகுதிபெற்று 'பெண்டிர்' என்றாயிற்று.

ஒருங்க—'செய' என்னும் வாய்பாட்டு எச்சம். ஒருங்கு—பகுதி, -உ கேடு சந்தி, அ - விகுதி. தும்பைமாலை-போர் செய்தற்கு அணியுமாலை. தும்பை—இருமடி யாகு பெயர். தும்பை என்னும் முதற்பொருள் அதன் சினைப்பொருளாகிய தும்பை மலர்க்கு ஆகிறபடியால் பொருள் ஆகு பெயராகவும், பின் தும்பை மலரால் ஆகிய பூமாலைக்காவதால் கருவி யாகுபெயராகவும் வருவதால் 'தும்பை' இருமடியாகுபெயர்.

மறலி—மறத்தொழில் (கொடுந்தொழில் அதாவது கொல்லுதல்) செய்வதால் மறலி எனப்பட்டான்.

ஒப்புநோக்க. "கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை". —(திருக்குறள்)

கணவரை இழந்து கற்புநிலை தவறாத பெண்கள் இயல்பாகவே தம் வாழ்நாளில் வெறுப்புற்றிருப்பர். அன்னார் தம் கணவர் இருக்குங்கால் தாம் வாழ்க்கையில் இன்பமாய்க் காலங் கழித்ததும், அன்னார் இறந்தபின் தம் உலக வாழ்க்கை தமக்கு எப்போதும் மகிழ்ச்சியற்றிருப்பதும் கண்டு மரணத்துக்குச் சித்தமாயிருப்பார்கள். ஐம்புலன் வென்ற துறவிகட்கு உலகப் பற்றேயிராதாகையால் அவர்களும் மரணத்தை மகிழ்ச்சியோடு எதிர்நோக்குவர்.

சுத்த வீரர் வீரசுவர்க்கம் விரும்பிப் போரில் தம் பகைவருடன் எதிர்த்து நிற்குங்கால் தம் உயிரைத் துரும்பாக மதித்துத்

தமக்கு அல்லது எதிரிக்கு வெற்றிகாணு மளவும் வீரமுடன் சண்டை செய்வார். தாம் தோற்க நேர்ந்தழி மானங்காப்பான் தம் இன்னுயிரை அக் கொலைக் களத்திலேயே கூற்றுவனிடம் ஒப் படைப்பர்.

இவ்வுண்மைக்கு நிகராய் நின்றது நம் பரத நாட்டில் ராஜ புத்திர வீரர்களாவர். அவர்கள் போரில் புறங்காட்டார். தோல்வி யுறின் தாமே தம் இன்னுயிர் மாய்ப்பர். இராஜ புத்திரப் பெண் மணிகளும் தங்கள் கணவர் யுத்த களத்தில் உயிர் மடிந்தார் எனக் கேட்டால் உடனே நெருப்பில் விழுந்து உயிர் விடுவர். இம் மாண்பை நம் தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார் சுதேச கீதத் தில் தாயின் மணிக்கொடியைப் புகழுங்கால் அதைக் காத்திடும் ராஜபுத்திர வீரரைப்பற்றி,

பூதலமுற்றிடும் வரையும்—அறப்
போர்விறல் யாவும் மடிவுறு வரையும்
மாதர்கள் கற்புள்ள வரையும்—பாரில்
மறைவருங் கீர்த்திகொள் ரஜபுத்திர வீரர்

எனச் சுத்த வீரர்களாகிய ரஜபுத்திரர்களைப் புகழ்ந்தனர்.

## மெய்ப்பயனுடையார் இறத்தற் கஞ்சார்

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங்
கழிமுடை நாற்றத்த வேனும்—விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோ டுதற்கு.

(இ - ள்.) விழலர் - (அறிவில்லா) வீணர், புழுநெளிந்து - புழுக்கள் நெளிய, புண் அழுகி - புண்ணையழுகி, யோசனை நாறும்- யோசனை தூரத்துக்கு நாறுகின்ற, கழி - மிகுந்த, முடைநாற்றத்த வேனும் - தீ நாற்றத்தையுடையதாயினும், விளிவு உன்னி - சாதலை நினைத்து, வெய்து உயிர்ப்பர் - பெருமூச்செறிவர், (ஆனல்) மெய்ப் பயன் கொண்டார் - தாம் உடம்பெடுத்த பயன் இன்னதென்

றறிந்த அறிஞர், சுமைபோடுதற்கு - (இவ்வுடம்பாகிய) சுமையை வீசி எறிய, சுளியார் - வெறுப்புக்கொள்ளார்.

(க - ரு.) தாம் உடலெடுத்த பயனறிந்த அறிஞர் இறத்தற் கஞ்சார். அது அறியாத வீணர் அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோய் வாய்ப்பட்டு அவதியுறும்போதுங் கூடச் சாதலை நினைத்துப் பெருமூச்செறிவார்.

சுமை சுமப்போன்; சுமைப்பாரம் தாங்காது அதைக்கொண்டு இறக்குமிடம் வருமட்டும் வருந்தி நடந்து அவ்விடங் கண்டவுடன் மகிழ்ச்சியால் தன் தலைமீதிருக்குஞ் சுமையை இறக்கி மனமகிழ்தல் போல், உடம்பெடுத்த பயனறிந்த அறிஞர் அவ்வுடம்பாகிய சுமையைச் சுமந்து திரிய வருத்தமடைந்து அச்சுமையைப் போடுங் காலம் கண்டால் மகிழ்ச்சி கொள்வாராகையால் 'சுமைபோடுதற்குச் சுளியார்' என்றார். நெளிந்து - 'நெளிய' எனும் வினையெச்சத் திரிபு. விழலர் - உவமையாகுபெயர். விழல் உள்ளீடின்றியிருப்பதுபோல் அறிவெனும் உள்ளீடில்லார் விழலுக்கு உவமை சொல்லப்பட்டார். சுமை - தொழிலாகுபெயர்.

ஒப்பு நோக்க. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை. —(திருக்குறள்)

இப்பாட்டின் முழுமைக்கும் அருணகிரிநாதர் தக்க சான்றாகிறார். அவர் மெய்ப்பயன் காணுமளவும் உலகப்பற்றில் மிகுதியும் பற்றிக் கண்டபடி திரிந்தலைந்து காம வேட்கையால் பல கன்னியரைச் சேர்ந்து கைப்பொருளெல்லாம் செலவாகி "புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறுங் கழிமுடை நாற்றமுற்ற" பெருநோய் வந்தபோதும் மெய்ப்பயன் அறியாதிருந்தமையால் தாமடைந்த பெருநோய்க்காக வேனும் தம் வறுமை நிலைக்காக வேனும் வருந்தாம லில்லை. தம் அக்காளை நாடித் தம் காம இச்சையைத் தணிக்கப் பொருள் கேட்டதும் அவ்வம்மை பொருளின்றித் தன்னையே அவர் காம விச்சையைத் தணிக்க ஒப்படைத்தும், அவ்வமயம் அருணகிரிக்கு மெய்ப்பயன் விளங்கவும் அவர்

உடனே உயிரை வெறுத்துச் சுமைபோடச் சுளியாது, திருவண்ணா மலைக் கோபுரமீதேறிக் குதித்ததும், நோக்கற்பால. (சங)

மன்னனேப்படி மன்னுயிரப்படி

இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
புகழினு மொக்கப் புகழ்ப—இகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செயு
நீர்வழிப் பட்ட புணை.

நீர்வழிப்பட்ட புணை - நீர் செல்லும் வழியே செல்லும் தெப்பம், மற்று என்செயும் - அவ்வழியிற் செல்லாது வேறு என்ன செய்யும்? (அதுபோல்) மன்பதைக் கூட்டம் - மக்கட் கூட்டம் இகல் மன்னன் - வலிமையுடைய அரசனது, சீர்வழிப்பட்டது - காந்தி வழியே செல்லும். (அஃதெவ்வாறெனில்) இறைமகன் -, அரசன், ஒன்று இகழின் - ஒரு பொருளை இகழ்ந்தால், ஒக்க இகழ்ந்து - (தாமும் அரசனோடு) கூட அதை இகழ்ந்து, புகழினும் - (அவன் அப்பொருளைப்) புகழ்ந்தால், ஒக்க புகழ்ப - தாமும் கூடப் புகழ்வர்.

(க - து.) அரசன் ஆணைக்குட்பட்டு அவன் குடிகள் நடக்க வேண்டியவர்கள்.

ஒன்று - எண்ணுகு பெயர். காந்தி - ஒளி; அரசனுறங்கினுஞ் சென்று உலகங்காக்கும் அவன் கடவுட்டன்மை, ஒக்க - ஒ. தனி வினைப்பெயர். கு - சாரியை. அ - பெயரெச்ச விகுதி. ககரம் இரட்டித்தது சந்தி. ஒக்க - போல.

ஒப்பு நோக்குக. "குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்." —திருக்குறள்

'அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும்' என்பது பழமொழியாகையால் அரசன் எவ்வழி அவ்வழி குடிகள் நடக்கவேண்டும். இன்றேல், அரசன் ஆருயிரையும் வாங்கிடுவான். கோவலன் தன் முற்பிறப்பில் அரசன் கட்டளையை மீறி அடைக்

ப்பட்டிருந்ததும், யாரும் அதைத் திறந்து தொழக்கூடாது என்றும் அரசனால் கட்டளையிட்டிருந்தும் அதை மீறிக் காளி தேவியின் கோயிலைத் திறந்து தொழுததால் அரசன் அவனைக் கொல்லும்படி சொன்னதும், இங்கு நோக்கற்பால. (சசு)

அமைச்சரியல்

செவிசுடச் சென்றுங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா—கவிழ்மதத்த
கைம்மா வயத்ததே பாகுமற் றெத்திறத்து
மம்மாண் பினவே யமைச்சு.

(இ - ள்.) பாகு - பாகன், எத்திறத்தும் - எவ்வகையாலும், கவிழ்மதத்த - பொழியும் மதத்தினையுடைய, கைமா - யானையின், வயத்தது - வசத்தினான், (அதுபோல்) அமைச்சு - அமைச்சர்கள், எத்திறத்தும் - எவ்வகையாலும், அமாண்பின - அத்தன்மையராவர்; (ஆகையால்) சென்று - (அரசன் தன் நெறி தவறினால் அவனிடத்துப்) போய், செவிசுட - (அவனது) செவிகள் வருந்தும்படி, இடித்து - (அவன் குற்றங்களை எடுத்துக் காட்டி) இடித்துரைத்து, அறிவு மூட்டி - (அவனுக்கு) அறிவுவரச் செய்து, வெகுளினும் - (அவன் தம்மை) கோபிக்கினும், வாய்வெரீஇ - (அவனுக்கு) பயந்து, பேரா - (அவனைவிட்டு) அகலார்.

(க - து.) பாகனானவன் யானை மதங்கொண்டபோது அதனை நடத்தி நல்வழிக்குக் கொண்டுவருவதுபோல், அமைச்சர் அரசன் வெகுண்டபோது அவனை நல்வழிப் படுத்துவர்.

யானை தன்னியல்பிலிருக்கும்போது அதனைத் தன்வசப்படுத்தி நடத்தும் பாகர்; அது மதங்கொண்டு தம் வச மடங்காமல் ஓடும்போதும் அதனை விடாது சென்று அதன் காதுகளில் அங்குசம் போட்டு இடித்து அதன் மதத்தை அடக்கி மறுபடியும் அதனைத் தன்னியல்பிற்குக் கொண்டுவருவதுபோல் அரசன் தன்னியல்பில் நின்றபோது அவன் மனம்போல் நடக்கும் அமைச்சர் அவன்

வெகுண்டு தன்னிலை தவறுங்கால் அவன் செவிகளில் நன்மொழி களை இடித்துரைத்து அவனுக்கு அறிவு புகட்டி அவனை மறுபடியும் தன்னியல்பிற்குக் கொணர்வர் என்று அழகாக உவமிக்கிறார் ஆசிரியர்.

கவிழ்மதம் - பொழியும் மதம்.

"மோனை முத்தமிழ் மும்மதமும் பொழி
ஆனை முன்வந் தெதிர்த்தவ னாரடா". (ஒட்டக்கூத்தர்).

ஊட்டி - இறந்தகாலப் பிறவினை வினையெச்சம். ஊட்டு - பிற வினைப் பகுதி, உ - கேடுசந்தி, இ - விகுதி.

பேரா - அமைச்சு என்ற பால்பகா அஃறிணைப் பெயர்க் கேற்ற பயனிலை. வெரீஇ - சொல்லிசை யளபெடை.

மாண்பின - குறிப்பு வினையாலணையும் பெயர்.
ஒப்பு நோக்குக. "அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந் தான் கூறல் கடன்"—திருக்குறள்.

கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா னினியன கழறிப்
பதங்கொள் பாகனு மந்திரி யொத்தனன் பன்னூல்
விதங்களா லவன் மெல்லென மெல்லென விளம்பு
மிதங்கள் கொள்கிலா விறைவனை யொத்ததோர் யானை"
(கம்பராமாயணம்).

'செவிசுடச் சென்றங்கு இடித்தறிவூட்டி' என்ற விடத்து யானைக்குக் காதுகளில் அங்குசத்தால் பாகன் இடித்து இழுத்துப் பல கடுமொழிகள் புகன்று அதனை நல்லறிவுக்குக் கொண்டுவருவது போல், அமைச்சரெனும் பாகர் அரசனெனும் யானை வெகுண்டால் அவன் செவிகளில் தம் அறிவுரைகளாகிய அங்குசத்தால் இடித்து அவனை நல்வழி திருப்புவர் என இங்கு ஆசிரியர் உவமைகாட்டிய தால், ஆசிரியரின் கவித்திறனும் மூதறிவும் விளங்கலாயின. (சரு)

அரசனையடுத்தொழுகுமாறு

கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க—ஒவ்வொருகா
லெண்மைய னேனு மரியன் பெரிதம்மா
கண்ணில னுள்வெயர்ப்பி னன்.

(இ - ள்.) வேந்தன் - அரசன், நமக்கு கைவரும் என்று - நமக்குள் அமைந்தவன் என்று கருதி, காதலித்த - விரும்பினவற்றை, செவ்வி தெரியாது - (அவனிடம் சொல்லக்கூடிய) காலந் தெரியாமல், உரையற்க - சொல்லுதலொழிக. ஒவ்வொரு கால் எண்மையனேனும்-சிற்சில நேரங்களில் (அவன்)காணுதற்கு எளியனாலும், பெரிது - பெரும்பாலும், அரியன் - (காண்டற்கும் பேசுதற்கும்) அரியனாவன், (மேலும்) கண் இலன் - (அவன்) கண்ணோட்டமில்லாதவன், உள் வெயர்ப்பினன் - உள்ளத்தே சினமுமுடையவன்.

(க - து.) அரசன் நம்மிடம் அன்புடையவனாயிருப்பினும் அவனிடம் காலமறிந்தே நாம் விரும்பியவற்றைச் சொல்லவேண்டும்.

கோல் நிலை கோடா வேந்தன் கோல் நிலை கோடா நிற்க உறவினர் அயலார் என நோக்காது அறநெறி நின்று அந்நெறி பிறழ்ந்தாரைத் தண்டித்தலும், காலம் வருமளவும் பகைவாறியாமல் உள்ளே சினங்கொள்ளலும் இயல்பாதலால் கண் இலன், உள் வெயர்ப்பினன் என்றார்.

காதலித்த - வினையாலணையும் பெயர். உரையற்க - எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. ஒவ்வொருகால் - ஒன்று, ஒன்று கால் என்பன பண்புத் தொகையில் ஒவ்வொருகால் என்றாயிற்று. கண் இடத்தினிகழ் பொருண்மேல் நிற்றலாலும், உள் அங்கிருக்கும் மனத்தின் மேல் நிற்றலாலும் இடவாகு பெயர்கள். வெயர்ப்பு-தொழிலடியாகப் பிறந்த பெயர்ச்சொல், காரியவாகு பெயர்.

ஒப்பு நோக்குக. "கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத
துளக்கற்ற காட்சி யவர்" [செய்யார்
—திருக்குறள்

அரசனைக் கண்டு தத்தம் குறைபாடுகளைக் கூற, பற்பல அதிகாரிகளும், புலவர்களும், குடிகளும் அயல்நாட்டு மன்னரின் தூதுவர் முதலியோரும் தருணம் பார்த்து நிற்பர். அரசன் எல்லோரையும் உசாவி அவரவர்க்கு மறுமொழி சொல்வதில் எப்போதும் ஆவலுடையவனுயிருப்பன். மேலும் அவரவர்க்கு ஏற்ற விதம் அவரவர் குறைபாடுகள் நீக்க நெடுநேரம் ஆழ்ந்து யோசிக்கவேண்டியவனுயுமிருப்பன். அவ்வமயங்களில் அவன் மனநிலை தெரியாமல் எவ்வளவு உயிர்த்தோழராயிருந்தாலும் காலமறியாமல் அவனிடம், ஏதாவது மொழிந்தால் அவன் சிந்தனை சிதறுண்டு அதனுலவன் சீற்றங்கொள்வனன்றே? ஆகையால் செவ்வி யறிந்துரைக்க. (௬௩)

அரசன் வெகுளி

பழைமை கடைப்பிடியார் கேண்மையும் பாரார்
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார்—வெகுளின்மன்
காதன்மை யுண்டே யிறைமாண்டார்க் கேதிலரு
மார்வலரு மில்லை யவர்க்கு.

(இ - ள்.) வெகுளின் - (அரசர்) கோபித்தால், பழைமை - (இவர் நமக்கு அரசியலில்) தொன்றுதொட்டுப் பணியாற்றி வருபவர் என்பதையும், கடைப்பிடியார் - நிலைநிறுத்தார், கேண்மையும் - (இவர் நமக்கு) உறவினர் என்பதையும், பாரார் - கவனியார், பிறிது - (அவை) ஒழிய, கிழமை - (இவர் நமக்கு) உரியவர் என்பதையும், ஒன்றும் - சிறிதும், கொள்ளார் - நினையார், (ஆதலால்) இறை - அரசியலில், மாண்டார்க்கு - அகப்பட்டார்க்கு, காதன்மை உண்டே - அன்புடைமையுண்டா, அவர்க்கு - அவ்வரசருக்கு, ஏதிலரும் - (இவர்) அயலாரெனவும், ஆர்வலரும் - (இவர்) அன்புடையாரெனவும், இல்லை - கிடையா.

(க - து.) எவரும் அரசரிடம் முழு நம்பிக்கை கொள்ளல் கூடாது.

அரசர் சினங்கொள்வாராயின் அவர் அயலாரெனவும் அன்புடையாரெனவும் பாரார் என்பதற்கு அநபாயசோழன் ஒரு பசுவின் கன்றின் பொருட்டுத் தனது புதல்வன் செய்த குற்றத்திற்காக அவனையே கீழே கிடத்தி அவன்மேற் றேரூர்ந்த கதை தக்க சான்றாகும். பழைமை, கிழமை - இரண்டும் பண்பாகு பெயர்கள். மன் - அசைச்சொல். மாண்டார் - பண்படியாகப் பிறந்த வினையாலணையும் பெயர். ஆர்வம் - அன்பு, இதனை யுடையார் ஆர்வலர்.

ஒப்புநோக்குக. "பழையமெனக் கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்" —திருக்குறள்

அரசர்க்குக் கோபம் பிறந்தால் அரசர் கட்டளைக்கு எதிர்த்து நிற்க முடியாது. அரசர் கோபத்திற்கு உற்றார், உறவினர் என்று கிடையாது. 'வேந்தன் சீறின் ஆந்துணையில்லை'

"மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சரஞ் சுடையதாகத்
தன்னொடு கூடி வாழுந் தன்மை"

என்றனர் மணிமேகலையாரும். (சுஎ)

## மன்னர் புறங்கடை காத்தல்

மன்னர் புறங்கடை காத்து வறிதேயா
மெந்நலங் காண்டுமென் றெள்ளற்க—பன்னெடுநாள்
காத்தவை யெல்லாங் கடைமுறைபோய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும்.

(இ - ள்.) யாம் - நாம், மன்னர் புறங்கடை - அரசர் தலைவாயிலை, வறிதே காத்தும் - வீணாகக் காத்துவந்தும், எந்நலம் காண்டும் - யாது பயனடைந்தோம், என்று எள்ளற்க - என்று அக் காவலை கைவிடுத லொழிக, பல்நெடுநாள் - பலநாட்கள், காத்தவை யெல்லாம் - (தலைவாயிலைப் பொறுமையுடன்) காத்திருந்

தலை யெல்லாம், கடைமுறைபோய் - முடிவிற் சென்று, கை கொடுத்து - உதவியாகி, வேந்து அவையின் - அரச சபையில், மிக்கு செயும் - மிகுந்த நன்மையைச் செய்யும்.

(க - து.) அயர்வின்றி அரசன் பணியாற்றுவார்; முன்னில்ல விடினும் முடிவில் அவன் அன்பு பெறுவர்.

வறிது—குறிப்பு வினையெச்சம். காண்டும்—தன்மைப் பன்மை இறந்த கால வினைமுற்று. காண் பகுதி. டும் விகுதி. வேந்து + அவை—வேந்தவை, வலித்தல் விகாரம்.

ஒப்புநோக்குக.

"தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்" —(திருக்குறள்)

அரசசேவை வீண் போகாது. அரண்மனை வாயில் காக்கும் காவலாளனை அரசன் வாயிற்புறத்து வந்து போகும் பல தடவை களில் ஒரு தடவையாவது கவனியாம லிருக்கமாட்டான். பல தடவை கவனித்தும் அக்காவலாளனுக்கு அன்பு காட்டாதிருக்கலாம். அவனுக்கு வாயிற்காவலினும் உயர்ந்த ஓர் தொழில் அளியாதிருக்க லாம். அப்போது அரசன்பால் வெறுப்பும் தன் தொழிலில் அரு வருப்பும் கொள்ளலாகாது. ஏனெனில், அரசன் பல தடவையாக அக் காவலாளின் பொறுமை எப்படி என்று வெளிக்குக் காட்டா மலே கவனித்து வந்தாலும் வரலாம். அப்படிப் பல தடவை கவ னித்ததில் காவலாளன் தன் வேலையைப் பொறுமையோடு பார்க் கிறான் என அவன் உறுதிகொண்டு விட்டால் பின் அக் காவலாளனை அரசன் கட்டாயம் மேற்றொழில் ஒன்றில் அமர்த்துவன், ஆகை யால் "மன்னர் புறங்கடை காத்து வறிதேயா மெந்நலங் காண்டு மென்றெள்ளற்க." மேலும் 'முயற்சி திருவினையாக்கும்.' (சஅ)

## இறுவரைகாறு முயலல்

உறுதி பயப்ப கடைபோகா வேனு
மிறுவரை காறு முயல்ப—இறுமுயிர்க்கு

மாயுண் மருந்தொழுக்க றீதன்று லல்லனபோ
லாவனவு முண்டு சில.

(இ - ள்.) இறும் உயிர்க்கு - இறக்கு நிலைமையில் இருக்கும் உயிர்களுக்கும், ஆயுள் மருந்து - வாழ்நாளைப் பெருக்கச் செய்யும் மருந்துகளை, ஒழுக்கல் - வாயில் விடுதல், தீதன்று - தீதாகாது, சில - சில காரியங்கள், அல்லன போல் ஆவனவுமுண்டு - முடியாதவைகள் போல் தோன்றி (விடாமுயற்சியின் பயனாய்) பின்பு முடிவனவும் உண்டு. (ஆதலால்) உறுதிபயப்ப - நன்மை பயக்குங் காரியங்கள், கடைபோகா எனும் - முற்றுப் பெறாவிடினும், இறுவரை காறும் - (அவை) முடிவுபெறும் வரைக்கும், முயல்ப - (அறிஞர்) முயற்சி செய்து வருவர்.

(க - து.) எக்கருமமாயினும் பயனளிக்காதென்று இடையில் விட்டுவிடாமல் அயர்வின்றி முடிவு வரை முயலவேண்டும்.

உறுதி - தொழிலாகு பெயர்; அடையப்படுவது. பயப்ப - பலவின்பால் வினையாலணையும் பெயர், இறு - வினைத்தொகை. முயல்ப - பலர்பால் எதிர்கால வினைமுற்று; ப - விகுதி. காறு - வரை—இடைச்சொல்—ஒழுக்கல்—தொழிற் பெயர். ஆல் - அசை. ஆவனவும் - உம் உயர்வு சிறப்பு இனி ஆகாமையும் என நிற்றலின் எதிரது தழீஇய எச்சமுமாம்.

ஒப்பு நோக்குக. "இசையா தெனினும் இயற்றியோர் ஆற்றல்
அசைவின்றி நிற்பதாம் ஆண்மை —நாலடியார்

"கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
தூக்கங் கடிந்து செயல்" —திருக்குறள்.

உழைப்பில்லார்க் கூதியமில்லை யாகையால் எக்கருமமாயினும் இறுதிவரைச் சலிப்பின்றி முயலவேண்டும். (சஃக)

முயற்சி செய்யாமை

முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா வூழ்த்திறத்த வென்னார்—மயலாயு

மூற்றமி றூவிளக்க மூழுண்மை காண்டுமென்
றேற்று ரெறிகான் முகத்து.

(இ - ள்.) மயல் ஆயும் - அறிவுகெட்டு, ஊற்றம் இல் அசைவின்றி நிற்குந் தன்மையில்லாத, தூவிளக்கம் - தூயவிளக்கை, ஊழ் உண்மை காண்டும் என்று - ஊழ்வினையின் உண்மையைத் தெரிவோம் என்று கருதி, எறி - வீசுகின்ற, கால்முகத்து - காற்றுக்கெதிரில், ஏற்றார் - (ஒருவரும்) ஏற்றமாட்டார், (அதுபோல் அறிவுடையார்) மூயலாது வைத்தும் - பயன்றரும் காரியங்களைச் செய்யத்தாம்) முயற்சி செய்யாதிருந்தும், முயற்று இன்மையாலே- (தாம் அவ்வாறு) முயற்சி செய்யாமையால், ஊழ்திறத்த - ஊழ் வினைப் பகுதிகள், உயல் ஆகா - தப்பமாட்டா, என்றூர் - என்று கருதார்.

(க - து.) எல்லாம் ஊழ்வினைப்படி யாகும் என்று கருதி அறிஞர் வாளாவிருந்து முயற்சிசெய்யாதிரார்.

முயற்சியால் ஊழையும் வெல்லலாமென இதற்கடுத்த செய்யுளில் ஆசிரியர் கூறுகிறூர்.

முயற்று, உயல் இரண்டுந் தொழிற் பெயர்கள். முயல் பகுதி று விகுதி. உயல் - வினையடிப் பகுபத வினைப்பெயர்.

ஊற்றம் - ஊற்று என்ற பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர்; அசைவின்றி நிற்குந் தன்மை. முகத்து - முகம் என்பது ஏழாம் வேற்றுமைக்கண் முகத்து என நின்றது.

"ஊற்ற மிறுவிளக்கம்" என்ற பாடங்கொண்டு, அசைவின்றி நிற்றலை ஒழிந்த விளக்கினை எஃறுரைப்பாரு முளர்.

எல்லாம் ஊழ்வினைப்(விதிப்)படி நடக்கும் என்றெண்ணி ஒரு வகையிலும் முயற்சிசெய்யாதிருக்கார் அறிஞர். "முயற்சி யுடையோர் இகழ்ச்சியடையார்" ஆகையால் 'ஊக்கமது கைவிடேல்' (௫௦)

## முயற்சியால் விதியையும் வெல்லல்

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி.

(இ - ள்.) உலையா முயற்சி - இளைத்தலில்லாத முயற்சி யையே, களைகண் ஆக - பற்றுக்கோடாகக் கொண்டு, ஊழின்வலி- போகு ஊழினது வலிமையை, சிந்தும் - சிதைக்கின்ற, வன்மையும் உண்டே - வலிமையுமுண்டு, உலகறிய - உலகமறிய, பால் முளை தின்று - ஊழ்வினையின் முளையைத் தின்று, மறலி உயிர்குடித்த - இயமனது உயிரையும் குடித்த, கான்முளையே - மார்க்கண்டன் என்னும் சிறுவனே, கரி - சான்றாகும்.

(க - து.) இளைத்தலில்லா முயற்சியால் ஊழையும் வெல்ல லாம்.

உடையான் வினையை உடைமையிலேற்றி உலையா முயற்சி எனவும், ஊழ்வினை எங்கிருப்பினும் விடாது தொடரும் என்பது தோன்ற ஊழின்வலியெனவும், ஊழை வெல்லல் அருஞ்செயலாகை யால் வன்மை எனவும், தின்றபின் நீர்குடித்த வியல்பாகையால் முளை தின்று உயிர் குடித்த எனவும், மறலி யுயிர் குடித்தது சிவ பெருமானேயினும் அத்தொழிலிற்குக் காரணமாயிருந்தது மார்க்கண் டேயனாகையால் 'மறலியுயிர் குடித்த கான்முளை' யெனவும் கூறினார். கால் - உவமையாகு பெயர். முளை - முதனிலைத் தொழிலாகு பெயர். உலகு அம் சாரியை பெற்று உலகம் என்றாயிற்று.

போலும் - அசை. உண்டே - ஏ தேற்றம். 'கான்முளையே சாலுங் கரி' என்று பாடங் கொள்வாருமுளர். சாலும் - போது மான.

ஒப்பு நோக்குக.

1. "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்"

2. கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு. —திருக்குறள்

ஊழை முளையாக உருவகஞ் செய்து உயிரை நீராக உரு வகஞ் செய்யாமையின் இஃது ஏகதேசவுருவகவணி. (கூக)

## தெரிந்து முயலுதல்

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து—மேலுந்தாஞ்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

(இ - ள்.) காலம் அறிந்து - (ஒரு காரியத்தைச் செய்தற் குரிய) காலத்தினையும் அறிந்து, இடம் அறிந்து - (அக்காரியத்தைச் செய்து முடித்தற்கேற்ற) இடத்தினையும் அறிந்து, செய்வினையின் மூலம் அறிந்து - செய்யும் அக்காரியத்தின் காரணத்தையும் அறிந்து, விளைவு அறிந்து - அதைச் செய்து முடித்தபின் அதனு லேற்படும் பயனையும் அறிந்து, மேலும் - பின்னும், சூழ்வன தாம் சூழ்ந்து - ஆராயவேண்டியவற்றை ஆராய்ந்து, துணைவலி தெரிந்து - (அக்காரியம் செய்துமுடித்தற்கு) துணைசெய்ய விருப் போர் வலிமையையும் தெரிந்துகொண்டு, ஆள்வினை - முயற்சி ஆளப்படும் - (பின்னர்) செய்யப்படும்.

(க - து.) கருதிய தொழில் முடிக்கக் காலமும் இடமும் சாலப் பொருந்தினுற்றான் அத்தொழிலில் இறங்கல் நன்று.

இச்செய்யுள் மக்கள் யாவர்க்கும் மாண்புடைய நீதி யுடைத் தெனினும் போர்த்தொழில் புரியும் புரவலர்க்கு ஆக்கப்பட்டதென ஐயமின்றிக் கூறலாம். காலமறிதல் - தமக்கும் பகைவர்க்கும் ஆகுங்காலம், ஆகாத காலம் இரண்டையுமறிதல். தமக்கு ஆகுங் காலம் - படைச்செலவுக்குப் போதிய பொருள் இருக்குங் காலம். இடமறிதல் - தமக்கும் பகைவர்க்கும் வெல்லுதற்குத்தக்க இடமும், தகாத இடமும் அறிதல்; வினையின் மூலம் அறிதல் - போர்த்

தொழிலுக்கு வேண்டிய காரணங்களாகிய தேர், யானை, குதிரை காலாட்படை இவற்றின் வலிமையையும், படைத்தலைவர், திறமை யையும், படைக்கு வேண்டிய உணவுப் பொருள்களின் நிலைமையை யும் அறிதல். சிலர் ' வினையின் மூலம் அறிதல் ' என்பதற்குப் போர் செய்யப் புறப்படும் காரணம் நன்றோ தீதோ என்று அறிதல் என்றும் பொருள் கொள்வர். மேலும் சூழ்வன சூழ்தலாவது - போர் செய்யுங்கால் நிகழுமென நினைக்கும் இடுக்கண்களையும், அவ் விடுக்கண்களைக் களையும் வழிகளையும் ஆராய்தல். ஆங்கு, தாம் - அசைச்சொற்கள். சூழ்வன - வினையாலணையும் பெயர். விளைவு - தொழிலாகு பெயர்.

ஒப்பு நோக்குக.

இடத்தொடு பொழுது நாடி யெவ்வினைக் கண்ணு மஞ்சார்
மடப்பட லின்றிச்சூழு மதிவல்லார்க் கரியதுண்டோ
தடத்திடைக் காக்கையொன்றே யாயிரங் கோடிகூகை
இடத்திடை யழுங்கச் சென்றங் கின்னுயிர் செகுத்த தன்றே.

—சீவகசிந்தாமணி

பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. —திருக்குறள் (ருஉ)

## கருமங் கண்ணாயினார் செயல்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

(இ - ள்.) கருமமே கண்ணாயினார் - (தாம் தொடங்கிய) காரியத்தை முடிப்பதிலேயே மனங்கொண்டவர், மெய் வருத்தம் பாரார் - (தம்) உடம்பின் வருத்தத்தைக் கவனியார், பசிநோக் கார் - பசியையும் கவனியார், கண் துஞ்சார் - நித்திரை செய்யார், எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார் - யார் தீங்கு செய்தாலும்

அதைப் பொருட்படுத்தார், செவ்வி - காலத்தின், அருமையும் பாரார் - அருமையையும் நோக்கார், அவமதிப்புங் கொள்ளார் (பிறர் செய்யும்) அவமதிப்பையும் கருதார்.

(க - து.) ஒருதொழிலை எவ்விதமும் செய்து முடிக்க வேண்டுமென உறுதி கொண்டவர்கள் தமக்கு வரும் எவ்வித இடையூறுகளையும் பொருட்படுத்தார்.

வருத்தம்—'வருந்து' என்னும் வினையடியாகப் பிறந்த பகுபத வினைப்பெயர்.

கண்டுஞ்சார்—உயர்திணையோடு சார்ந்த அஃறிணைப்பெயர் உயர்திணை முடிபேற்று நின்றது. திணைவழுவமைதி.

கண்ணல்—கருதல். கண்ணுயினார் என்பதற்குக் கண்ணுகக் கொண்டவர் எனலுமாம்.

எவ்வெவர் - எவர்+எவர். பன்மைப் பொருளில் வந்த அடுக்குத்தொடர். எ - பிரிநிலை. செவ்வி - செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைப்பெயர்; இகர விகுதி புணரும் பொழுது ஈறுபோய் மகரம் வகரமாய்த் திரிந்தது.

துருவன் இருண்ட காட்டில் வெயில், பனி, மழை முதலிய வற்றால் உடலுக்கு ஏற்பட்ட மெய்வருத்தம் பாராமலும், பசி நோக்காமலும், கண் துஞ்சாமலும், கொடிய காட்டு விலங்குகளின் தீமையை மேற்கொள்ளாமலும் தன் கருமமே கண்ணுகித் திருமா விடம் என்று மழியா வானுலகப் பதவி பெற்ற கதை இதற்குத் தக்க சான்றாகும். (௫௩)

## சிறுபகை யோம்பல்

சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைபாடுடையர்—நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

(இ - ள்.) பகை சிறிய எனினும் - தம் பகைகள் சிறியனவா யிருப்பினும், ஓம்புதல் - (அவற்றினின்றுந் தம்மைக்) காத்துக் கொள்ளுதலை, தேற்றார் - உணராதவர், பெரிதும் பிழைபாடு உடையர் - மிகவும் பிழையுடையவராவர், ஆழ் கயத்து - ஆழமான கயமாகிய, நீர்நிறை மடுவில் - நீர் நிறைந்த மடுவின்கண், தவளை குதிப்பினும் - தவளை குதித்தாலும், யானை நிழல் - (அம் மடுவில் அவ்வமயம் காணுகின்ற) யானையின் நிழலையும், காண்பது அரிது - காணுதல் அரிதாகிவிடும்.

(க - து.) தம் பகைவர் சிறியவரா யிருப்பினும் அப் பகைவர்க்கு அச்சமின்றி யிருத்தல் தப்பு.

நீர்நிலையோரத்தில் ஓர் யானை நிற்க அதன் நிழல் நீரில் காணப்படுகிறது. அவ்வமயம் ஓர் சிறு தவளை தண்ணீரில் குதிக்கிறது. குதித்தவுடன் நீர் கலங்கி யானையின் நிழல் சிதைவுறுகிறது. தவளையோ யானையினும் எவ்வளவோ சிறிது. அது குதித்தால் நீர்நிலை முற்றும் கவர்ந்து காணப்பட்ட யானைநிழல் சிதைவுறுவதுபோல் சிறிய பகைவரா யிருந்தாலும் அவராலும் கேடுண்டு என்று விளக்கினார் ஆசிரியர்.

கயம், மடு. இரண்டு சொல்லும் குளம் எனப் பொருள்படினும் வடிவில் வேறுபாடுடையவை யாகலான் இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

பாடு—முதனிலை திரிந்த தொழிற்பெயர். காண்பு-பு-விகுதி பெற்ற தொழிற்பெயர். எடுத்துக்காட்டுவமையணி. இச் செய்யுள் பல விகற்பத்தால் வந்த இன்னிசை வெண்பா. ஒப்புநோக்குக.

பஞ்சியின் மெல்லிதேனும் பகைசிறிதென்ன வேண்டா
அஞ்சித்தற் காக்க வேண்டும் அரும்பொரு ளாக.

—சீவகசிந்தாமணி

இளைதாக முள்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த இடத்து. —திருக்குறள்

'சிறு பாம்பெனினும் பெருந்தடி கொண்டடி' என்பது பழமொழி. பூநாகம் சிறிது அதன் விடமோ உயிரையே வாங்கி விடும். ஒரு சிறுவன் நம்மைப்பற்றி ஒரு அவதூறு சொல்வானாயின் உலகம் கேள்விப் பேச்சில் நம்புவதாயிருப்பதால் அவ்வவதூறு அப்படியே பல பேரிடைப் பரவி நமக்கு அநேக பகைவர்களை உண்டாக்கும். ஆகையால், பகை சிறிதெனினும் விட்டிடல் வேண்டா. (௫௬)

## உட்பகையச்சம்

புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை ஒன்றஞ்சிக் காப்ப—அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை.

(இ - ள்.) உலகு அனைத்தும் - உலக முழுமையும், சொல் ஒன்றின் (தமது) ஒரு வார்த்தையினாலே, யாப்பார் - வசப்படுத்தக் கூடிய முனிவர், பல்காலும் - பன்முறையும், காமப்பகை - காமமாகிய உட்பகையை, பரிந்து ஓம்பி - மிகுதியும் வருந்தி, காப்ப - காவல் செய்வார். (அதுபோல் அறிவுடையார்), புறப்பகை - வெளிப் பகை, கோடியின் மிக்குறினும் - கோடிக்கு மேல் அதிகமாய் இருந்தாலும், அஞ்சார் - (அதற்காக) அஞ்சாமல், அகப்பகை - உட்பகை, ஒன்று - ஒன்றேயானாலும், அஞ்சிக் காப்ப - (அதன் துன்பம் பெரிதாகையால்) அதனை அஞ்சிக் காவல்செய்வர்.

(க - து.) வெளிப் பகைவரைக்காட்டினும் உறவுபோற் காட்டி உள்ளாய் நிற்கும் பகைவர்க்கு அஞ்சுதல் அவசியம்.

பகை - பகையுடையார்மேல் நிற்றலின் தொழிலாகு பெயர். மிக்கு - 'செய'வென் எச்சத்திரிபு. அஞ்சார் - வினைமுற்றெச்சம். யாப்பார் - எதிர்கால வினைமுற்றுப் பெயர். அனைத்து - இடைச் சொல்லடியாகப் பிறந்த பெயர். பரிந்தும் - உம்மை தொக்கது.

ஒப்பு நோக்குக.

"வாள்போற் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு.
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள்ளதாங் கேடு." —திருக்குறள்

கூட இருந்து குரல்வளை அறுக்கும் கொடியோரையும், உண்ட வீட்டுக்கு இரண்டகம் செய்யும் ஊதாரிகளையும் உடனே களைக. உறவினரென்று உள்ளதை உள்ளவாறுரைப்பது தப்பு. வெளிக்கு உறவு காட்டி உட்பகைவராய் இருந்து நம் நிலை தெரிந்து வலிமை எளிமை அறிந்து நமக்கே வாள்தீட்டும் வன்னெஞ்சர் உலகிற் பலருளர். (ருஉ)

கூடா நட்பு

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டுங்—கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யேல் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

(இ - ள்.) புண் - புண்ணை, கருவியிட்டு ஆற்றுவார் - கருவியினால் அறுத்து அதனைக் குணப்படுத்துவார்கள்; (அப்படிக்கின்றி) பொதிந்து மூடார் - அதனை மறைத்து மூடிவையார். (அதுபோல்) புறம்நட்டு - வெளிக்கு உறவுகாட்டி, அகம் வேர்ப்பார் - உள்ளே கோபிப்பவரது நச்சுப் பகைமை, நஞ்சுபோலுங் கொடிய பகைமையை, வெளியிட்டு - வெளியாக்கி, வேறு ஆதல் வேண்டும் - நீக்கல்வேண்டும், கழிபெருங் கண்ணோட்டம் - (அத்தகைய வஞ்சகமான பகைவர்பால்) மிகுந்த அன்பு, செய்யேல் - செய்வது தகாது.

(க - து.) வெளிக்கு உறவுகாட்டி உட்பகைமை கொண்டாரிடம் அன்புகாட்டல் தகாது.

கருவியினா லறுத்துக் குணப்படுத்தவேண்டிய புண்ணை மூடி வைத்தால் அது உள்ளே யுடைத்துக் கெடுதி விளைத்தல்போல,

உட்பகையும் வெளியுறவும் உடையவரால் தப்பாமற் கேடுவருமாத லால் அன்னாரின் 'நச்சுப்பகைமை வெளியிட்டு வேறுதல் வேண் டும்' என்றார்.

நட்டு - நள்+ட்+டு. கழிபெரும் - ஒருபொருட் பன்மொழி. நச்சுப்பகைமை - தொழில்பற்றிவந்த உவமைத் தொகை.

அகம் வேர்ப்பார் - உயர்திணையோடு சேர்ந்த அஃறிணை உயர் திணையின் முடிபேற்றது - திணைவழுவமைதி.

செய்யேல் - முன்னிலை ஒருமை ஏவல் எதிர்மறை வினை முற்று. நச்சு - நஞ்சு எனும் மென்றொடர் வன்றொடர் ஆயிற்று.

கண்ணோட்டமாவது தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியன மறுக்கமாட்டாமை. இஃது அவர்கள் சென்றவழி நிகழ்வது.

ஒப்பு நோக்குக.

முக்த்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும். —திருக்குறள்

"உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார் உறவு கல வாமைவேண்டும்" —திருவருட்பா : தெய்வமணிமாலை. (ருசு)

தீநட்பு

நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத்—திட்பமா
நாளுலந்த தன்றே நடுவ னடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

(இ - ள்.) நட்புஇடை - நண்பரிடத்து, குய்யம் வைத்து - வஞ்சகம் செய்தலைக் கொண்டு, எய்யா - (அவர்) அறியாமல், வினை சூழ்ந்து - (அவர்க்குத்) தீங்கு செய்யக் காலம் பார்த்து, வட்கார் திறத்தராய் - (அவர்கட்கு வேறுள்ள) பகைவரோடும் சேர்ந்து கொண்டு, நின்றார்க்கு - நிற்பவர்க்கு. திட்பம் அம் - வலிய. நாள் -

ஆயுட்காலம், உலந்தது அன்று - முடிந்ததில்லை, நடுவன் - இயமன், (நடுவு நிலைமையுடையவனுகையால்) நடுவு இன்மை - (அத்தகைய வஞ்சகரின்) நடுவு நிலைமையில்லாத தீச்செயல்களை, மறந்து - நினையாமல், வாளா கிடப்பன் - சும்மா இருப்பன்.

(க - து.) நண்பர்போல் நடித்து நண்பர்க்கு வஞ்சகம் செய்வார் இயமன் நினைவிற்கு அகப்படுமட்டும் உயிரோடிருப்பர்.

இயமன் நடுநிலையுடையோனுதலால் நடுவன் எனக் கூறினுர்; தன்னிலைபோல் பிறரையும் எண்ணுவனுகையால் 'நடுவின்மை வாளா கிடப்பன் மறந்து' என்று கூறினுர்.

திட்பம் - பண்புப் பெயர். வாளா - இடைச்சொல்; எய்யா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; அறியாத.

ஒப்பு நோக்குக.

கனவினு மின்னுது மன்னே வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு. —திருக்குறள்

நண்பர்போல் நடித்து நண்பர்க்கு வஞ்சகம் செய்வார் அதிசீக்கிரம் கேடுறுவர். மனேன்மணீயத்தில் ஜீவக வழுதிக்கு நன்மை செய்வதுபோல் புறம்பே நடித்துச் சேர அரசன் புருஷோத்தமன் பால் இரகசியமாய் ஜீவகனின் படைப்பலங்களைத் தெரிவித்து ஜீவகனுக்குக் கேடு தேடிய குடிலனெனும் அமைச்சன் இறுதியில் சிறைப்பட்டது தக்க சான்ருகும். (ருஎ)

மனநலத்துக்கான செயல்

மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தீயவே யாகும்—எனைத்துணையுந்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்.

(இ - ள்.) கறுப்பு மனத்த எனின் நல்ல செயினும் - ஒருவன்மேல் சினங்கொண்டார் ஒருவர்க்கு அவன் அவருக்கு நல்லவற்றையே செய்தாலும், அனைத்து எவையும் - (அவருக்கு) அவை

யாவும், தீயவே ஆகும் - தீச்செயல்களாகவே காணப்படும், மாசு இல் மனத்தினவர் - களங்கமில்லாத மனமுடையவர்க்கு எனைத் துணையும் - எவ்வளவுதாம், தீயவே செய்யினும் - பிறர் தமக்குத் தீச் செயல்களையே செய்தாலும், நல்லவாக் காண்பவே - அவை யெல்லாவற்றையும் அவர்கள் நற்செயல்களாகவே நினைத்துக் கொள்ளுவார்கள்.

(க - து.) கோபங்கொண்ட மனமுடையவர்கள்பால் எத்தனை நல்ல காரியஞ் செய்தாலும் அவர்களை மகிழ்வித்தல் அரிது. "கறுப்பு மனத்த" என்றது உயர்வுபற்றி ஒருமை பன்மையாயிற்று. கறுப்பு-கோபமாகிய குறிப்புணர்த்துஞ் சொல். "கருப்புஞ் செவப்பும் வெகுளிப் பொருள" என்பது தொல்காப்பியம். கறுப்பு-கறை. மனத்தினவர் - எழுவாய்; காண்ப - பயனிலை. எனை - எத்தனை யென்பதன் மரூஉ. மாசு - வெகுளி, பொறாமை அவா முதலியன.

ஒப்பு நோக்குக.

> வாரம் பட்டுழி நல்லவுந் தீயவாந்
> தீரக் காய்ந்துழித் தீயவும் நல்லவாம்
> ஓரும் வையத் தியற்கையன் றேவெனு
> வீர வேனெடுங் கண்ணி விளம்பினாள். —சீவக சிந்தாமணி

ஒருவர் மனம் எப்படியோ அதன்படியே அவர் எண்ணமு மிருக்குமாகையால், இச்செய்யுளில் மனத்தாலான பயன் கூறப்பட்டது. நன்மனமுடையோர் யார் என்ன செய்தாலும் அவர்கள் அதில் குற்றங்காணாது குணமே காண்பர். தீயமனத்தினர் நல்ல செயினும் நன்றென உணரார். (ருஅ)

## இனியவர் வன்சொல்லும் இனிதே

இன்னாதவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே—யனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும்.

(இ - ள்.) அனல் கொளுந்தும் - தீப்போலச் சுடும், வெங்காரம் - வெங்காரமானது வெய்தெனினும் - வெம்மை கொடுப்பதாய்க் காணப்படினும், நோய் தீர்க்கும் - நோயினை நீக்கிச் சுகமாகிய குளிர்ச்சியைத் தரும்; சிங்கி - நஞ்சானது, மெய்பொடிப்ப - உடல் புளகம் கொள்ளும்படியாக, குளிர்ந்தும் கொலும் - குளிர்ச்சியைக் கொடுத்தாலும் பின்னர் கொன்றுவிடும். (அதுபோல) இனியவர் - நல்லோர், என் சொலினும் - என்ன சொன்னபோதிலும் (அதாவது, கேட்பவர்க்கு விருப்பமில்லாத சொற்களைச் சொன்னபோதிலும்), இன்சொல்லே - அவை யாவும் (பின் நன்மையே விளைக்குமாதலால்) இனிய சொற்களாகவேயாகும், இன்னார் - தீயவருடைய, கனியும் மொழியும் - கனிந்த சொல்லும், கடுவே - (பின் தீமையே விளைக்குமாதலால்) நஞ்சேயாகும்.

(க - து.) நல்லோர் வன்சொல்லும் இன்சொல்லே, அல்லார் இன்சொல்லும் வன்சொல்லே.

வெறுஞ்சொற்களை மட்டும் கவனியாது அவற்றின் குணங் குற்றங்களை ஆராய்தல் இன்றியமையாதது என்பதால், வாக்கினாலாய பயன் இங்குக் கூறப்பட்டது காண்க.

இன்னார் - 'இன்னாமை' எனும் பண்புச் சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர். இனிமை - பகுதி. ஆர் விகுதி. "ஈறுபோதல்......இனையவும் பண்பிற்கியல்பே" என்னும் நன்னூல் விதிப்படி இகரங்கெட்டு, தன்னொற்று இரட்டித்து இன்னார் என்றாயிற்று. கனிதல் - செவிக் கினிமையாதலால்.

கனியும் - பெயரெச்சம். கனியும் மொழியும் - இழிவு சிறப்பு. வெய்து - வெம்மையின் திரிபு. வெங்காரம் உப்புவகை. பொடிப்ப - 'செய' எனும் வாய்பாட்டு வினையெச்சம். கொளுந்தும் - கொளுந்து என்ற வினையடியாகப் பிறந்த எதிர்காலப் பெயரெச்சம். இச்செய்யுள் எடுத்துக்காட்டுவமையணி.

ஒப்பு நோக்குக.

மாசற்ற நெஞ்சுடையார் வன்சொலினி தேனையவர்
பேசுற்ற இன்சொல் பிறிதென்க. —நன்னெறி

நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும். —திருக்குறள் (கூக)

நல்லாறு

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கு
மெய்தாமை சொல்லின் வழுக்காது—மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல்.

(இ - ள்.) சொல்லின் - தாம் பேசும் சொல்லில், பொய் - பொய்யும், குறளை - புறங்கூறலும், வன்சொல் - கடுஞ்சொல்லும், பயனில - பயனில்சொல்கூறலும், என்ற - இவ்வாறான, இந்நான்கும் - இந்த நான்கு குற்றங்களும், எய்தாமை - வராமல், மெய்யில் - வாய்மையினின்றும், வழுக்காது - தவறாது, புலமைந்துங் காத்து - ஐம்புலன்களையும் அடக்கியாண்டு, மனம் மாசு அகற்றும் - மனக் குற்றங்களை நீக்கும், நலம் அன்றே - நற்செயலல்லவா, நல் ஆறு - நன்னெறி, எனல் - என்று சொல்லத்தகும்?

(க - து.) மனம், வாக்கு, காயங்களில் குற்றமில்லாதிருப்பதே உயிர்க்குறுதி பயக்கும் நன்னெறி என்பது.

“மனமாசகற்றல்”—மனக்குற்றமொழிதல். மனக்குற்றங்கள் காமம் வெகுளி மயக்கம்.

“சொல்லின் பொய், குறளை, வன்சொல், பயனில என்றிந் நான்கும் எய்தாமை”—வாக்குக்குற்ற மொழித்தல்; பொய் குறளை வன்சொல் பயனில பெயர்ச்செவ்வெண்: மெய்யில், புலமைந்துங் காத்தல் - காயக்குற்ற மொழித்தல். குறளையாவது, ஒருவர் இல்லாத இடத்தில் அவரைப்பற்றி இகழ்ச்சியாய்க் கூறுதலும், உறவினால் அறிந்த இரகசியங்களை நண்பன்மேல் வெறுப்புவந்ததால்

வெளியிடுவதும். மெய்யில் புலம் ஐந்து என்பதற்கு உடம்பிலுள் ஐம்பொறிகளுக்கு முரிய புலன்கள் ஐந்தினையும் என்பாரும் உளர்.

எய்தாமை, வழுக்காது-எதிர்மறை வினையெச்சங்கள். எனல்-வியங்கோள் வினைமுற்று. (சூ0)

ஒப்பு நோக்குக.

அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொ னான்கு
மிழுக்கா வியன்ற தறம். —திருக்குறள்

நல்லா ரல்லன செய்யார்

நல்லா ரொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்து
மல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னாவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

(இ - ள்.) பல்பொறிய - பல புள்ளிகளையும், செம்கண் - சிவந்த கண்களையுமுடைய, புலி ஏறு - புலியேறானது, அறப்பசித்தும் - மிகுந்த பசி வந்தகாலத்தும், பைங்கண் - பசுமையான இடத்திலிருக்கும், புனத்த பைங்கூழ் - கொல்லைப் பயிர்களை, தின்னாஆம் - தின்னமாட்டா; (அதுபோல்); நல் ஆறு ஒழுக்கின் தலை நின்றார் - நன்னெறி நல்லொழுக்கத்தின்கண் நின்றவர்கள், நல் கூர்ந்தும் - வறுமைப்பட்ட காலத்திலும், அல்லன செய்தற்கு ஒருப் படார் - நீதியல்லாதவற்றைச் செய்ய உடன்படார்.

(க - து.) நல்லொழுக்கமுடையவர்கள் வறுமை வந்தகாலத்தும் தீச்செயல் புரிய விரும்பார்.

நல் ஆறு என்பது முன்செய்யுளிற் கூறப்பட்ட மனம், வாக்கு, காயங்களாலாகிய குற்றங்கள் ஒழிதல். அல்லன - திருட்டு, வஞ்சனை, பொய், கொலை, முதலியவை. ஒருப்படார்—ஒருமைப்படார் என்பது விகாரமுற்று ஒருப்படார் என்றாயிற்று; எதிர்மறை வினைமுற்று.

செங்கண் - செம்மை + கண் ; ஈறுபோதல்......இனையவும் பண்பிற்கியல்பே ' என்னும் நன்னூல் விதிப்படி பண்புப் புணர்ச்சியில் ' செங்கண் ' என்றாயிற்று, புலிஏறு - ஆண் புலி. ஏறு சிறப்பு மொழி.

ஒப்பு நோக்குக.

மெய்த்திரு தவம் வீரம் படைக்கினும்
எத்திறத் திட ரெய்திய ராயினும்
உத்தமக் குல மேன்மை யொழுக்கமார்
தத்த நீதி பிழைப்பர்கொல் சால்புளோர். —சேதுபுராணம்

' புலி பசித்தாலும் புல்லைத் தின்னாது ' —பழமொழி

இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர். —திருக்குறள் (உகூ)

முதன்மையாக ஓம்பவேண்டியவை

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளும் திருவுந்—தவம்விற்றுங்
கூனோம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்ப தூஉந்
தாமோம்பிக் காத்த றலை.

(இ - ள்.) குலம் விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் - (ஒருவன்) தன் குலத்தை விற்றுத் தேடும் பொருளும், வாய்மை நலம் விற்றுக்கொள்ளும் திருவும் - உண்மை எனும் நற்பொருளை விற்று (அதாவது, பொய் புகன்று) பெறும் செல்வமும், தவம் விற்று ஊன் ஓம்பும் வாழ்வும் - (தான்கொண்ட) விரதத்தை விற்றுத் தன் உடலைப் பாதுகாக்கும் வாழ்க்கையும், உரிமைவிற்று உண்பதூஉம் - தன் முன்னோர் தனக்களித்த உரிமைகளை விற்று உண்ணுதலும் (ஆகிய இவை யாவும் தன்னை வந்தடையாமல்) தான் ஓம்பிக்காத்தல் தான் மறவாமல் காப்பது, தலை - (எல்லாவறங்களுள்ளும்) தலைமையான அறமாகும்.

(க - து.) மிகுந்த பொருள் கிடைக்குமென்றெண்ணி ஒருவன் தன் குலம், வாய்மை தவம் உரிமை ஆகியவற்றைக் கைவிடல் தகாது.

வறுமையாயிருப்பதால் தன் குலமல்லாது வேறோர் இழி குலத்திலுள்ள பொருள் மிகுந்த ஒருவனுக்குத் தன் மகளை மணம் செய்தால் தனக்கு யாதுங் குறைவில்லை என்றெண்ணியாவது, நீதி மன்றத்தில் பொய்ச்சான்று புகன்றாவது, தான் கொண்ட விரதத்தைத் தவறவிட்டாவது, தன் முன்னோர் தனக்களித்துப்போன உரிமைகளை விற்றாவது பொருள் தேடுவது அறமாகாதெனா இங்குக் கூறப்பட்டது. குலம் விற்றல் பொருள்வேண்டிக் குலத்திற்குரிய ஒழுக்கம், பெருமை முதலியவைகளைவிட்டு வேறோர் இழிகுலப் பற்றுடைத்தாதல். வாய்மை நலம் விற்றல் - பொருள்வேண்டிப் பொய்புகலல், பொய்ச்சான்று கூறுதல், தவம்விற்றல் - பொருள் வேண்டிக் கூடா வொழுக்கம், தீமை, களவு முதலிய நற்றவத்திற் கேலாதன செய்தல். உரிமை விற்றல் - பொருள்வேண்டிப் பிறனுக் கடிமையாதல். வெறுக்கை - பொருளுடையார்க் கெப்போதும் உயிர்ப்பயமே யாகையால் அறிஞர் அதனை வெறுப்பர் எனுங் காரணம்பற்றிப் பொருளுக்கு வெறுக்கை என்று பெயர். ஊன்-காரியமாகிய உடம்பிற்காதலால்; காரணவாகுபெயர். உரிமை - உரித்தாதல் - தொழிலாகு பெயர். தலை - பண்பாகு பெயர். வாழ்வு - செல்வம், வாழ்வதற்குக் காரணமாவது. ஆங்கு - அசை. (௬௨)

## வஞ்சகர் செல்வம்

இடைதெரிந் தச்சுறுத்து வஞ்சித் தெளியார்
உடைமைகொண் டேமாப்பார் செல்வம்-மடநல்லார்
பொம்மன் முலைபோற் பருத்திடினு மற்றவர்
நுண்ணிடைபோற் றேய்ந்து விடும்.

(இ - ள்.) இடைதெரிந்து - காலத்தின் வாய்ப்பறிந்து, அச்சுறுத்து - பயமுறுத்தியும், வஞ்சித்து - ஏமாற்றியும், எளியார்

உடைமைகொண்டு - எளியவர்களுடைய பொருளைக் கவர்ந்து, ஏமாப்பார் - இறுமாப்புக் கொள்பவர்களுடைய, செல்வம் - செல்வமானது, மடம் நல்லார் பொம்மன் முலைபோற் பருத்திடினும் - பேதமையுடைய பெண்களின் பூரித்த முலைபோல் அதிகரித்திட்டாலும், (அவை அதிவிரைவில்) அவர் நுண்ணிடைபோல் தேய்ந்துவிடும் - அப்பெண்களுடைய சிற்றிடைபோல் குறைந்து போகும்.

(க - து) ஒருவரை வஞ்சித்துத் தேடிய பொருள் வளர்வதுபோற் றோன்றினும் அதிவிரைவில் அஃது அழிந்துவிடும்.

பெண்களின் பருத்த முலையையும் சிறுத்த இடையையும் முறையே செல்வ வளர்ச்சிக்கும் அழிவுக்கும் ஒப்புக்காட்டிய ஆசிரியர் நுண்ணறிவு வியக்கத்தக்கது. மடமை - பெண்களின் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களில் ஒன்று; அஃதாவது, அறியாமை. அச்சு - 'அஞ்சு' எனும் மென்றொடர் வன்றொடராய் விகாரப்பட்டுவந்த தொழிற் பெயர்.

ஏமாப்பார் - ஏமம் + யாப்பார் - ஏமாப்பார் என விகாரப்பட்டு நின்றது. ஏமாப்பார் - களிப்பார் எனலுமாம்; பொம்மல் - வினைப் பெயர். நுண்மை + இடை = நுண்ணிடை பண்புப்புணர்ச்சி. (௬௬)

பெற்றதைவிட்டுப் பெறாததை விரும்பல்

பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளுஞ்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா—முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

(இ - ள்.) வரவர வாய்மடுத்து - கிடைக்கக் கிடைக்கத் தன் வாயினுள்ளடக்கி, வல்விராய் முற்றும் மாய - பெரிய விறகுகள் முழுதும் எரிந்தழிய, எரிதழல் - எரிகின்ற தீயும், மாயாதிரா - அழியாது போவதில்லை; (அழிந்தேபோகும்); (அதுபோல்); பெற்ற - கிடைத்தபொருள், சிறுக - போதாதென்று, பெறாத - கிடைக்காத பொருளை (இச்சித்து), பெரிதுள்ளும் - அப்பொருளைப் பெரிதாகக்

கருதும், சிற்றுயிர்க்கு - குறுகிய வாழ்நாளையுடைய உயிர்களுக்கு, ஆக்கம் அரிது - (தான் இயற்கையாகவே பெற்றிருக்கும்) செல்வத்தாலான பயன் ஒருபோதும் கிட்டாது.

(க - து.) பெற்ற பொருள் போதுமென மகிழ்ச்சி கொள்ளாது பேராசைகொண்டு பெரும்பொருள் விரும்புவார் பெற்ற பொருளாலான பயனையும் அடையார்.

'போதுமென்ற மனமே பொன்செயு மருந்து' எனும் பழமொழி இங்கு நோக்கற்பாலது.

பெற்ற, பெறுத - இரண்டும் வினையாலணையும் பெயர்கள். விறகு போடப்போடத் தீயும் அவற்றைப் பற்றிக் கொழுந்துவிட்டெரியும்; மேல், விறகில்லையேல் எரிந்த விறகில் தங்கிய தீ அப்படியே நிற்காது சிறிது நேரத்தில் அவிந்துபோகும்; மேலும் மேலும் விறகுக் காசைப்படும் தீ விறகு கிடைக்காவிடில் கிடைத்த விறகை எரித்தமட்டிலேனும் வெகுநேரம் நிற்காமல் அவிந்து போவதுபோல், கிடைத்த பொருளை வைத்து மகிழாமல் மென்மேலும் பொருளுக்கு ஆசைப்படுவார் கிடைத்த பொருளின் பயனையும் அடையமாட்டார் என விளங்குகிறது. இஃது உவமையணி. ()

## அறத்தாற்றிற் பொருளீட்டல்

தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டிற் றாளூன்றி—எய்த்து
மறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

(இ - ள்.) தத்தம் நிலைக்கும் குடிமைக்கும் தப்பாமே - தத்தமக்குரிய நிலைமையிலும் குல வொழுக்கத்திலும் வழுவாது, ஒத்த கடப்பாட்டில் தாள்ஊன்றி - இயைந்த முறையில் முயற்சி செய்து, எய்த்தும் - மறந்தும், அறம்கடையில் செல்லார் - பாவ நெறியிற் செல்லாமல், பிறன் பொருளும் வெஃகார் - பிறனுடைய

பொருளையும் விரும்பாதவருடைய, புறங்கடையது - தலைவாயி லிடத்தே, பொருள் ஆகும் - பொருள் தானே வந்து கூடும்.

(க - து.) தீய வழிகளிலல்லாது தமது நிலைமைக்கும் குடி மைக்கும் பொருந்திய நல்வழியிற் பொருள் தேடுவார்க்குப் பொருள் அதிவிரைவிற் கைகூடும்.

தன் குலவொழுக்கத்திற்கு மாறான தீச்செயல் புரிதல் பாவ மாகையால் அறங்கடையிற் செல்லலாகாதென்றும், பிறன் பொருள் விரும்பில் தன் பொருளுங் கேடுறுமாகையால் பிறன் பொருளும் வெஃகலாகா தென்றும் கூறினார். இவ்வாறு குல வொழுக்கங் குன்றாமலும் பிறன் பொருள்மேல் ஆசை வையாம லும் தம் முயற்சியால் பொருள் தேடுவார்க்கு அவர் அறநெறி கண்டு அகமகிழ்ச்சி கொள்ளும் அறக்கடவுள் அன்னார் புறங்கடை யில் சீக்கிரத்திற் பொருள் குவிப்பார் என நன்னெறியில் முயற்சி யால் பொருளீட்டும் பெருமையை ஆசிரியர் புகழ்ந்தனர்.

செல்லார், வெஃகார்—வினையாலணையும் பெயர்கள்; இவற் றில் எதிர்மறை ஆகார இடைநிலை புணர்ந்து கெட்டது. நிலை யாவது, தம்மிடத்தே நிற்றலுடையனவாகிய பொருள் வலி, ஆண்மை, துணை முதலாயின. தாம்தாம் என்பது தத்தம் என்றாயிற்று. (கூ)

## செல்வவகை

பொதுமகளே போலுந் தலையாயார் செல்வங்
குலமகளே யேனையோர் செல்வங்—கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம் பயன்படுவ தில்.

(இ - ள்.) தலையாயார் - தலையாயாருடைய, செல்வம் - பொருள், பொதுமகளே போலும் - பொதுமகளிரைப்போல எல்லார்க்கும் பயன்படும், ஏனையோர் - இடையாயினாது, செல் வம் - பொருள், குலமகளே - குலமகளைப்போலத் தன்னை யுடை

யோர்க்கே பயன்படும், கடையாயார் - கடையாயினோரது, செல்வம் - பொருள், கலனழிந்த கைமையார் பெண்மை நலம் போல் - மங்கல நாணிழந்த விதவையரின் நலம்போல, பயன் படுவது இல் - யார்க்கும் பயன்படாது.

(க - து.) உத்தமர் தம்மிடமுள்ள பொருளைத் தாம் அனுபவிப்பதுபோல் பிறரும் அனுபவிக்க, மத்திமர் தம் பொருளைத் தாமே யனுபவிக்க விரும்புவர்; அதமர் பொருள் அவருக்கும் பயன்படாது அடுத்தார்க்கும் பயன்படாது. இதனால், பலர்க்குப் பயன்படும் உத்தமர் செல்வம் சிறந்ததாகும் என்பது தெளிவு.

பொதுமகள், குலமகள், கைம்பெண் இவர்கள் நலத்தை வைத்து உத்தம, மத்திம, அதமர் பொருளின் பயனை விளக்கிய ஆசிரியர் நுண்ணறிவு இவண் வியக்கற்பாலதன்றோ !

படுவது - இடைநிலை பெற்ற தொழிற்பெயர்; படு பகுதி, வ் எதிர்கால இடைநிலை, அ. சாரியை, து - விகுதி. போல்வ என்ற பாடமும் உண்டு. (௬௬)

ஈயாதார் செல்வம்

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல—கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான்.

(இ - ள்.) வள்ளன்மை இல்லாதான் - ஈயுங் குணமில்லாதான், செல்வத்தின் - செல்வத்தை விட, மற்றையோன் - ஈயுங் குணமுடையவனுடைய, நல்குரவே - வறுமையே, நனிநல்ல - மிகவும் நல்லது; (ஏனெனில், அவ்வறியன் உயிர்களிடம்) அருள் இலன் (என்று) - கருணையில்லாதவன் என்றுவது, அன்பிலன் (என்று) - அன்பிலாதவ னென்றுவது, கண்ணறையன் என்று - கண்ணோட்ட மில்லாதவ னென்றுவது, பலரால் - பலராலும், கொன்னே - வீணில், இகழப்படான் - நிந்திக்கப்படமாட்டான்.

(க - து.) ஈயாத செல்வர் உலகினரால் நிந்திக்கப்படுவர்; ஈயும் வறியர் யாவராலும் புகழப்படுவர்.

'ஈயாத செல்வர் இருந்தென்ன போயென்ன' எனும் இழிவு மொழி இங்கு நோக்கற்பாலது. வள்ளன்மை - ஈயுங் குணம்; வள்ளல் - பண்புப் பெயர்; வண்மை பகுதி; ஈறு கெட்டது; ல் சந்தி. அல் - விகுதி; பண்பு ஆகுபெயராய் வள்ளற்றன்மையுடைய மனிதன் மேல் நின்றது. வள்ளன்மையில்லாதான் - திணைவழுவமைதி. போலும் - அசை. கண்ணறையன் - கண்ணோட்டம் அற்றவன்; கண்ணறை என்பதில் ஐ வினைமுதற்பொருண்மை விகுதி. கொடையில்லாதவன் இகழப்படுவான் என்பதனால் கொடையாளி புகழப்படுவான் என உய்த்துணரவைப்பது மாறுபடு புகழ்நிலையணி. 'என்று' - அருளிலன் அன்பிலன் என்றவற்றோடு உரையில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. (கூஎ)

ஈகையின் இன்சொலினிது

ஈகை யரிதெனினு மின்சொலினு நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்பூட் டிடப்படின்மற்
றுவா விவரென்செய் வார்.

(இ - ள்.) ஈகை அரிது எனினும் - தாம் ஒருவர்க்குக் கொடுத்தல் முடியாதெனினும், இன்சொலினும் - இனிய மொழிகளைக் கூறுதலினும், நல்கூர்தல் - வறுமையடைதல், ஓகோ கொடிது கொடிது - ஐயோ, மிகவுங் கொடுமையே, தீவினைக் கம்மியனால் - பாவமாகிய கம்மாளனால், நா கொன்று - பேச முடியாதபடி நாவைச் சிதைத்து, வாய் பூட்டிடப்படின் - வாய் பூட்டப்பட்டால், இவர் - இவர்கள், ஆ - ஐயோ, என் செய்வார் - யாது செய்ய முடியும்?

(க - து.) ஒருவரால் ஒருவர்க்கு ஒன்றும் ஈயத்திறனில்லாது போயினும், இன்சொல்லும் இல்லாமற் போனால் அது பெரும்பாவமாகும்.

இதுமுதல் மூன்று செய்யுள்கள் வாக்கினாலான பயனை விளக்கும். ஒகோ, ஆஆ, அம்மா - இவை வியப்பிடைச் சொற்கள்; இரக்கப் பொருளுமாம். ஈகை - தொழிற் பெயர்; தீவினை கம்மியனாக உருவகிக்கப்பட்டது. கம் - தொழில். கொடிது கொடிது - அடுக்குத் தொடர். ஆ ஆ - புகழ்வது போல் தோன்றித் தீவினை காட்டிநிற்றலால் இலேசவணியாகும். (சுஅ)

சொல்வன்மைப் பயன்

சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

(இ - ள்.) சொல்வன்மை உண்டெனின் - தன் சொல்லைக் கேட்கும் ஒருவன் அதன்படி நடப்பான் என்னும் தன் சொல்லின் திறனறிந்திருந்தால், கொன்னேவிடுத்து ஒழிதல் - அவ்வாறான சொற்றிறனைப் பயன்படுத்தாது வீணாகக் கைவிடுதல், நல்வினை - நற்காரியங்களுக்கு, கோறலின் வேறல்ல - கேடு செய்தலினும் வேறாகா, வாக்கின் பயன் கொள்வார் - சொன்வன்மையாற் பெறப்படும் பயனையறிந்தோர், வல்லை - விரைவில், தம் ஆக்கம் கெடுவது உளது எனினும் - தமது பொருளெல்லாம் கெட்டொழியுமாயினும் அஞ்சுபவோ - அதற்காகப் பயப்படுவாரோ ? (பயப்படார்).

(க - து.) சொல்வன்மையாற் பெறப்படும் பயனையறிந்தோர் அப்பயனடைவான் வேண்டிச் சொல்வன்மையாற் செயக் கூடிய நன்மைகளை விரைவில் செய்வர்.

சொல்வன்மையாவது - தம் சொல்லுக்குப் பிறர் மதிப்பளிப்பது. தம் சொல்லால் பயனுண்டென்று தம்மை நாடித் தம் சொல்லுக்குறையிரக்கும் தம்மிலெளியார்க்கு அன்னார் நலங் கருதித் தம் சொல்வன்மையைப் பயன்படுத்தாதொழிதல் பெரும்பாவம் என்றார் ஆசிரியர். சொல்வன்மையுடைய ஒருவரிடம் ஓர் எளி

யன் போய் அன்னுர் ஒரு சொல் சொன்ஞல் அதனை மதித்துப் பிறிதொருவர் அவ்வெளியனுக்கு வேண்டும் உதவி செய்வர் எனக் கூறி அவன் குறையிரக்கும்போது சொல்வன்மையுடையான் அது செய்ய மறுப்பனுகில் அவன் அப்போதே பெரும்பாவம் செய்தவனுகிருன் என்பது கருத்து.

கோறல் - தொழிற் பெயர்; கொல் என்னும் பகுதி நீண்டது. இன் - நீக்கப்பொருட்டு. வாக்கின் பயன் - மூன்ரும் வேற்றுமையுருபும் பயனும் உடன் ருெக்க தொகை. ஒ - எதிர்மறை.

வாக்கின் பயன்களாவன :—

"அறம்பெரி தறைதல், புறங்கூ ருமை,
வாய்மை, கல்வி, தீமையிற் றிறம்பல்
இன்மொழி யிசைத்தல், வன்மொழி மறுத்தல்"
—ஞானமிர்தக்கட்டளை (சுக)

## சிறுமுயற்சிப் பெரும்பயன்

சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் ருழ்வரோ தாழார்—அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
ஒண்மையிற் றீர்ந்தொழுக லார்.

(இ - ள்.) எண்மையவாயினும் அறன் அல்ல கைவிட்டு - செய்தற்கு எளியனவாயிருப்பினும் அறநெறிக்கொவ்வாத தீச்செயல்களைச் செய்யாதொழிந்து, அரிதெனினும் - செய்தற்கு அரியதாயிருந்தபோதிலும், ஒண்மையின் தீர்ந்து ஒழுகலார் - அறநெறியினின்றும் விலகியொழுகாது செய்து அதன் பயன் அடையும் அறிஞர், சிறு முயற்சி செய்து - சிறிய முயற்சி செய்து, உறுபயன் - அம்முயற்சியால் மிகுந்த பயனை, கொள்ளப் பெறும் எனில் - அடையக்கூடுமாஞல், தாழ்வரோ - அம்முயற்சி செய்யத் தாமதிப்பரோ? தாழார் - தாமதியார்.

(க - து.) செய்தற்கரிய அருஞ்செயல் செய்து பெரும்பயன் பெறும் அறிஞர் சிறு முயற்சியால் பெரும்பயனடைய வழியிருப் பழி அம்முயற்சி செய்யாதிருப்பரோ ? (செய்வர்.)

சிறு முயற்சி - சொல்வன்மையாலேற்படும் பயன் போன்றவை. அம்முயற்சி யார்க்கும் எளிதாதலால் சிறு முயற்சி என்றும், மனம் நல்வழிச் சென்று செய்யும் அறச்செய்கை யார்க்கும் அரிதாகையால் அதை அரிதெனவும் கூறினர். அறனல்ல செயல்கள் - பொய் மொழிதல், புறங்கூறல், கடுஞ்சொற்கூறல், பயனில் சொற்கூறல் முதலியன. ஒண்மை-நன்மை. ''அழகு நன்று மறிவும் ஒண்மை'' - பிங்கலம். எண்மைய - குறிப்புப் பெயரெச்சம். ஒழுகலார் - எதிர் மறை வினையாலணையும் பெயர். எண்மையவாயினும் என்பதற்கு எளிதாகச் செய்து பெரும்பயன் பெறத்தக்கனவாய் வாய்க்குமாயி னும் என்றுரைப்பார், வாயின் என்பது வாய் (நேர்) என்னும் முத னிலைத் தொழிற் பெயரடியாகப் பிறந்த வினையெச்சம் என்பர்.

ஒப்பு நோக்குக.

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
னருமை யுடைய செயல். —திருக்குறள். (எ௰)

## நாகரிக மில்லாதவர்

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னும் —செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

(இ - ள்.) செயக்கடவ அல்லனவும் செய்தும் - செய்தற் கரிய செயல்களையும் செய்து முடிப்போம், என்பார் - (என்று செயலிற் காண்பியாது) சொல்லளவில் நிற்பாரின், நயத்தகு நாகரிகம் என் ஆம் - மேன்மையான முகமன் வார்த்தைகளால் என்ன பயன்? (இச் செய்கை) செயிர்த்துரைப்பின் - ஒருவரைக் கோபித்துச் சொன்னால், நெஞ்சு நோம் என்று - அவர்க்கு மன

வருத்தம் உண்டாகுமென்று, தலை துமிப்பான் தண்ணளிபோல் - அவர் தலையை வெட்டும் கருணைத் திறனுமென்று, எஞ்சாது எடுத்துரைக்கல் பாற்று - கூசாமற் கூறுந் தன்மையதே.

(க - து.) தன்னை வந்தடுத்துத் தன் உதவி விரும்புவானிடம் தான் செய்தற்கரிய காரியங்களையும் செய்து முடிக்க முடியுமென்று சொல்லளவிற் சொல்லிச் செயலில் அங்ஙனம் செய்ய இயலாதான் வெறும் பேச்சு இகழப்படும்.

தன்னாலாகாத விடத்துத் தன்னை வந்தடுத்தோன் பிறனிடம் சென்றேனும் பயன் பெறட்டும் என்று விடாது, தானே அதிகம் செய்துவிடுவதாய்ச் சொல்லி, அவன் பிறனொருவனிடம் அடையும் பயனையும் அடையவிடாது கெடுத்தலால், 'நெஞ்சு நோமென்று தலை துமிப்பான் தண்ணளிபோல்' என்றார்.

கடவ - கடமை என்னும் பண்புச் சொல்லிற் பிறந்த வினையாலணையும் பெயர். செய்தும் - தும் விகுதிபெற்ற தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. மன் - அசைநிலை. நாகரிகம் - முகமன் வார்த்தைகள், மகிழ்ச்சி யுண்டாக்குவதற்குக் காரணமான வார்த்தைகள். நயத்தகு-நயக்கத்தகும் என்பதின் முன்மொழி ஈறு தொகுத்தலாயிற்று. நெஞ்சு - இடவாகுபெயர். தண்ணளி - தண் எதிர்மறையை யுணர்த்தவந்த குறிப்புமொழி. ஒப்புநோக்குக :—

சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல். —திருக்குறள் (எக)

அடக்க மிலாதார

அல்லன செய்யினு மாகுலங் கூழாக் கொண்
டொல்காதார் வாய்விட் டுலம்புப—அல்லால்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செயதாங்
கறிமடம் பூண்டுநிற்பா ரார்.

(இ - ள்.) ஒல்காதார் - அடக்கமில்லாதவர், அல்லன செய்யினும் - (பிறர்க்குப் பயன்படக்கூடிய செயல்கள்) அல்லாதவற்றைச் செய்தாலும், (தாம் பயன்படக்கூடிய செயல்களைச் செய்துவிட்டது போல்) ஆகுலம் கூழ் ஆ கொண்டு - ஆரவாரத்தையே பயனாகக் கொண்டு, வாய்விட்டு உலம்புப - பலாறியத் தஞ் செயல்களைக் கூறி முழங்குவர், பிறர் பிறர் செய்பபோல் செய்தக்க செய்து - எவரேனு மொருவர் பிறர்க்குப் பயன்படும் செயல்கள் செய்து, ஆங்கு - அவ்விடத்தில், அறி மடம் - (தாம் செய்த பயன்படுஞ் செயல்களைத் தாம் நன்குணர்ந்தும் உணராததுபோல்) அறியாமையை, பூண்டு நிற்பர் ஆர் - மேற்கொண்டிருப்பவர் யாவர்?

(க - து.) அடக்கமிலார் அருஞ்செயலொன்று புரியின் அதனை யாவர்க்கு மெடுத்துச் சொல்லி முழங்குவர்.

இச் செய்யுளால் உலகத்தில் அறிந்தும் அறியாதவர்போ லிருக்கும் அடக்க முடையாரைக் காண்டல் அரிது என விளங்குகிறது. தாம் செய்த ஒரு சிறு காரியத்தைப் பெரிதாகத் தம் வாய் கொண்டே முழங்கும் அடக்கமிலார் இவ்வுலகில் அநேகருளர். ஒல்காதார் (அடக்கமிலார்) செய்வது அல்லன (பிறர்க்குப் பயன்படக்கூடாத செயல்கள்).

அறி + மடம்—அறி மடம். அறி = அறிதல். ஆகுலம்—பலராலு மறியப் பட்டுப் பேசுதல். மடம் = அறியாதிருத்தல், பேதமை. 'நிற்பாரா' என்ற பாடங்கொண்டு நிற்கமாட்டார் எனப் பொருளுரைப்பதுமாம். மனம், வாக்கு, காயங்களில் அடக்கமிலார் செய்யுங் காரியங்கள் மற்றவர்க்குப் பயன்படாவாகையால் 'அல்லன செய்யினும்' என்றார். மேலும் அவர்கள் அவ்வாறு பயன்படாக் காரியங்களைச் செய்துவிட்டு வாளா இராது அவர்கள் கருத்திற்கு அவை பயன்படுவனபோற் றோன்றுதலால், தாம் பிறர்க்குப் பயன் படுஞ் செயல்கள் செய்துவிட்டதாய் உலகறிய முழங்குவாராகையால் அவர்கள் அவ்வாறு முழங்குதலை, "ஆகுலங் கூழாக் கொண் டுலம்புப" என்றார். அவ்வாறின்றி அறிஞர் பிறர்க்குப் பயன்படுஞ் செயல்களையே செய்து அவை பிறர்க்குப் பயன்

படுவதை அறிந்துங்கூடத் தம்மைப் புகழாமல் அவற்றையெல்லாம் அறிந்தும் அறியாதவர்போ லிருப்பரென்றும், அக்குணம் அவ் அறிஞர்க்கன்றி அடக்கமிலார்க் கில்லையாதலால் "அல்லால் ஆர்" எனவுங் கூறினர்.

அல்லால் - குறிப்பு வினையெச்சம். உலம்புப - பலர்பால படர்க்கை வினைமுற்று. (எஉ)

## பழி கூறுவோர்

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனுக் கொள்வான்—பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக் கொல்வான்போற்
கைவிதிர்த் தஞ்சப் படும்.

(இ - ள்.) பகையின்று - ஒரு பகையுமில்லாமல், பல்லார் பழியெடுத்தோதி-பலரிடத்துமுள்ள வசைகளை எடுத்துச் சொல்லி, நகையொன்றே - இகழ்தலாகிய தீவினையொன்றையே, நற்பயனுக் கொள்வான் - நற்பயன் என்று கொண்டு திரியும் மூடன், பயமின்று - வேறொரு பயனுமின்றி, மெய்விதிர்ப்புக் காண்பான் - உடலிலேற்படும் நடுக்கமாகிய பயனொன்றைக் காணக் கருதி, கொடிறு உடைத்துக் கொல்வான்போல் - பிறனொருவனுடைய கன்னத்தை உடைத்து வருத்துமியல்புடையானைக் கண்டு பயப்படுதல் போல், கைவிதிர்த்து - (பிறரால்) கைந் நடுக்கத்துடன், அஞ்சப்படும் - அஞ்சப்படுவான்.

(க - ரு.) எக்காரணமுமின்றிப் பிறர்வசை கூறுதலையே தன் தொழிலாகக் கொண்டவனைக் கண்ட அளவிலேயே யாவரு மஞ்சியோடுவர்.

பகையின்று என்பதில் 'இன்று' இன்றி என்னும் எதிர்மறைக் குறிப்பு வினையெச்சத் திரிபு. பயமின்று என்பதில் 'இன்று' எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று. காண்பான் - பான் ஈற்று வினையெச்சம்; காண்பான் காணுதல் என்பார் தொழிற் பெயரொன்றூர்.

மெய்விதிர்ப்பு - வினையடியாகப் பிறந்த பகுபத வினைப்பெயர். கொள்வான், கொல்வான் - இரண்டும் வினையாலணையும் பெயர்கள். கைவிதிர்ப்பு - கைந்நொடித்தலுமாம். இச்செய்யுள் இருவிகற்ப இன்னிசை வெண்பா. (௭௩)

## தெய்வ தண்டனை

தெய்வ முளதென்பார் தீய செயப்புகின்
தெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும்—தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்த மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்.

(இ - ள்.) தெய்வம் உளது என்பார் - தெய்வம் உண்டு என்று சொல்வோர், தீய செயப்புகின்-தீய காரியங்களைச் செய்யத் தலைப்பட்டால், தெய்வமே கண் நின்று ஒறுக்கும் - அவர்கள் நம்பும் அத்தெய்வமே அவர்முன் நின்று அத்தீய காரியங்களுக்காக அவர்களைத் தண்டிக்கும், தெய்வம் இலது என்பார்க்கு இல்லை-தெய்வம் இல்லை என்று சொல்வோர்க்கு அத்தெய்வம் அவ்விதம் தோன்றுவதுமில்லை, அவர்களைத் தண்டித்தலுமில்லை. (இஃது எது போலெனில்) தம் இன்புதல்வர்க்கு அன்றே - (பெற்றோர்) தம் அன்பான புதல்வர்க்கல்லவா, பலகாலும் - (அவர்கள் நன்னெறி தப்பிச்) செல்லுந்தோறும், பயன் சொல்வார் - பயன்தருஞ் சொற்களைச் (நீதிகளை) சொல்வார்கள்?

(க - து.) இறைவனுண்டென்று நம்பினவர்களை மட்டும் இறைவன் தீநெறியினின்றும் தடுப்பன்.

பெற்றோர் தம் அன்பான புதல்வர்க்கு மட்டும் அறநெறி போதிப்பரன்றி அன்பிலாப் புதல்வர்க்கு அவ்விதம் போதியார் போல், இறைவனும் தன்னை நம்பினவர்க்கு மட்டும் நன்னெறி காட்டுவனன்றி நம்பாதார்க்கு அவ்விதம் செய்வதில்லை என்றார்.

பயன் - காரணவாகு பெயர். தெய்வம் சொல்லாலஃறிணையாதலின் அதற்கேற்ற முடிபு கொடுத்தார். 'தம் இன் புதல்வர்க்

கன்றே பலகாலும் சொல்வார் பயன்' என்னும் ஈற்றடியால் முன்னடிகளில் தொடங்கிய கருத்தை முடித்தலால் இது வேற்றுப் பொருள்வைப்பணி. ஒறுக்கும் - வினைமுற்று; ஒறு - பகுதி. (எ௬)

தீயன தீயனவே

தீயசெயற் செய்வா ராக்கம் பெருகினுந்
தீயன தீயனவே வேறல்ல—தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லும் கவயமா போல்.

(இ - ள்.) தீய செயல் செய்வார் ஆக்கம் பெருகினும் - தீய காரியங்களைச் செய்வோரின் பொருள் ஒருகால் பெருகி வளர்ந்தாலும், தீயன - தீய காரியங்களிற் றிரட்டிய அப் பொருள் எல்லாம், நாஇன்புற நக்கிக் கொல்லும் கவயமாபோல் - நாவினால் இன்பமுற நக்கிப் பின்னால் கொல்லுகின்ற காட்டுப் பசுவைப்போல், தீயனவே வேறல்ல - தீமை பயப்பனவேயன்றி வேறொன்றாகா, (எனெனில்) தீயன - தீய காரியங்கள், நல்லன ஆகா - (என்றும்) நற்காரியங்க ளாகமாட்டா.

(க - து.) தீய காரியங்களிற் றிரட்டிய பொருள் தீமையே செய்யும்.

காட்டுப்பசு தான் கொல்ல விரும்பும் ஒரு பிராணியை முதலிலேயே கொல்லாமல், முதலில் நாவினால் அப்பிராணிக்குச் சுகம் தோன்ற நக்கிக்கொண்டே யிருந்து, அச் சுகத்திலீடுபட்டு அப்பிராணி தன்னிலையி லசையாமல் நிற்கையில் திடீரெனப் பாய்ந்து அதன் உயிரை வாங்கும். அதுபோல் தீ நெறியிற் றிரட்டிய பொருள் முதலில் சுகந்தருவதாய்த் தோன்றினும், இறுதியில் தீமையே பயக்கும் என்றார். அது கருதியே அப் பொருள் "தீயனவே, வேறல்ல" என்றும், "தீயன என்றும், நல்லனவாகாவாம்" என்றுங் கூறினார்.

தீய - குறிப்புப் பெயரெச்சம். தீயனவே - பலவின்பாற் குறிப்பு வினைமுற்று. தீயன இரண்டும் குறிப்பு வினைமுற்றுப்

பெயர்கள். கவயமா - இருபெய ரொட்டுப் பண்புத் தொகை; கவயம் - காட்டுப்பசு. தீ தான்பற்றிய பொருளை முற்றும் எரித்தல்போலத் தீய வழியாலீட்டப்பட்ட பொருளும் தற் சேர்ந்தாரை முற்றும் அழித்தலால் தீயன தீயன என்றார்.

ஒப்பு நோக்குக.

இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகு மற்றும் பெயர்த்து. —திருக்குறள். (எரு)

## பழிநாணுவோர்

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயுஞ்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர்—முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில.

(இ - ள்.) தம் முன்னை ஊழ்வலி யுன்னி - முற்பிறப்பிற் செய்த தமது பழைய ஊழின் வலிமையை நினைத்து, பழி நாணி உள் உடைவார் - (வரவிருக்கும்) பழிச் சொற்களுக்கு வெட்கி மனம் வருந்துவோர், சில தீய செயினும் - (ஒரு காலத்தில் புத்தி கெட்டேனும் பிற காரணத்தாலேனும்) சில தீய காரியங்களைச் செய்தாராயினும், (அவர்கள்) நன்மக்கள் - மேன்மக்கள், செம் நா தழும்பு இருக்க - செவ்விய நாவினை (இடைவிடாமற் றம் நன்மையை எடுத்துரைத்தலால்) தழும்பேறியிருக்கும்படி, நாள் வாயும் செந்நெறி செல்வாரில் - தினந்தினம் நல்லொழுக்க வழிகளிலே செல்லும் மேலோரினும், கீழ் அல்லர் - கீழாகார்.

(க - து.) மேன்மக்கள் ஓரோர் காலத்தில் ஊழ்வலியால் நல்லொழுக்கத்தினின்று தவறினும் மேன்மக்கள் என்றும் மேன் மக்களே.

தாம் அறியாமல் ஊழ்வினையால் மதிமயங்கித் தீய காரியங்கள் செய்ய நேர்ந்து அதனால் வரும் பழிக்கு நாணி மனம் வருந்துவோர் ஒருபோதும் தீய காரியங்களைச் செய்யாரென்பர். பழி நாணுவார்

தாம் அறியத் தீய காரியங்களைச் செய்யார். ஊழ்வலியால் மதி மயங்கிச் செய்துவிட்டாலும் அதனாலேற்படும் பழிக்குப் பெரிதும் மனம் வருந்துவர். நாள் வாயும் - 'வாய்' ஏழாம் வேற்றுமை யுருபு. கீழ் - பண்பாகுபெயர்; கீழோரை உணர்த்திற்று. உள் - இடவாகுபெயர்; மனத்தை உணர்த்திற்று. நல்லோர் இடை விடாது புகழ என்பார், 'நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க' என்றார். செந்நா - உண்மையாகிய செம்மையுடைய நா. செல்வா ரில் - இல் ஐந்தனுருபு எல்லைப்பொருட்டு.

ஒப்புநோக்குக.

பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. —திருக்குறள். (எகூ)

## பிறர்மனை நயத்தல்

பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே ஆயினு மாக—சிறுவரையு
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.

(இ - ள்.) பிறன் வரை நின்றாள் - பிறனுடைய ஆணையில் நிற்பவள் (அதாவது பிறன்மனைவி), கடைத்தலைச் சேறல் - தலை வாயினிடத்துச் செல்லல், அறன் அன்றே - நற்செயலாகா, ஆயினும் ஆக - நற்செயல்தான் என்று எண்ணியபோதும், சிறுவரையும் - (அச் செயலில்) கணப்பொழுதாயினும், நல் நலத்தது ஆயினும் - தனக்கு நல்ல இன்பம் இருக்குமாயின், கொள்க - அதைக் கைக்கொள்க, நலம் அன்று - (அச் செயலால் வருவது) இன்பமல்ல, (ஆனால் வருவதென்னையெனின்) மெய்நடுங்க - உடல் நடுங்க, உள் நடுங்கும் நோய் - மனம் நடுங்குதற்குக் காரணமாகிய வருத்தமேயாகும்.

(க - து.) பிறன் மனையாளை விரும்பல் அறனன்று. அப்படி விரும்புவதால் இன்ப மிழத்தலுமன்றி எப்போதும் மனவருத்தமே குடிகொள்ளும்.

பிறன் மனைவியை விரும்பல் அறனல்ல என்பதை வலியுறுத்த, "பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல் அறனன்றே" என்று தேற்ற ஏகாரந் தந்தார். அறன் என்றே கூறுவார் கூறினும், தாம் அறனன்று எனத் துணிவதால் ஆயினும் ஆக என இழிவு சிறப்பும்மை தந்தார். பிறன்மனை புகுவான் புகுங்கால் மெய்ந் நடுங்கிச் செல்வனென்றும், பிறன் மனையிலிருக்கையில் வீட்டுக் குடையோன் கண்டால் என்னவாகுமோ என்று மெய்ந் நடுக்கமுடன் உள் நடுக்கமுங் கொள்வனுகையால், "மெய்ந்நடுங்க உண்ணடுங்கு நோய்" என்றுங் கூறினர். ஆக - வியங்கோள் வினைமுற்று. சேறல் - செல்தல், முதனிலை நீண்ட தொழிற்பெயர். தலைக்கடை - கடைத்தலையாய் மாறி நின்றது இலக்கணப் போலி. சிறுவரையும் - உம் முற்றுப்பொருளொடு இழிவு சிறப்பு. பிறன் மனைவியை விரும்புவானுக்கு எப்போதும் அச்சமே என்பது பின்வரும் நாலடியார் செய்யுளால் விளங்கும்.

"புக்கவிடத் தச்சம், போதரும்போ தச்சம்
துய்க்குமிடத் தச்சம், தோன்றாமற் காப்பச்சம்"

"காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும்."

ஒப்பு நோக்குக.

"பகைபாவம் அச்சம் பழியெனவிந் நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண்" —திருக்குறள் (எள)

நல்லின்பம்

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே—பெரிதுந்தம்
இன்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்த னலம்.

(இ - ள்.) கருமம் சிதையாமே - தாம் செய்யவேண்டிய காரியங்கள் தவறிப் போகாமலும், கல்வி கெடாமே - கற்றுக் கொண்ட கல்வி கெட்டுப் போகாமலும், தருமமுந் தாழ்வு படாமே-

செய்து வரும் அறச் செயல்களுக்குக் குறைவு வராமலும், பெரிதும் - மிகுதியாக, தம் இல் நலமுங் குன்றாமே - தம் இல்லற நன்மையுங் குறைவுபடாமலும், ஏர் இளம் கொம்பு அன்னார் - அழகிய இளங் கொம்பினையொத்த தம்மனைவியரின், நல்நலம் துய்த்தல் நலம் - நல் லின்பத்தை நுகர்தல் நன்று.

(க - ரு.) இல்வாழ்க்கைக்குரிய கருமம் முதலியவைகள் குறையாமல் தம் மனைவியோடு கூடி இன்பம் நுகரவேண்டும்.

கருமமாவது - இல்லறவாழ்க்கைக் கியைந்தான நற்செயல். கல்வி - அறிஞர் எழுதிய அறிவுரைகள் கற்றல். தருமம் - பிரமச் சாரி முதலிய மூவரும் தத்தம் நிலை தவறாது நடக்கச் செய்தல். இல்நலம் - விருந்தினர், சுற்றத்தார் முதலியோரிடங் காட்டும் அன்பு.

முன் செய்யுளில் பிறனில் விழைவதாலேற்படும் துன்பங்களை விளக்கிப் போந்த ஆசிரியர், இச்செய்யுளில் தன்னில்லாளோடு ஒரு வன் இன்ப நுகருங்கால் கவனிக்கவேண்டிய முறைகளை விளக்கி ஞர்.

துய்த்தல் - தொழிற் பெயர். இளங்கொம்பு - இளமை + கொம்பு; பண்புப் புணர்ச்சி; "ஈறு போதல்" விதியைப் பார்க்க. தம் இன்நலம் என்று கொண்டு தமது இனிய தாட்சிணியம் என்று கூறுவாரும் உளர். நன்னலம் - பிறர் மனை விழை யாமையாலேற்படும் நன்மை; அஃதாவது பகை பாவம் அச்சம் பழியில்லாமை. அன்னார் என்றது கற்பாகிய உயர்வுபற்றி. (எஅ)

## காமிகள் செய்கை

கொலையஞ்சார் பொய்க்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார்—பழியொடு
பாவமிஃதென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப் பட்டார்.

(இ - ள்.) காமம் கதுவப்பட்டார் - காமத்தால் பற்றப்பட்டவர்கள், கொலை அஞ்சார் - கொலைபுரியப் பயப்படார்கள், பொய் நாணர் - பொய் சொல்லக் கூசார்கள், மானமும் ஓம்பார் - தம் பெருமையையும் பாதுகாவார்கள், களவு ஒன்றோ - களவு செய்தலொன்றோ! (அதற்கு மேலும்) ஏனையவும் - மற்றுமுள்ள பல விதமான தீச்செயல்களையும், செய்வார் - செய்வார்கள், (அவர்கள்) இஃது - இக்காமம், பழியொடு பாவம் என்னர் - பழியொடு பாவமாமென்றும் நினையார், (அங்ஙனமாயின் அவர்கள்) பிறிது என் செய்யார் - வேறு யாது தான் செய்யமாட்டார்கள்? (எல்லாத் தீச்செயல்களுஞ் செய்வார்).

(க - து.) காமச்சிந்தை யுடையவர்கள் எல்லாத் தீச்செயல்களுஞ் செய்வார்கள்.

'காமங் கதுவப்பட்டார்' - காமம் என்ற விடத்துக்கு அடிமையானர் என்பது பொருள்.

பழி - வினைப்பெயர். செய்வார் - உடன்பாட்டு வினைமுற்று. செய்யார் - உடன்பாட்டில் வந்த எதிர்மறை வினைமுற்று. மற்று- அசைச் சொல். பொய்ங் நாணர் என்பது தனிக்குறிலை யடுத்த யகர வீற்றுமுன் ஙகரம் வந்து இரட்டியது, "குறில் வழிய தனிஐ நொது முன் மெலி மிகலுமாம்" என்ற விதிப்படி.

ஒப்பு நோக்குக.

பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண். —திருக்குறள் (எக)

## தூர்த்தர் இயல்பு

திருவினு நல்லாள் மனைக்கிழத்தி யேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பர்—நறுவிய
வாயினவேனு முமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர்.

(இ - ள்.) நறுவிய - இனிய பொருள்கள், வாயின ஏனும் - (தமது) வாயிலகப்பட்டுள்ளனவாயினும், உமிழ்ந்து - (அவற்றைக்)

(இ - ள்.) கேள் - (தனது) கணவன், எந்து எழில் மிக்கான் - சிறந்த அழகு மிகுந்தவனும், இளையான் - இளமைப் பருவமுடையவனும், இசைவல்லான் - இசை பாடுதலில் வன்மை யுடையவனும், காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - பெண்களின் கண்களைக் கவரும் பார்வையுடையவனும், வாய்ந்த - பொருத்த மான, நயன்உடை இன்சொல்லான் - நல்ல இனிய சொற்களை யுடையவனும், எனினும் - ஆயினும், மாதர்க்கு - (கற்பிலாத) பெண்களுக்கு, மனம் அயலார் மேல் ஆகும் - (இந்நலங்களமையா) வேற்று மனிதர்மேலே மனஞ் செல்லும்.

(க - து.) கற்பிலா மனைவியர் தங்கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவராயிருப்பினும் அவர்களை வெறுத்து அந் நலங்களமையா வேற்று மனிதர்மேல் விருப்பங் கொள்வர்.

எண்பதாவது செய்யுளில் ஆசிரியர் "காமங்கதுவப்பட்டார்" தம் மனைவியர் எவ்வளவு அழகாயிருப்பினும் அவர்களைத் தவிர்த்துப் பிறன் மனைவிமேல் ஆசை கொண்டலைவர் என்பதற்கிணங்க, இச் செய்யுளில் கற்பிலா மங்கையர் தம் கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவராயிருப்பினும் அவர்களை வெறுத்து வேற்று மனிதர்மேல் விருப்பம் கொள்வர் என, 'காமங் கதுவப்பட்ட' ஆணையும் கற்பிலாப் பெண்ணையும் எடுத்துக் கூறினார்.

இசை - தானியாகு பெயர். காந்தையர், மாதர் - ஒருமை யிற் பன்மை வந்த வழுவமைதிகள். இசைக்கு எளிதில் மயங்குவர் மாதர் என்பது, "பாடினான் தேவகீதம் பண்ணினுக் காசான் பாடச் சூடக மகளிர் சேர்ந்து" என்னும் சிந்தாமணியடியால் விளங்கும். இச் செய்யுளுடன் பின்வரும் இரண்டு செய்யுளுஞ் சேர்த்து மூன்று செய்யுளில் ஆசிரியர் கற்பிலா மகளிர் தன்மை கூறுகிறார். (அஉ)

பொது மகளிர்

கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லார்—மற்றுத்தங்

(இ - ள்.) காமம் கதுவப்பட்டார் - காமத்தால் பற்றப்பட்டவர்கள், கொலை அஞ்சார் - கொலைபுரியப் பயப்படார்கள், பொய் நாணார் - பொய் சொல்லக் கூசார்கள், மானமும் ஓம்பார் - தம் பெருமையையும் பாதுகாவார்கள், களவு ஒன்றோ - களவு செய்தலொன்றோ! (அதற்கு மேலும்) ஏனையவும் - மற்றுமுள்ள பல விதமான தீச்செயல்களையும், செய்வார் - செய்வார்கள். (அவர்கள்) இஃது - இக்காமம், பழியொடு பாவம் என்னார் - பழியொடு பாவமாமென்றும் நினையார், (அங்ஙனமாயின் அவர்கள்) பிறிது என் செய்யார் - வேறு யாது தான் செய்யமாட்டார்கள்? (எல்லாத் தீச்செயல்களுஞ் செய்வார்).

(க - து.) காமச்சிந்தை யுடையவர்கள் எல்லாத் தீச்செயல்களுஞ் செய்வார்கள்.

'காமங் கதுவப்பட்டார்' - காமம் என்ற விடத்துக்கு அடிமையானார் என்பது பொருள்.

பழி - வினைப்பெயர். செய்வார் - உடன்பாட்டு வினைமுற்று. செய்யார் - உடன்பாட்டில் வந்த எதிர்மறை வினைமுற்று. மற்று-அசைச் சொல். பொய்ந் நாணார் என்பது தனிக்குறிலை யடுத்த யகர வீற்றுமுன் நகரம் வந்து இரட்டியது, "குறில் வழிய தனிஐ கொது முன் மெலி மிகலுமாம்" என்ற விதிப்படி.

ஒப்பு நோக்குக.

பகைபாவ மச்சம் பழியென நான்கும்
இகவாவா மில்லிறப்பான் கண். —திருக்குறள் (எகூ)

## தூர்த்தர் இயல்பு

திருவினு நல்லாள் மனைக்கிழத்தி யேனும்
பிறர்மனைக்கே பீடழிந்து நிற்பர்—நறுவிய
வாயினவேனு முமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர்.

(இ - ள்.) நறுவிய - இனிய பொருள்கள், வாயின ஏனும் - (தமது) வாயிலகப்பட்டுள்ளனவாயினும், உமிழ்ந்து - (அவற்றைக்)

(இ - ள்.) கேள் - (தனது) கணவன், ஏந்து எழில் மிக்கான் - சிறந்த அழகு மிகுந்தவனும், இளையான் - இளமைப் பருவமுடையவனும், இசைவல்லான் - இசை பாடுதலில் வன்மையுடையவனும், காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - பெண்களின் கண்களைக் கவரும் பார்வையுடையவனும், வாய்ந்த - பொருத்தமான, நயன்உடை இன்சொல்லான் - நல்ல இனிய சொற்களையுடையவனும், எனினும் - ஆயினும், மாதர்க்கு - (கற்பிலாத) பெண்களுக்கு, மனம் அயலார் மேல் ஆகும் - (இந்நலங்களமையா) வேற்று மனிதர்மேலே மனஞ் செல்லும்.

(க - து.) கற்பிலா மனைவியர் தங்கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவராயிருப்பினும் அவர்களை வெறுத்து அந் நலங்களமையா வேற்று மனிதர்மேல் விருப்பங் கொள்வர்.

எண்பதாவது செய்யுளில் ஆசிரியர் "காமங்கதுவப்பட்டார்" தம் மனைவியர் எவ்வளவு அழகாயிருப்பினும் அவர்களைத் தவிர்த்துப் பிறன் மனைவிமேல் ஆசை கொண்டலைவர் என்பதற்கிணங்க, இச் செய்யுளில் கற்பிலா மங்கையர் தம் கணவர் எவ்வளவு நலங்கள் பொருந்தியவராயிருப்பினும் அவர்களை வெறுத்து வேற்று மனிதர்மேல் விருப்பம் கொள்வர் என, 'காமங் கதுவப்பட்ட' ஆணையும் கற்பிலாப் பெண்ணையும் எடுத்துக் கூறினர்.

இசை - தானியாகு பெயர். காந்தையர், மாதர் - ஒருமையிற் பன்மை வந்த வழுவமைதிகள். இசைக்கு எளிதில் மயங்குவர் மாதர் என்பது, "பாடினன் தேவகீதம் பண்ணினுக் காசான் பாடச் சூடக மகளிர் சேர்ந்து" என்னும் சிந்தாமணியடியால் விளங்கும். இச் செய்யுளுடன் பின்வரும் இரண்டு செய்யுளுஞ் சேர்த்து மூன்று செய்யுளில் ஆசிரியர் கற்பிலா மகளிர் தன்மை கூறுகிறார். (அஉ)

போது மகளிர்

கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லார்—மற்றுத்தங்

கேள்வர்க்கு மேதிலார்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார்.

(இ - ள்.) நலம் விற்று உணவு கொளும் பொன் தொடி நல்லார் - தமது இன்பத்தைப் பிறர்க்கு விற்று உண்டு பிழைக்கும் பொன்வளையலணிந்த பொதுமகளிர், கற்பு இல் மகளின் நனி நல்லர் - கற்பிலாத பெண்களினும் மிகவும் சிறந்தவர்களாவர்; (ஏனெனில்) தம் கேள்வர்க்கும் - தம்மேல் அன்புடைய கணவர்களுக்கும், ஏதிலர்க்கும் - பிறருக்கும், தங்கட்கும் - தங்களுக்கும், தம் கிளைஞர் யாவர்க்கும் - தம் சுற்றத்தார் அனைவருக்கும், கேடு சூழார் - கேடு செய்ய நினையார்.

(க - து.) கற்பிலாப் பெண்களினும் பொதுமகளிர் நல்லவர்.

பொதுமகளிர் தம் கணவர்கட்கும், பிறர்க்கும், தங்கள் சுற்றத்தாருக்கும் கேடு நினையார் ஆதலால் அன்னார் கற்பிலாப் பெண்களினும் மேல் என்றபடியால் கற்பிலாப் பெண்களால் இத்தனை கேடுகளும் வரும் என்பது சொல்லாமலே விளங்குமன்றோ?

பொற்றொடி - அன்மொழித் தொகை. தொடி - தொழிலாகு பெயர்; தொடு பகுதி. நனி - உரிச்சொல். கேள்வர்க்குக் கேடு சூழ்தல் - மனைவி வியபிசாரியானதால் கணவன்புகழ் கெட்டு உலகம் அவனை இகழ்ச்சி செய்ய ஏற்படுதல். பிறர்க்குக் கேடு சூழ்தல் - பிறரையும் புணர்ந்து அவர்களிடம் காட்டும் ஆசையால் அவர்களைத் தம் பொய்யாசை வலையிற்கட்டி அதனால் அவர்கள் அவளை மகிழ்விக்க, பகை, பாவம், பழிக்கு அஞ்சாது, நம் ஆசிரியர் 79-ம் செய்யுளில் கூறியபடி, "காமங்கதுவப்பட்டார்' செய்யும் தீச் செயல்களெல்லாஞ் செய்து பெரும்பாவிகளாக்குதல். கிளைஞர் கேடு சூழ்தல் - தான் வியபிசாரியானதால் தன் குலத்துக்கு ஈனம் ஏற்பட, தனக்கு நெருங்கிய சுற்றத்தார் தன் செயலுக்குத் தன்னைக் கோபிக்க, கோபத்தால் தான் அவர்களுக்கு கேடு நினைத்தல் முதலியன. இவ்வாறு கற்பிலா மங்கைய

## துறவிகளுணவு

துயிற்சுவையும் தூநல்லார் தோட்சுவையுமெல்லாம்
அயிற்சுவையி னாருவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணுக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துணு மொய்ம்பி னவர்.

(இ - ள்.) பிறர் சிலர்போல் - வேறு சிலர்போல, மொத்துணு மொய்ம்பினவர் - ஐம்புல வின்பங்களால் அடிபடாத தவ வலிமை யுடையோர், துயில் சுவையும் - நித்திரையி னின்பத்தையும், தூநல்லார் தோள் சுவையும் - அழகிய பெண்க ளது தோளைத் தழுவு மின்பத்தையும், எல்லாம் - மற்றுமுள்ள எல்லா இன்பத்தையும், அயில் சுவை இன் - உண்டியினாலுண்டாகும் இன்பத்தால், ஆருவ என்று எண்ணி - வருவன என்று நினைத்து, அயில் சுவையும் - உண்டி கொள்ளுதலையும், பித்து உணுக்கொள்ப போல் கொள்ப - பித்தன் உணவு கொள்வதுபோல மிகச் சிறுகவே உண்பார்கள்.

(க - து.) துறவிகள் உண்டி பெருகினால் சிற்றின்ப எண்ணங் கள் மனத்திலெழுமென்று மிகவும் குறைவாகவே உண்பார்கள்.

பித்தன் பசிக்கும்போதும் சிறிது உணவே கொள்வான். அது போல் துறவிகள் பசிநிமித்தம் சிறிது உணவே கொள்வார்கள். அயில் - முதனிலைத் தொழிலாகுபெயர். பித்து - பண்பாகு பெயராய்ப் பித்தனை உணர்த்திற்று. மொத்துணு - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மொத்துண் - பகுதி. உணு - உணவு என்பதன் மரூஉ; தொழிலாகுபெயர். (அசு)

## துறவிகளுடம்போம்பாமை

அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்—புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றும்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

கேள்வர்க்கு மேதிலார்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார்.

(இ - ள்.) நலம் விற்று உணவு கொளும் பொன் தொடி நல்லார் - தமது இன்பத்தைப் பிறர்க்கு விற்று உண்டு பிழைக்கும் பொன்வளையலணிந்த பொதுமகளிர், கற்பு இல் மகளின் நனி நல்லர் - கற்பிலாத பெண்களினும் மிகவும் சிறந்தவர்களாவர்; (ஏனெனில்) தம் கேள்வர்க்கும் - தம்மேல் அன்புடைய கணவர்களுக்கும், ஏதிலர்க்கும் - பிறருக்கும், தங்கட்கும் - தங்களுக்கும், தம் கிளைஞர் யாவர்க்கும் - தம் சுற்றத்தார் அனைவருக்கும், கேடு சூழார் - கேடு செய்ய நினையார்.

(க - து.) கற்பிலாப் பெண்களினும் பொதுமகளிர் நல்லவர்.

பொதுமகளிர் தம் கணவர்கட்கும், பிறர்க்கும், தங்கள் சுற்றத்தாருக்கும் கேடு நினையார் ஆதலால் அன்னார் கற்பிலாப் பெண்களினும் மேல் என்றபடியால் கற்பிலாப் பெண்களால் இத்தனை கேடுகளும் வரும் என்பது சொல்லாமலே விளங்குமன்றோ?

பொற்றொடி - அன்மொழித் தொகை. தொடி - தொழிலாகு பெயர்; தொடு பகுதி. நனி - உரிச்சொல். கேள்வர்க்குக் கேடு சூழ்தல் - மனைவி வியபிசாரியானதால் கணவன்புகழ் கெட்டு உலகம் அவனை இகழ்ச்சி செய்ய ஏற்படுதல். பிறர்க்குக் கேடு சூழ்தல் - பிறரையும் புணர்ந்து அவர்களிடம் காட்டும் ஆசையால் அவர்களைத் தம் பொய்யாசை வலையிற்கட்டி அதனால் அவர்கள் அவளை மகிழ்விக்க, பகை, பாவம், பழிக்கு அஞ்சாது, நம் ஆசிரியர் 79-ம் செய்யுளில் கூறியபடி, "காமங்கதுவப்பட்டார்' செய்யும் தீச் செயல்களெலாஞ் செய்து பெரும்பாவிகளாக்குதல். கிளைஞர் கேடு சூழ்தல் - தான் வியபிசாரியானதால் தன் குலத்துக்கு ஈனம் ஏற்பட, தனக்கு நெருங்கிய சுற்றத்தார் தன் செயலுக்குத் தன்னைக் கோபிக்க, கோபத்தால் தான் அவர்களுக்கு கேடு நினைத்தல் முதலியன. இவ்வாறு கற்பிலா மங்கைய

துறவிகளுணவு

துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையுமெல்லாம்
அயிற்சுவையி னாகுவவென் றெண்ணி—அயிற்சுவையும்
பித்துணாக் கொள்பபோற் கொள்ப பிறர் சிலர்போல்
மொத்துணா மொய்ம்பி னவர்.

(இ - ள்.) பிறர் சிலர்போல் - வேறு சிலர்போல, மொத்துணா மொய்ம்பினவர் - ஐம்புல வின்பங்களால் அடிபடாத தவ வலிமை யுடையோர், துயில் சுவையும் - நித்திரையி னின்பத்தையும், தூநல்லார் தோள் சுவையும் - அழகிய பெண்க ளது தோளைத் தழுவு மின்பத்தையும், எல்லாம் - மற்றுமுள்ள எல்லா இன்பத்தையும், அயில் சுவை இன் - உண்டியினாலுண்டாகும் இன்பத்தால், ஆகுவ என்று எண்ணி - வருவன என்று நினைத்து, அயில் சுவையும் - உண்டி கொள்ளுதலையும், பித்து உணாகொள்ப போல் கொள்ப - பித்தன் உணவு கொள்வதுபோல மிகச் சிறுகவே உண்பார்கள்.

(க - து.) துறவிகள் உண்டி பெருகினால் சிற்றின்ப எண்ணங் கள் மனத்திலெழுமென்று மிகவும் குறைவாகவே உண்பார்கள்.

பித்தன் பசிக்கும்போதும் சிறிது உணவே கொள்வான். அது போல் துறவிகள் பசி நிமித்தம் சிறிது உணவே கொள்வார்கள். அயில் - முதனிலைத் தொழிலாகுபெயர். பித்து - பண்பாகு பெயராய்ப் பித்தனை உணர்த்திற்று. மொத்துணா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மொத்துண் - பகுதி. உணா - உணவு என்பதன் மரூஉ; தொழிலாகுபெயர். (அசு)

துறவிகளுடம்போம்பாமை

அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார்—புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

(இ - ள்.) போதத்தால் தாம் வேய்ந்த - ஞானத்தால் தாம் வேய்ந்த, புக்கில் - மோட்ச வீட்டிலே, குடிபுகுதுவார் - குடி புகுதற்குச் சித்தமாயிருப்பவர்கள், புன்புலால் பொய்க்குடில் ஓம்பு வரோ - முடைநாறும் ஊன் பொதிந்த பொய்க் குடிசையாகிய தம்முடம்பைப் பாதுகாப்பாரோ? (காவார்); (காவாதொழிவதால்) அன்பொடு அருள் உடையர் எனும் - அன்பும் அருளுமுடையவ ராயினும், உயிர்நிலை - உயிர்க்கு நிலைக்களமாகிய தம் முடல் (உண வில்லாமையால் மெலிந்து), என்பு இயக்கம் கண்டும் - எலும்புகள் தோன்றுவதைக் கண்டபோதுங்கூட, புறந்தரார் - (அவ்வு னுடம்பைப்) பாதுகாவார்.

(க - து.) பேரின்ப வீடாகிய மோட்சம் விரும்புகிறவர்கள் சிற்றின்ப வீடாகிய உடம்பைப் பேணார்.

ஒடு - பாட்டின் இசை நன்கமைய வேண்டிவந்த இடைச் சொல். நிலை - வினையடியாகப் பிறந்த பகுபதப் பொருட் பெயர். புக்கில் - உரிய வீடு. புகுதுவார் - புகு பகுதி, து சாரியை. புறந்தரார் - புறந்தா பகுதி. (அஎ)

## சிற்றினம் விரும்பாமை

*சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்*
*மற்றின்பம் யாவையுங் கைவிடப—முற்றுந்தாம்*
*பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ*
*பாரின்பப் பாழ்ங்கும்பி யில்.*

(இ - ள்.) சிற்றின்பம் சில் நீரது ஆயினும் - சிற்றின்பம் சிறுமையுடையதாயினும், அஃது உற்றார் - அவ்வின்பத்திற் காளானோர், மற்று இன்பம் யாவையும் கைவிடுப - மற்ற எல்லா இன்பங்களையுங் கைவிடுவார்கள், பேரின்பம் மா கடல் - பேரின்ப மென்னும் பெரிய கடலிலே, முற்றும் ஆடுவார் தாம் - எப்போதும் முழுகுவார்கள், பார் இன்பப் பாழ் கும்பியில் வீழ்பவோ - உலக வின்பமாகிய நரகத்தில் வீழ்வரோ? (வீழார்).

உலகினர் ஒரு கணமேனும் தம் மனம், வாக்கு, காயங்களை நல் வழியிற் பயன்படுத்தாராகையால், ' இரவு பகல் பாழுக்கிறைப்ப ' எனவும், அவ்விதம் பாழுக்கிறைப்போரை அறிஞர் நன்னெறிக்குத் திருப்ப முயன்றால், அப்போது அவர்கள் மனம் நன்னெறியை விரும்பாதாகையால் அவர்கள் விருப்பத்திற்கு மாறாகச் செய்யும் செய்கைக்கு அவர்கள் 'பதறிக் குலைகுலைப' எனவுங் கூறினர்.

பரபரப்பு, குலைகுலை - இரட்டைக்கிளவி. நூக்கில் - எதிர் கால வினையெச்சம். நல்லாற்றின் ஊக்கில் என்று பிரித்து ஊக்கு தல் - உற்சாகப்படுத்தல் என்க.

ஒப்பு நோக்குக.

வீழ்நாள் படாமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். —திருக்குறள் (௩௦)

தவம்

இளைய முதுதவ மாற்றுது நோற்றென்
றுளைவின்று கண்பாடு மூழே—விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேற் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம்.

(இ - ள்.) விளிவு - இறத்தல், இன்று - இன்ன காலத்தி லென, வாழ்நாள் - (ஒருவர்) தாம் வாழுகின்ற தம் ஆயுள் நாளின், வரம்பு உடைமை - முடிவை, காண்பரேல் - அறிவராஞல், இளை யம் - (நாம் இப்போது) இளமையாயிருக்கிறோம், முது - முதுமை யில், நோற்று - வருந்தி, தவம் ஆற்றுதும் என்று - தவம் செய் வோம் என்று, உளைவு இன்று - வருத்தமில்லாமல், கண்பாடும் - உறங்கிக் கிடப்பதும், ஊழே - ஒருகால் முறையேயாகலாம், காண் பாரும் - தமது ஆயுள் நாள் முடிவைக் காணுந் துறவியரும், தாழாமே - கணப் பொழுதாயினுந் தாமதியாமல், தவம் நோற் பார் - தவஞ் செய்வார்.

(க - து.) இறக்கு நாள் என்றென்று யார்க்குந் தெரியா தாகையால் இக்கணமே தவஞ் செய்தல் மக்கள் கடன்.

(இ - ள்.) போதத்தால் தாம் வேய்ந்த - ஞானத்தால் தாம் வேய்ந்த, புக்கில் - மோட்ச வீட்டிலே, குடிபுகுதுவார் - குடி புகுதற்குச் சித்தமாயிருப்பவர்கள், புன்புலால் பொய்க்குடில் ஓம்புவரோ - முடைநாறும் ஊன் பொதிந்த பொய்க் குடிசையாகிய தம்முடம்பைப் பாதுகாப்பாரோ? (காவார்); (காவாதொழிவதால்) அன்பொடு அருள் உடையர் எனும் - அன்பும் அருளுமுடையவராயினும், உயிர்நிலை - உயிர்க்கு நிலைக்களமாகிய தம் முடல் (உணவில்லாமையால் மெலிந்து), என்பு இயக்கம் கண்டும் - எலும்புகள் தோன்றுவதைக் கண்டபோதுங்கூட, புறந்தரார் - (அவ்வூனுடம்பைப்) பாதுகாவார்.

(க - து.) பேரின்ப வீடாகிய மோட்சம் விரும்புகிறவர்கள் சிற்றின்ப வீடாகிய உடம்பைப் பேணார்.

ஒடு - பாட்டின் இசை நன்கமைய வேண்டிவந்த இடைச் சொல். நிலை - வினையடியாகப் பிறந்த பகுபதப் பொருட் பெயர். புக்கில் - உரிய வீடு. புகுதுவார் - புகு பகுதி, து சாரியை. புறந்தரார் - புறந்தா பகுதி. (அஎ)

சிற்றினம் விரும்பாமை

சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடப—முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில்.

(இ - ள்.) சிற்றின்பம் சில் நீரது ஆயினும் - சிற்றின்பம் சிறுமையுடையதாயினும், அஃது உற்றார் - அவ்வின்பத்திற் காளானோர், மற்று இன்பம் யாவையும் கைவிடுப - மற்ற எல்லா இன்பங்களையுங் கைவிடுவார்கள், பேரின்பம் மா கடல் - பேரின்பமென்னும் பெரிய கடலிலே, முற்றும் ஆடுவார்தாம் - எப்போதும் முழுகுவார்கள், பார் இன்பப் பாழ் கும்பியில் வீழ்பவோ - உலகவின்பமாகிய நரகத்தில் வீழ்வரோ? (வீழார்).

உலகினர் ஒரு கணமேனும் தம் மனம், வாக்கு, காயங்களை நல் வழியிற் பயன்படுத்தாராகையால், ‘ இரவு பகல் பாழுக்கிறைப்ப ’ எனவும், அவ்விதம் பாழுக்கிறைப்போரை அறிஞர் நன்னெறிக்குத் திருப்ப முயன்றால், அப்போது அவர்கள் மனம் நன்னெறியை விரும்பாதாகையால் அவர்கள் விருப்பத்திற்கு மாறாகச் செய்யும் செய்கைக்கு அவர்கள் ‘பதறிக் குலைகுலைப’ எனவுங் கூறினர்.

பரபரப்பு, குலைகுலை - இரட்டைக்கிளவி. நூக்கில் - எதிர் கால வினையெச்சம். நல்லாற்றின் ஊக்கில் என்று பிரித்து ஊக்கு தல் - உற்சாகப்படுத்தல் என்க.

ஒப்பு நோக்குக.

வீழ்நாள் படாமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல். —திருக்குறள் (௩௦)

## தவம்

இளைய முதுதவ மாற்றுது நோற்றென்
றுளைவின்று கண்பாடு மூழே—விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேற் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம்.

(இ - ள்.) விளிவு - இறத்தல், இன்று - இன்ன காலத்தி லென, வாழ்நாள் - (ஒருவர்) தாம் வாழுகின்ற தம் ஆயுள் நாளின், வரம்பு உடைமை - முடிவை, காண்பரேல் - அறிவரானால், இளை யம் - (நாம் இப்போது) இளமையாயிருக்கிறோம், முது - முதுமை யில், நோற்று - வருந்தி, தவம் ஆற்றுதும் என்று - தவம் செய் வோம் என்று, உளைவு இன்று - வருத்தமில்லாமல், கண்பாடும் - உறங்கிக் கிடப்பதும், ஊழே - ஒருகால் முறையேயாகலாம், காண் பாரும் - தமது ஆயுள் நாள் முடிவைக் காணுந் துறவியரும், தாழாமே - கணப் பொழுதாயினுந் தாமதியாமல், தவம் நோற் பார் - தவஞ் செய்வார்.

(க - து.) இறக்கு நாள் என்றென்று யார்க்குந் தெரியா தாகையால் இக்கணமே தவஞ் செய்தல் மக்கள் கடன்.

வரம்பு - எல்லை, முடிபு. உளவு, விளைவு - வு விகுதி பெற்ற தொழிற் பெயர்கள். இளையம் - இளமை என்னும் பண்படியாய்ப் பிறந்த தன்மைப் பன்மை வினைமுற்று. தாழாமே - வினையெச்சம். ஆற்றுதும் - தும் விகுதி பெற்ற தன்மைப் பன்மை வினைமுற்று. நோற்று-நோல் என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையெச்சம்.()

## தவத்தியல்

நல்லவை செய்யத் தொடங்கினு நோனுமே
அல்லன வல்லவற்றிற் கொண்டுய்க்கும்—எல்லி
வியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல்.

(இ - ள்) எல்லி - இரவிலே, ஆறலைத்து உண்பார் - வழி பறிப்பவர்களாகிய திருடர்கள், வியல் நெறி செல்வாரை - மக்கள் போக்குவரத்துடைய பெரு வழியிற் செல்லும் வழிப்போக்கர்களை, செலவு - (அந்நெறியில்) செல்வதை, பிழைத்து - தப்புவித்து, உய்ப்ப போல் - மக்கள் நடமாட்டமில்லாத தனிவழியில் கொண்டு செல்லுதல் போல, நல்லன செய்யத் தொடங்கினும் - நற்காரியங் களைச் செய்யத் தொடங்கினுலும், அல்லன - தீயூழானது, நோனுமே (அது) பொறுமல், அல்லவற்றில் - தீய காரியங்களில், கொண்டு உய்க்கும் - கொண்டு போய்விடும்.

(க - து.) நற்காரியங்களைச் செய்ய நினைத்தாலும் ஊழ்வினை மாறுயின் அவை தீய காரியங்களாகவே முடியும்.

'ஊழ்வலிது' என்பது இங்கு நோக்கற்பாலது. நோனுமே- எதிர்மறை வினையெச்சம். ஆ - எதிர்மறை யிடை நிலை, மே - விகுதி. எல்லி - ஏழாம் வேற்றுமைத் தொகை. வியனெறி என் பதை வியன் நெறி என்றும் பிரிக்கலாம். செலவு - வழி.

ஒப்பு நோக்குக.

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கோள் வது.

லும் இறைவன் தண்டலா கொடிதாதலின் 'அங்கங் குலைவ தறிவு' என்றார்.

மதியிலிகாள் - எட்டாம் வேற்றுமை. மகிழன்மின் - எதிர் மறை ஏவற் பன்மை வினைமுற்று. வஞ்சித்த - இறந்தகாலப் பல வின்பால் வினையாலணையும் பெயர். கொல் - அசைச் சொல். மதியாவது நூலுணர்வு கொண்டு பொருளை மதிப்பது.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும். —திருக்குறள். (கஉ)

## பழிமொழிபரத்தல்

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்குங்—கழிமுடைப்
புன்புலா ஞற்றம் புறம்பொதிந்து மூடினுஞ்
சென் றுதைக்குஞ் சேயார் முகத்து.

(இ - ள்.) புன்புலால் கழிமுடை நாற்றம் - இழிவான இறைச்சியின் மிகுந்த கெட்ட நாற்றமானது, புறம் பொதிந்து மூடினும் - (அவ்விறைச்சியை) ஒன்றிற் போட்டுப் பொதிந்து மூடி வைத்தாலும், சேயார் முகத்து சென்றுதைக்கும் - வெகுதூரத்தி லிருப்பவர்களுடைய முகத்திலும் போய்த் தாக்கும்; (அதுபோல) மறைவழிப்பட்ட பழி - இரகசியத்தில் நடந்த பழிச் செயல்கள், தெய்வம் பறை அறைந்தது என - இறைவன் பறைகொட்டி வெளிப்படுத்தினாற்போல், ஓடிப் பரக்கும் - விரைந்து சென்று எங்கும் பரந்துவிடும்.

(க - து.) இரகசியத்தில் நடந்திருப்பினும் பழிச் செயல் கள் சீக்கிரம் வெளிப்படும்.

மறை - முதனிலைத் தொழிற் பெயர்; இவண் இடம் உணர்த் தலால் தொழிலாகு பெயர். பழி - முதனிலைத் தொழிலாகு பெயர். சேயார் - சேய்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். சென்று தைக்கும் என்பதைச் சென்று உதைக்கும் என்றும் பிரிக்கலாம்.

வரம்பு - எல்லை, முடிபு. உளவு, விளவு - வு விகுதி பெற்ற தொழிற் பெயர்கள். இளையம் - இளமை என்னும் பண்படியாய்ப் பிறந்த தன்மைப் பன்மை வினைமுற்று. தாழாமே - வினையெச்சம். ஆற்றுதும் - தும் விகுதி பெற்ற தன்மைப் பன்மை வினைமுற்று. நோற்று-நோல் என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையெச்சம்.()

## தவத்தியல்

நல்லவை செய்யத் தொடங்கினு நோனுமே
அல்லன வல்லவற்றிற் கொண்டுய்க்கும்—எல்லி
வியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல்.

(இ - ள்) எல்லி - இரவிலே, ஆறலைத்து உண்பார் - வழி பறிப்பவர்களாகிய திருடர்கள், வியல் நெறி செல்வாரை - மக்கள் போக்குவரத்துடைய பெரு வழியிற் செல்லும் வழிப்போக்கர்களை, செலவு - (அந்நெறியில்) செல்வதை, பிழைத்து - தப்புவித்து, உய்ப்ப போல் - மக்கள் நடமாட்டமில்லாத தனிவழியில் கொண்டு செல்லுதல் போல, நல்லன செய்யத் தொடங்கினும் - நற்காரியங்களைச் செய்யத் தொடங்கினாலும், அல்லன - தீயூழானது, நோனுமே (அது) பொறாமல், அல்லவற்றில் - தீய காரியங்களில், கொண்டு உய்க்கும் - கொண்டு போய்விடும்.

(க - து.) நற்காரியங்களைச் செய்ய நினைத்தாலும் ஊழ்வினை மாறாயின் அவை தீய காரியங்களாகவே முடியும்.

'ஊழ்வலிது' என்பது இங்கு நோக்கற்பாலது. நோனுமே- எதிர்மறை வினையெச்சம். ஆ - எதிர்மறை யிடை நிலை, மே - விகுதி. எல்லி - ஏழாம் வேற்றுமைத் தொகை. வியனெறி என்பதை வியன் நெறி என்றும் பிரிக்கலாம். செலவு - வழி.

ஒப்பு நோக்குக.

தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கோள் வது.

லும் இறைவன் தண்டனை கொடுத்தலின் 'அங்கங் குலைவ தறிவு' என்றார்.

மதியிலிகாள் - எட்டாம் வேற்றுமை. மகிழன்மின் - எதிர் மறை ஏவற் பன்மை வினைமுற்று. வஞ்சித்து - இறந்தகாலப் பல வின்பால் வினையாலணையும் பெயர். கொல் - அசைச் சொல். மதியாவது நூலுணர்வு கொண்டு பொருளை மதிப்பது.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும். —திருக்குறள். (கஅ)

## பழிமொழிபரத்தல்

மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்கும்—கழிமுடைப்
புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினுஞ்
சென் றுதைக்குஞ் சேயார் முகத்து.

(இ - ள்.) புன்புலால் கழிமுடை நாற்றம் - இழிவான இறைச்சியின் மிகுந்த கெட்ட நாற்றமானது, புறம் பொதிந்து மூடினும் - (அவ்விறைச்சியை) ஒன்றிற் போட்டுப் பொதிந்து மூடி வைத்தாலும், சேயார் முகத்து சென்றுதைக்கும் - வெகுதூரத்தி லிருப்பவர்களுடைய முகத்திலும் போய்த் தாக்கும்; (அதுபோல) மறைவழிப்பட்ட பழி - இரகசியத்தில் நடந்த பழிச் செயல்கள், தெய்வம் பறை அறைந்தது என - இறைவன் பறைகொட்டி வெளிப்படுத்தினாற்போல், ஓடிப் பரக்கும் - விரைந்து சென்று எங்கும் பரந்துவிடும்.

(க - து.) இரகசியத்தில் நடந்திருப்பினும் பழிச் செயல் கள் சீக்கிரம் வெளிப்படும்.

மறை - முதனிலைத் தொழிற் பெயர்; இவண் இடம் உணர்த் தலால் தொழிலாகு பெயர். பழி - முதனிலைத் தொழிலாகு பெயர். சேயார் - சேய்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். சென்று தைக்கும் என்பதைச் சென்று உதைக்கும் என்றும் பிரிக்கலாம்.

"ஆர்த்த மங்கையர் சோர்வினிற் செய்பழி
வார்த்தை யெங்கணும் வல்லையிற் செல்லல்போல்" என்பது
—கந்தபுராணம் (கூ௫)

## மேலோர் செயல்

மெலியார் விழினு மொருவாற்ற னுய்ப
வலியார்மற் றொன்றானு முய்யார்—நிலைதப
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமா னுய்யா பிற.

(இ - ள்.) நிலைதப - நிலைதப்பி, நொய்ய சழக்கென வீழாவாம் - கனமில்லாத பொருள்கள் விரைவில் விழமாட்டா, வீழினும் - ஒருவேளை விழுந்தாலும், உய்யும் - பிழைக்கும், பிற உய்யா - கனமான பொருள்கள் நிலைகெட்டு விழுந்தால் பிழைக்க மாட்டா; (அதுபோல) மெலியார் விழினும் - சிறியோர் தம் நிலையினின்று தவறினும், ஒரு ஆற்றான் - ஒரு வழியாக, உய்ப - பிழைத்துக்கொள்வர், வலியோர் - பெரியோர், (தம் நிலை தவறினால்) மற்று ஒன்றானும் - வேறு எந்த வகையாலும், உய்யார் - பிழைத்தல் முடியா.

(க - து.) மேனிலையிலுள்ளார் அந்நிலை தவறின் பின் ஒரு வழியானும் உய்தலரிது.

மெலியார் வலியார் என்றது முறையே இல்லறத்தாரையும் துறவிகளையும். அற்பமானவை விழமாட்டா; விழுந்தாலும் பிழைத்துக் கொள்ளும்; கனமானவை விழுந்தால் பிழைத்தலரிது. அதுபோல் சிறியர் நிலைதவறின் அவரே அற்பராகையால் அவர் நிலை தவறினதை உலகம் நன்கறியாது. பெரியரோவெனின் தந் நிலை கெட்டால் உலகெலாம் அது பரவும். பின் அவர்கள் பெருமை யடைதல் அரிது.

'ஆடு படுத்தால் எழுந்திருக்கும், ஆனை படுத்தால் எழுந் திருக்குமா?' என்னும் பழமொழி இங்குக் கவனிக்கத்தக்கது.

விழினும் - எதிர்கால வினையெச்சம்; விழு - பகுதி; உம் எதிர்மறை உம்மை; இழிவு சிறப்புமாகும். உய்ப - பலர்பால் எதிர்கால வினைமுற்று. தப - செய என்னும் வாய்பாட்டு எச்சம். நொய்ய - அஃறிணைக் குறிப்புப் பெயர். சழக்கென - உரிச் சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம்; சழக்கென்பது பகுதி 'நிலை தப்பி' என்றும் பாடம்,

தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. —திருவள்ளுவர் (கூ

இசையாத போலினு மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லாற்—பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யொப்பவே
ஊனோம்பி யூன்றின் பவர்.

(இ - ள்.) மேலையோர் செய்கை - பெரியோர் செய்கை, இசையாதபோலினும் - (சில சமயங்களில்) பிறர் கொள்கைக்குப் பொருத்தமற்றதா யிருந்தாலும், மற்றையோர்க்கு அல்லால் - சிறியோர்க்கன்றி (அவர்போன்ற பெரியோர்க்கு), வசைஆகா - குற்றமாகாது, பசுவேட்டு - (உலகின் நலங்கருதி) பசுவைக் கொன்று, தீ ஓம்பி - முத்தீ வேள்விசெய்து, வான் வழக்கம் காண்பாரை - மழை பெய்தலைச் செய்யு மந்தணரை, ஊன் ஓம்பி - (தமது) உடம்பைப் பாதுகாக்க வேண்டி, ஊன் தின்பவர் - (வேறோர் உயிரின்) இறைச்சியைத் தின்பவர்கள், ஒப்பவோ - ஒப்பாவாரோ? (ஆகார்.)

(க - து.) பெரியோர் சில சமயங்களில் பிறர் பழிக்கும் தீச் செயல்கள் புரிந்தாலும் அவற்றாலும் நன்மையே பிறக்குமாகையால் அவை பழிக்கப்படா.

பசுவைக் கொன்று முத்தீ வேள்வி நடத்தலில் உயிர்க்கொலை அறமன்றெனப் பிறர்க்குத் தோன்றுமெனினும், அவ் வேள்வியால் அந்தணர் மழை பெய்யச் செய்து உலகு பிழைக்கச் செய்வர்.

ஆனால், தம் உடல் செழிக்கப் பிறிதோர் உயிரின் மாமிசத்தினைத் தின்பார் செய்கை நலமாகுமா? ஆகாது. அந்தணர் உயிர்க்கொலை செய்தும் உலகு பிழைக்கும் வழி செய்வர்; ஊன் தின்பார் உயிர்க் கொலை செய்தல் தமக்கன்றிப் பிறர்க்குப் பயனுளதோ? ஆதலால் "மேலையோர் செய்கை இசையாதபோலினும் வசையாகா" தென்றார்.

முத்தீ - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினியம். வேட்டு - இறந்தகால வினையெச்சம்; வேள் - பகுதி; த் இடைநிலை; ள், த் இரண்டும் 'ட' கரமாகத் திரிதல் சந்தி; உ - விகுதி. ஓம்பி - செயவெனெச்சத் திரிபு. வான் - மழைக்காகலின் இருமடியாகுபெயர். பசு - யாகத்துக்குரிய உயிர்களுக்குப் பொதுப் பெயர். வழக்கம் - தொழிற்பெயர். மேலையோர் - முனிவர்.

யானைமதப் பட்டா லலங்கார மாஞ்சிறுநாய்
தானு மதப்பட்டாற் சரியாமோ—ஞானி
தடைமீறி னாலுஞ் சரியாகுங் கன்மி
நடைமீறி லாகாது காண். —ஒழிவிலொடுக்கம்

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙன மாளு மருள்" —திருவள்ளுவர். (௬௭)

## ஞானி செயல்

எவரெவ ரெத்திறத்த ரத்திறத்த ராய்நின்
றவரவர்க் காவன கூறி—எவரெவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தென.

(இ - ள்.) தம் உடையான் எப்பாலும் நிற்பது என - தம்மையாளுடைய இறைவன் சேர்ந்தும் சேராமலும் எங்கெங்கும் நிறைந்து நிற்பது போல், எம் உடையார் - எம்மை ஆளுந் தன்மையுடைய பெரியோர், எவர் எவர்க்கும் உப்பாலாய் - யாவர்க்கும் புறத்தராய், எவர் எவர் எ திறத்தர் - யார் யார் எத்தன்மையராய்

இருப்பரோ, அவர் அவர்க்கு அ திறத்தராய் நின்று - அவரவர் தன்மைக் கேற்பத் தாமும் நின்று, ஆவன கூறி - அவர்கள் செய்ய வேண்டிய நற்காரியங்களை அவர்க்கெடுத்துச் சொல்லி, நிற்ப - தாம் யாதிலும் பற்றின்றி நிற்பார்கள்.

(க - ரு.) உலகப் பற்றற்ற துறவிகள் உலகத்தார்க்கு நல்வழி போதிக்கினும் தாம் உலகப்பற்றின்றி ஒதுங்கியே நிற்பர்.

எவர் எவர் எத்தன்மையுடையவரோ அத்தன்மையின்படியே நின்று அவரவர்க்கு அறிவு கூறுவதால், 'எவரெவரெத்திறத்த ரத்திறத்தராய் நின்று' என்றார். தாம் அவர்க்கு உலகநீதிகளைப் போதிக்கினும் தாம் உலகோடு ஒட்டாது நிற்றலின் 'எவரெவர்க்கும் உப்பாலாய்' என்றார்.

திறம் - வகை; அவை மந்தம் தீவிரம் தீவிரதரம். உப்பால், எப்பால் - சுட்டிடைச் சொல். பால் - குணவாகு பெயர். (௯௮)

## மெய்யுணர்ந்தார்

மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணுப் புலங்காப்பார்—மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாண நீள்கதவாச்
சேர்ப்பர் நிறைத்தாழ் செறித்து.

(இ - ள்.) மெய் உணர்ந்தார் - உண்மைப் பொருள்களை உணர்ந்தவர்கள், பொய்மேல் புலம் போக்கார் - பொய்ப் பொருள்களின் மேல் தம் புலன்களைச் செல்லவிடாது, மெய் உணர்ச்சி - மெய்யறிவு கைவருதல் கண் ஆ - தமக்குக் கைகூட வேண்டுமென்பதே கருத்தாக, புலம் காப்பார் - ஐம்புலன்களையுங் காப்பார், மெய்யுணர்ந்தார் - அம்மெய்யறிவாளர், காப்பே நிலை ஆ - ஐம்புலன்களைக் காத்தலே நிலையாகவும், பழி நாணம் ஏ நீள் கதவு ஆ - பழிச்சொற்களுக்கு நாணுதலே நீண்ட கதவுகளாகவும், நிறை - நிறையாகிய, தாழ் - தாழ்போட்டு, செறித்துச் சேர்ப்பர் - (தம் புலன்களை) இறுக்கியடக்குவர்.

(க - து.) உண்மைப் பொருள்களையுணர்ந்த பெரியோர் ஐம்புலன்களையுமடக்கி மெய்யறிவு சித்திக்கும் வழியில் நிற்பர்.

நிறை - மனத்தை அதன் வழியில் விடாது நிறுத்தல். மெய் - தானியாகு பெயர். மெய்யுணர்ச்சியாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும் ஐயந்திரிபின்றி யறிதல். போக்கார் - முற்றெச்சம். கண்ணு நிலையா கதவா என்பவற்றின் ஈற்றுக் ககரம் தொக்கன. இச்செய்யுள் இயைபுருவகம்.

ஒப்பு நோக்குக.

> சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
> வகைதெரிவான் கட்டே யுலகு. —திருக்குறள் (௨௭)

## பேரின்பம்

> கற்றுத் துறைபோய காதலர்க்குக் கற்பினாள்
> பெற்றுக் கொடுத்த தலைமகன்போல்—முற்றத்
> துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்பம்
> இறந்தவெலாந் துன்பமலா தில்.

(இ - ள்.) கற்று துறைபோய காதலற்கு - கற்கவேண்டிய நூல்களெல்லாங் கற்றுக் கற்றதற்குத் தக நிற்கும் கணவனுக்கு, கற்பினாள் - கற்புள்ள மனைவி, பெற்றுக்கொடுத்த தலைமகன்போல் - பெற்றுக்கொடுத்த முதல் மகனைப் போல், முற்ற துறந்தார்க்கு - இருவகைப் பற்றினையும் அறவேயொழித்த துறவிகட்கு, மெய் உணர்வில் தோன்றுவதே இன்பம் - அவர்களின் மெய்யுணர்வில் தோன்றுகிற இன்பமே மிகுந்த இன்பமாகும், இறந்த எலாம் துன்பம் அலாது இல் - அது ஒழிந்த எல்லாம் (அவர்கட்குத்) துன்பமன்றி வேறில்லை.

(க - து.) முற்றுந்துறந்த முனிவர்கட்கு அவர்கள் மெய்யுணர்விற் றோன்றுமின்பமே யின்பம்.

கற்றறிவுடையோர் தென்புலத்தார் கடன் செய்தல் பொருட்டே இல்வாழ்க்கை நடத்துதலாலும் அக்கடன் செய்வது

தலைமகனானதாலும் 'கற்பினாள் பெற்றுக் கொடுத்த தலைமகன்' மிகவும் மதிக்கப்படுகிறான்.

துறை - துறு - பகுதி, ஐ - செயப்படு பொருண்மை விகுதி; நீர்க்கரையின் பெயர்; இங்கு வகை. இறந்தவெலாம் - இறந்தவாகிய எல்லாம்; பண்புத்தொகை. இருவகைப்பற்று - அகப்பற்று, புறப்பற்று. 'இறந்தவெலாந் துன்பமேயாம்' என்றும் பாடம்.

நீணெறிச்சென்றார்

கற்றாங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மன[ந்தி]ருத்திப்—பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார்.

(இ - ள்.) கற்று ஆங்கு அறிந்து - அறிவு நூல்களைக் கற்று அவற்றின் மெய்ப்பொருளை உணர்ந்து, அடங்கி - அவற்றிற்கேற்ப அடக்கமா[ய் இரு]ந்து ஒரீஇ - (அந்நூல்களில் விலக்கிய) தீய காரியங்க[ளை]க் கைவிட்டு, நன்று ஆற்றி - (அந்நூல்களில் விதித்த) நற்காரியங்களைச் செய்து, பெற்றது கொண்டு மனம் திருத்தி - கிடைத்ததைக் கொண்டு மனமகிழ்ச்சியடைந்து மனதை ஒருவழிப்படுத்தி, பற்றுவதே பற்றுவதே பற்றி - தாம் அடையவேண்டிய வீட்டுநெறியையும் அந்நெறிக்குரிய வழிகளையும் மனதிற் கொண்டு, பணி அற நின்று - சரியை முதலிய தொழில்கள் மாள சமாதி நிலையில் நின்று, ஒன்று உணர்ந்து - தனிப்பொருளாகிய இறைவனையறிந்து, நிற்பாரே - நிற்கின்ற அறிஞரே, நீள்நெறி சென்றார் - வீடடையும் வழியில் நின்றவராவர்.

(க - து.) அறிவு நூல்களைக் கற்று அதன்படி நடந்து மனதை ஒருவழிப்படுத்தித் தனிப்பொருளாகிய இறைவனை உணர்ந்து நிற்பாரே வீடடைவர்.

அறிவு நூல்களில் விலக்கிய தீய காரியங்களாவன:—காமம் கோபம், முதலியன; அவற்றின் கண் விதித்த நற்காரியங்க

ளாவன : கொல்லாமை, வாய்மை. ஒரீ இ - சொல்லிசையளபெடை.
பற்றுவது 1. வீட்டைப் பற்றும் நெறி. } வினையடிப் பகுபதப் பொருட் பெயர்.
பற்றுவது 2. அந்நெறியைப் பற்றும் முறை. }

சமாதி - யோகவுறுப்புக்களெட்டனுள் ஒன்று; முதற்பொருளொடு தான்அதுவென வேறாகாது நிற்றல். மற்றையுறுப்புக்கள் இயமம், நியமம், இருப்பு, பிராணயாமம், மனவொடுக்கம், தாரணை, தியானம்.

1. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக.

2. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து. —திருக்குறள் (௩௫௩).

முடிபொருள்

ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார்—தம்முள
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள்.

(இ - ள்.) அளந்து - மறை முடிவின் அளவைகளால் இறைவன், உயிர், இச்சை இவற்றின் தன்மைகளை அளவுசெய்து, ஐயம் திரிபு இன்று - அவற்றில் ஐயமும் விகற்பமுமில்லாமல், உத்தியில் தெளிந்து - கருத்தில் தெளிவாகி, மெய் உணர்ச்சி கண் விழிப்ப - மெய்யறிவாகிய கண் விழித்து, தூங்குவார் - ஞான நித்திரை செய்வார், தம் உள்ளே - தம் உள்ளத்தில், காண்பதே காட்சி - காணுங் காட்சி காட்சியாகும், கனவு - (அந்த ஞான நித்திரையிற் காணும்) கனவை, நனவாக - சாக்கிரமாக, பூண்பதே - அடைவதே, தீர்ந்த பொருள் - முடிந்த பயனும் (சித்தாந்தமாகும்).

(க - து.) மெய்யுணர்வு பெற்று இறைவனோடு ஒற்றுமை யுற இடைவிடாது அவனைத் துதிப்போர் அவனாகவே எல்லா வற்றையுங் காண்பர்.

ஐயமாவது - இறைவன் உளனோ, இலனோ என்னும் ஐயப்பாடு. திரிபு - அறிவுமயக்கம். நனவு - நினைவு, சாக்கிரம்; அவையாவன: பொறிகளில் காணும் தோற்றம், குறிகளால் யோசித்துணரும் முடிவு என்றிவையாகும். கனவு நனவாகப் பூண்பது - தியான நித்திரையிற் காணப்பட்ட இறைவனையன்றி வேறொன்றையும் மெய்ப்பொருளாகக் கொள்ளாதிருத்தல்.

மெய்யுணர்ச்சிக் கண் - அகக்கண்; மெய்யுணர்ச்சியாகிய கண், பண்புத்தொகை. இனி, மெய்யுணர்ச்சி - மதி முதலிய பொருள்களை யுள்ளவாறுணர்ந்த அறிவுமாம். இன்றி என்ற வினையெச்சம் செய்யுளில் இன்று என வந்தது. கண்விழிப்பத் தூங்குவார் என்பதற்குப் பரமான்மாவிடத்தில் விழிப்பும் இவ்வுலகப் பொருளில் நித்திரையு முடையவர் என்பதுமாம். (௧0உ)

நீதிநெறி விளக்கம் உரை

முற்றிற்று.

# செய்யுள் முதற்குறிப்பகராதி